**ஸ்ரீ குருப்யோ நம:**

## **முன்னுரை**

வேதாந்தத்தின் பிரபலமான ஐந்து சித்தி கிரந்தங்களான நைஷ்கர்ம சித்தி , சுவராஜ்ய சித்தி , பிரம்ம சித்தி, இஷ்ட சித்தி மற்றும் அத்வைத சித்தி ஆகியவைகளில் மிகவும் பிரசித்தி பெற்றதான **ஸ்ரீ கங்காதரேந்திர சரஸ்வதிகளின் சுவாராஜ்யசித்தி**, ஸ்ரீ சங்கராச்சாரியாரின் பிரம்ம சூத்திர பாஷ்யத்தின் தாத்பர்யத்தினை எளிமையாக விசாரிக்கும் இந்த கிரந்தம் அன்னாருடைய சமஸ்கிருத விளக்கத்துடன் சமஸ்கிருதம் அறியாதவர்களும் அதனை கற்றறியும் பொருட்டு **சித்திலஹரி - 2** எனும் இந்த விளக்கவுரையானது எழுதப்பட்டது.

இந்த கிரந்தம் வெளிவர உதவிய எல்லோருக்கும் இறைவனின் பரிபூர்ண ஆசிகள் உண்டாகட்டும். ஆஸ்த்திக அன்பர்கள் இதனை முறையாக படிக்க முயற்ச்சிக்க வேண்டும் என்று வேண்டுகின்றோம்.

**ரிஷிகேஷ்** **ஆசிரியர்**
**சித்திரா பௌர்ணமி**
**12-05-2006**

## ஸ்ரீ குருப்யோ நம:



**'திராவிடாசாரியார்'** என்று அறியப்படும் **ஸ்ரீ இராமகிருஷ்ணன் ஸ்வாமிஜி** அவர்கள் 1972 ம் ஆண்டு தமிழ்நாட்டில் திண்டுக்கலில் அவதரித்தார். ஸ்ரீ ஸ்வாமிஜீ வளர்ந்தது, படித்தது கணிப்பொறி நிறுவனத்தினை நடத்தியதும் சென்னையில் என்று இருந்த நிலையில் ஆன்மீக நாட்டத்தால் 1997 ம் ஆண்டு மார்ச் மாதம் இமாலயத்திற்க்கு வந்தார். அதன்பின்னர் வேறு எங்கும் செல்லாது முழு மூச்சாக யோகீஷ்வரரான **ஸ்ரீ சாந்தி தர்மானந்த சரஸ்வதி** ஸ்வாமிகளிடம் சமஸ்கிருத வியாகரணம், சாங்கியம், யோகம், நியாயம், வைசேஷிகம், பூர்வ மீமாம்ஸை, காஷ்மீர சைவ சித்தாந்தம் மற்றும் வேதாந்தத்தின் பிருகத் பிரஸ்தான த்ரயத்தையும் (சித்சுகி , அத்வைதசித்தி, கண்டனகண்டகாத்யம் ) , அன்னாரது சிஷ்யர் விரக்த சிரோமணி **ஸ்ரீ சர்வேஷானந்த சரஸ்வதி** ஸ்வாமிகளிடம் பிரஸ்தான த்ரயத்தையும் (பகவத் கீதை, உபநிஷத், பிரம்ம சூத்திரம்) கசடற கற்றார். ஸ்ரீ ஸ்வாமிஜீ பல மொழிகளில் தேர்ச்சி பெற்றவரும் ஆவார். கற்று தருவதில் எந்த நாட்டமும் இல்லாத ஸ்ரீ ஸ்வாமிஜீ குருவின் ஆணைக்கிணங்கி சாஸ்திரங்களை, தமிழ் நாட்டிலும் கூட முறையாக இல்லாத நிலையில், ரிஷிகேசத்தில் கிரமமாக தமிழில் போதிக்கின்றார். அதுமட்டுமல்லாது , எளிய தமிழில் எல்லா சாஸ்திரத்திற்க்கும் உண்டான அடிப்படையான நூலினை தெளிவாக விளக்கியருளியிருக்கிறார். குருந்தட்டிலும் படிப்பிக்கும் முறையில் பதிவாக்கி வெளியிட்டுள்ளார்.

## **ஸ்ரீ குருப்யோ நம:**

ஸ்ரீ ஸ்வாமிஜீ தமிழில் இயற்றிய நூல்கள் -

1. **வியாகரணம்** (இலக்கணம்) - ஸ்ரீ வரதராஜரின் லகுசித்தாந்த கௌமுதி லகுலஹரி விளக்கவுரையுடன்

2. **சாங்கியம்** - ஸ்ரீ ஈஷ்வர கிருஷ்ணரின் காரிகைகளும் கௌடபாத பாஷ்யமும், சாங்கிய லஹரி விளக்கவுரையுடன்

3. **யோகம்** - ஸ்ரீ பதஞ்சலி முனிவரின் சூத்திரங்களும் வியாச பாஷ்யமும் யோக லஹரி விளக்கவுரையுடன்

4. **தர்க்கம்** - ஸ்ரீ அன்னம்பட்டரின் தருக்க சங்கிரகமும் ஸ்ரீ சந்திரஜ சிங்கரின் பதகிருத்யமும், தர்க்க லஹரி விளக்கவுரையுடன்

5. **பூர்வமீமாம்ஸை** - ஸ்ரீ லௌகாக்ஷி பாஸ்கரரின் அர்த்த சங்கிரகம் அர்த்த லஹரி விளக்கவுரையுடன்

6. **சிவ பஞ்சாக்ஷரி பாஷ்யம்** - ஸ்ரீ சுரேஷ்வராச்சாரியாரின் பாஷ்யம்

7. **வேதாந்தம்**

- ஸ்ரீ சுரேஷ்வராசாரியாரின் நைஷ்கர்ம்யசித்தி சித்தி லஹரி உரையுடன்
- ஸ்ரீ கங்காதரேந்திர சரஸ்வதிகளின் சுவாராஜ்யசித்தி த்விதீய சித்தி லஹரி உரையுடன்
- ஸ்ரீ தர்மராஜ அத்வரீந்திரரின் வேதாந்த பரிபாஷை வேதாந்த லஹரி விளக்கத்துடன்.
- ஸ்ரீ சங்கராசாரியாரின் சாதனா பஞ்சகம் சாதனோபதேஷ லஹரி விளக்கத்துடன்.
- ஸ்ரீ சங்கராசாரியாரின் சாந்தோகிய உபநிஷத் பாஷ்யம் முதல் அத்யாயம்
.

**ஸ்ரீ குருப்யோ நம:**

**Swaarajyasiddhi with Siddhilahari – 2**

பதிப்பு - 2006

**கிடைக்குமிடம்**

**ஷாஸ்திர நேத்திராலயா**
நெ 1. ஆத்ம விஞ்ஞான பவன்
பாபா காளி கம்பளி
ராம் நகர்
பசுலோக் போஸ்ட்
ரிஷிகேஷ், இமயமலை

**Shasthra Nethralaya**
No 1. Atma Vigyana Bhavan
Baba Kali Kambli
Ram Nagar
Pasulok Post
Rishikesh, Himalayas

# स्वाराज्यसिद्धिः

## சுவராஜ்யசித்தி

प्रणम्य अपीतकुचाम्बा समेत अरुणाचलम्
स्वारज्यसिद्धीनां सरल तमिल् व्याख्या यदिदम् ।
सकलोऽधीयेतां तत्त्वं तत्त्वम्पदयोर्विचारणम्
समधीत्य प्राप्नुयात् तत्त्वं अद्वैतं अथातः परम् ॥

ஸ்ரீ அபீதகுசாம்பாளுடன் (உண்ணாமுலையுடன்) கூடிய அருணாசலரை நன்றாக வணங்கி சுவாராஜ்யசித்தி என்கின்ற நூலிற்கு சரளமான தமிழில் இந்த விளக்கவுரையை செய்கின்றேன். எல்லோரும் இதன் தத்துவத்தை இதில் செய்யப்பட்ட தத்(அது) மற்றும் த்வம்(நீ) ஆகிய பதங்களின் விசாரணையினை படிக்கட்டும். நன்றாக படித்து அவர்கள் அதற்கு பிறகு அந்த உயர்ந்த அத்வைத தத்துவத்தை அடையட்டும்.

गङ्गाधरेन्द्र यतिं नमस्कृत्य रामकृष्णेन मयाकृतम् ।
सिद्धिलहरी नामाख्यं द्वितीयं तु अद्वितीयं अद्वितीये ॥

**கங்காதரேந்திர சரஸ்வதி** என்கின்ற யதியை நமஸ்கரித்து **இராமகிருஷ்ணனான** என்னால் செய்யப்பட்டது (இயற்றப்பட்டது) . **சித்திலஹரி** (சித்தி அலை) என்கின்ற பெயருடைய இரண்டாம் புத்தகம். (முதல் புத்தகம் நைஷ்கர்ம்யசித்தி) இது இரண்டாவது என்றாலும் அத்வைத சாஸ்திரத்தில் இரண்டற்றதாகும்.

## अथ अध्यारोप प्रकरणम्

## அத்யாரோப பிரகரணம்

गङ्गापूरप्रचलितजटा स्रस्तभोगीन्द्रभीता
मलिङ्गन्तीमचलतनयाम् सस्मितम् वीक्षमाणः ।
लीलापाङ्गैः प्रणतजनताम् नन्दयन्स्चन्द्रमौलि
र्मोहध्वान्तम् हरतु परमानन्दमुर्तिःशिवो नः ॥ १ ॥

**'யஸ்ய தேவே பராபக்தி யதா தேவே ததா குரோ'** என்கின்ற கூற்றிக்கு ஏற்ப எவருக்கு தெய்வத்தினிடத்தில் மிகுந்த பக்தியிருக்கின்றதோ அதை போலவே அவருடைய குருவினிடத்திலும் இருத்தல் அவசியம். அப்படியுள்ளவருக்கே சாஸ்த்திரத்தின் உண்மை பொருள் விளங்கும் என்பதால் முதலில் ஈஸ்வர நமஸ்காரமான மங்களாசரணத்தை கூறுகின்றார்.

கங்கையின் அதிவேகமான பிரவாகத்தினால் மிகவேகமாக நடுங்கிய ஜடையிலிருந்து (கூந்தலிருந்து) கீழே விழும் சர்ப்பங்களை (பாம்புகள்) கண்டு நடுங்கிய மலைமகளை புன்னகையோடு கடைக்கண்ணால் நோக்கியப்படி அணைத்துக்கொண்டு. தன்னை தொழுகின்ற மக்களை கருணையோடு நோக்கி அவர்களின் துன்பங்களை முழுவதும் துடைத்து குறைவற்ற இன்பத்தையும் கொடுக்கின்ற, பிறை சூடிய பெருமானான பரம ஆனந்த மூர்த்தியான சிவனே, வேதாந்த பொருளை அறிய ஆவல் கொண்ட எங்களின் அறியாமையாகிய இருளை நீக்கி உண்மையான தன் சுவரூபத்தை எங்களுக்கு போதிப்பாயாக.

இங்கு இந்த மங்களாசரணத்திலேயே அனுபந்தமான விஷயம், பிரயோஜனம், சம்பந்தம் மற்றும் அதிகாரி இவைகளையும் கூறுகின்றார். இந்த கிரந்தத்தின் **விஷயம் - மோஹத்வாந்தம்** என்பதினால் கூறப்பட்ட அறியாமை நீக்கத்தினால் உண்டாகும் பிரம்மஞானம், **பிரயோஜனம் - பரமானந்த மூர்த்தி** என்பதினால் கூறப்பட்ட நிறைவான இன்பமான தன் உண்மை சுவரூபமான பிரம்மமே ஆகும். **சம்பந்தம்** - விஷயம் மற்றும் பிரயோஜணங்களின் **பிரதிபாத்ய**

**மற்றும் பிரதிபாதக உபேயத்வ** லக்ஷணமான சம்பந்தம் மற்றும் **அதியகாரி - ஜடாஸ்ரஸ்த** முதலியவைகளால் கூறப்பட்ட வைராக்கியம் முதலான சாதனங்கள் உள்ளவர் என்றாகின்றது. -1-

ஆதிதைவ, ஆதிபௌதிக மற்றும் ஆத்யாத்மிக ஆகிய மூன்று தடைகள் நீங்க, முதலில் ஆதிதைவ தடை நீங்க இறைவனை வேண்டிய பின்பு, இறைமார்க்கத்தை நமக்கு காட்டுகின்ற குருவினை துதிப்பதாக இரண்டாம் மங்களம் அமைந்துள்ளது. **யஸ்ய தேவே , ஸ குருமேவ அபிகச்சேத்** முதலிய பல சுருதிகள் இதற்கு பிரமாணம். பகவான் கீதையிலும் **ஸ்ரத்தாவான் லபதே ஞானம்** என்று கூறுகின்றார். **ஸ்ரத்தா** என்பது **குரு சாஸ்திர வாக்கியேஷு விஷ்வாஸ** என்று கூறப்பட்டுள்ளது. மேலும் **சுபஸ்ய பஹுவிக்னானி** என்ற வாக்கியத்திற்கு ஏற்ப நல்ல செயலுக்கு பலவித தடைகள் சாத்தியமானதால் குரு நமஸ்காரம் மூலமாக அந்த தடைகள் நீங்க பிராத்திக்கின்றார்.

स्मारंस्मारं जनिमृतिभयं जातनिर्वेद वृत्ति
ध्यायंध्यायं पशुपतिमुमाकान्तमन्तर्निषण्णम् ।
पायंपायं सपदि परमानन्दपीयूषधारां
भूयोभूयो निजगुरुपदाम्भोजयुग्मं नमामि ॥ २ ॥

**புணரபி ஜனனம் புணரபி மரணம்** என்பது போல ஆத்ம நிச்சயம் உண்டாகும் வரையில் இருக்கும் இந்த பிறப்பு இறப்பு என்ற பிறவிப் பெருங்கடலை நினைத்து ஒரு முறை அல்ல மீண்டும் மீண்டும் நினைத்து அதனால் உண்டாகும் பயத்தினால் அந்த பயத்தினை மீண்டும் மீண்டும் நினைப்பதினால் உண்டாகும் வைராக்கியத்தினால் **நிர்வேத மாயாத் நாஸ்தி அக்ருதக்ருதேன** என்ற முண்டக உபநிஷத் வாக்கியம் போல அந்த மாற்றமற்ற பிரம்மமானது செயல்களினால் அடையப்படுவது இல்லை என்பதால் அதை அடையும் வழியை அறிய வேண்டும் என்கின்ற ஆசையினால் **ஸ குருமேவாபிகச்சேத்** அவன் குருவையே அடைவானாக என்ற உத்திர வாக்கிய பிரகாரம், உடனே **யதஹரேவ விரஜேத் ததஹரேவ பிரவ்விரஜேத்** என்ற வாக்கியப்படி அந்த வைராக்கியவான் புருஷன் உடனே சன்னியசித்து

ஞானமடைய **தபஸ்ஸ்வாத்யாய ஈஸ்வரபிரணிதானாத் வா** என்கின்ற யோக சூத்திரத்தின் படி சித்தசுத்தியின் பொருட்டே குருவினால் கூறப்பட்ட முறைப்படி ஈஸ்வரனை தன்னுடைய ஸ்ருதய குகையின் மத்தியில் பிரம்மமாத்திரமாக இருக்கும் பரமேஸ்வரனை (பிரம்ம வித்யாவினை அளிக்க கூடிய அதன் அதிதேவதையான பார்வதியை துணையாக பெற்ற), சிவனை உமாவுடன் **ஸ து தீர்ககால** என்ற யோகசூத்திரப்படி மீணடும் மீண்டும் தியானித்து, **த்யேய சிந்தாயாம்** என்ற வேர்சொல் உள்ள சொல்லாகையால் மீண்டும் மீண்டும் தியானித்து அவர் உரு சித்தத்தில் படும் படியாக தியானித்து அப்படிப்பட்ட ஈஸ்வரனின் கருணையினால் உண்டான சித்தசுத்தியுடன் , ஸ்ரீ குருவினை அடைந்தால் அவரால் கூறப்பட்ட சாஸ்திர வாக்கியத்தால் உண்டான அமிருத பிரவாகத்தினை மீண்டும் மீண்டும் குடித்து, குடித்த உடனேயே, அந்த நேரத்திலேயே அந்த இரண்டற்ற ஆத்ம தத்துவத்தினை நிரந்தரமாக அனுபவிக்கும்படியாக உபதேசிக்கும் அந்த சத்குருவினுடைய பாதகமலங்களை மீண்டும் மீண்டும் நான் நமஸ்கரிக்கிறேன். இரண்டற்ற ஞானம் அனுபவித்தாலும் **யாவதாயுஸ் த்ரயோ வந்த்யா வேதாந்த குருரீஷ்வர -** ஆயுல்வரை மூவர் வணங்கப்படவேண்டும் வேதாந்தம் , குரு, ஈஷ்வரர் என்ற நியமம் காண்பிக்கப்பட்டது. -2-

यस्माद्विश्वमुदेति यत्र निवसत्यन्ते यदप्येति य
त्सत्यज्ञानसुखस्वरूपमवधिद्वैतप्रणाशोज्झितम् ।
यज्जागृत्स्वपनप्रसुप्तिषु विभात्येकं विशोकम् परं
प्रत्यग्ब्रह्म तदस्मि यस्य कृपया तन्देशिकेन्द्रम् भजे ॥ ३ ॥

கடலையே எழுதும் மையாக கொண்டாலும், வானத்தையே காகிதமாக கொண்டாலும் எவருடைய பெருமையை விவரிக்க இயலாதோ அப்படிப்பட்ட சத்குருவின் பெருமையை ஒரு ஸ்லோகத்தால் மட்டும் விவரித்ததில் திருப்தியற்றவராக **தத்** மற்றும் **த்வம்** பதங்களை விளக்கி சுருங்கக்கூறி அந்த இரண்டின் ஐக்கியத்தையும் தன்னுடைய கிருபையினால் புரியவைத்த ஆச்சாரியகுருவை வணங்குகின்றார்.

**யஸ்மாத் ஜாதம் ஜகத் சர்வம் யஸ்மின் ஏவ பிரலிய**தே என்கிற ஆசார்ய வசனமும், **ஆத்மன ஆகாஷ சம்பூத** , **ததைக்ஷத பஹூஸ்யாம்** முதலிய வாக்கியங்களினால் எந்த ப்ரம்மம் கூறப்பட்டதோ அதனை தத் பத வாக்கியமான பிரம்மத்தினை யஸ்மாத் என்று விளக்குகின்றார். ஸ்தூலம், சூக்ஷ்மம் மற்றும் மூர்த்தமானதும் அமூர்த்தமானதுமான ஸ்ருஷ்டி எந்த பிரம்மத்திலிருந்து வந்ததோ, எதிலேயே அவை நிலைத்திருக்கின்றதோ, எதிலேயே அது லீனமும் அடைகின்றதோ, **ஆனந்தாத் ஏவ கலு இமானி பூதானி ஜாயந்தே, ஆனந்தேன ஜாதானி ஜீவந்தி ஆனந்தம் பிரயந்யவிவஷந்தி** முதலிய வாக்கியங்களினால் அந்த பிரம்மத்திலிருந்து (அபின்னநிமித்த உபாதானமான பிரம்மத்திலிருந்து ) இந்த உலகம் உண்டாகி நிலைத்து பின்பு லீனமும் ஆகின்றது. இப்படி அதன் **தடஸ்தலக்ஷணம்** கூறப்பட்டபின்பு அதன் **ஸ்வரூபலக்ஷணம்** சத்யஞானசுகஸ்வரூபம் என்று விளக்கப்படுகின்றது. **சத்யம் ஞானம் அனந்தம் பிரம்ம** என்பது ஸ்ருதி வாக்கியம் அப்படிப்பட்ட குணங்களுடைய பிரம்மம் என்று கூறுதல் சரியாகாது என்பதால், நிர்குணமான பிரம்மத்தில் குணம் இருத்தல் முடியாது எனபதால், சத்தியம் முதலானவை **பாத்ய**, **ஜட** மற்றும் விலக்ஷணமான ஸ்வரூபமான பிரம்மம் என்று பொருள் கொள்ளவேண்டும். சரி தேசம் மற்றும் காலத்தினால் வரையறுக்கப்பட்டதா என்றால் இல்லை. தேசம், காலம், வஸ்து போன்ற மூன்று வரையறைகளும் இல்லாத சச்சிதானந்த ஸ்வரூபமே பிரம்மத்தின் ஸ்வரூபலக்ஷணம். இதுவே தத் பதத்தின் லக்ஷயார்த்தம் ஆகும். விழிப்பு , கனவு மற்றும் தூக்கம் முதலிய மூன்று அவஸ்தைகளிலும் எது நான் என்று பிரகாசிக்கின்றதோ அப்படிப்பட்ட அவஸ்தையிலிருந்து விலக்ஷணமான வேறான பிரத்யக் ஆத்மா. இதுவே அதன் தடஸ்த லக்ஷணம், அதாவது த்வம் பதத்தின் வாக்கியார்த்தம் ஆகும். அது ஏகம் ஒன்றானது அதாவது இரண்டற்றது, எதில் இரண்டேன்பதே இல்லையோ அப்படிப்பட்டது. அப்படி இரண்டற்றதாக இருப்பதினாலேயே துக்கமற்ற சுகஸ்வரூபமாக இருக்கின்றது. **த்விதீயா வை பயம் பவதி** என்பது ஸ்ருதி. அது மித்தியாவான இந்த ஜடத்தினை காட்டிலும் சத்திய ஸ்வரூபமாக இருப்பதாலும் ஸ்வயம்பிரகாசமாக இருப்பதாலும் மேலானதும் ஆகின்றது. இதுவே பிரத்யக் ஆத்மாவின் ஸ்வரூபலக்ஷணம், த்வம் பதத்தின் லக்ஷிய அர்த்தமும் ஆகும். தேகம் இந்திரியம் முதலிய அத்யாசங்களை எது தியாகம் செய்கிறதோ அந்த பிரத்யக்கான சுத்திகரிக்கப்பட்ட ஜீவன் முன்பு கூறிய மூன்று விதமான வரையறைகள் இல்லாததால் அது **பிருஹத்** (பெரியது), அது பிரம்மம். அந்த பிரம்மனை பற்றிய தத் மற்றும் த்வம் பற்றிய விசாரமே இந்த

சாஸ்திரத்தின் விஷயமாகும். அந்த பிரம்மனை எந்த குருவின் (ஷ்ரேஷ்டமானவரின்) கருணையினால் நான் என்று அறிந்து கொண்டேனோ, அதனால் பரமபுருஷார்த்தை அடைந்தேனோ, அவரை ஆயுள்பரியந்தம் (உள்ளவரை) சேவித்திருப்பேன்.

**ஈஸ்வரோ குருராத்மேதி மூர்த்தி பேத விபாகினே** என்று **மானசோல்லாசத்தில்** (தக்ஷிணாமூர்த்தி ஸ்லோகத்தின் உரை) கூறியது போல முதல் ஸ்லோகத்தில் ஈஸ்வரரும் , இரண்டாவதில் குருவும், மூன்றாவதும் குரு என்றாலும் பிரத்யக் ஆத்மாவை நினைத்ததால் அந்த நினைவே ஆத்மாவுக்கு நமஸ்காரம் ஆகின்றது. அதுவும் தியானிக்கப்பட்டதாகின்றது. இப்படியே சாதனா சதுஷ்டயத்தினை தெளிவாக காண்பித்து அப்படியே இந்த கிரந்தம் எழுதுவதற்கான காரணத்தையும் கூறுகின்றார். -3-

अधीतेज्यादानव्रतजपसमाधाननियमै
र्विशुद्धस्वान्तानां जगदिदमसारं विमृशताम् ।
अरागद्वेषाणामभयचरितानां हितमिदं
मुमुक्षूणां हृद्यं किमपि निगदामः सुमधुरम् ॥ ४ ॥

**சுவாத்யாயோ அத்யேதவ்ய** என்ற விதிப்படி உபநயன சம்ஸ்காரத்திற்கு பிறகு குருகுல வாசம் செய்து முறையாக தன்னுடைய பரம்பரை ஷாக்கையான வேத பாகத்தினை அதன் முறைப்படி அங்கத்துடனும் அதன் பொருளுடனும் படித்து அறிந்து நித்திய நைமித்திக பிராயசித்தமான மற்றும் ஸ்மார்த்த கர்மங்களை செய்து காமிய கர்மங்களை செய்யாமல் அதில் ஆசையை ஒழித்து, விதிப்படி தானத்தை விதியாக செய்து ஏகாதசி, பிரதோஷம் முதலிய விரதங்களை அனுஷ்டித்து, மந்திரங்களை அதன் பொருள் மனதில்படும்படி ஜபித்து, (நித்தியமாக ஜபம் செய்து), உபாசிக்கும் இஷ்ட தெய்வத்தினை இதயத்தில் நிலைநிருத்தி, அகக்கரணங்களையும் புறக்கரணங்களையும் கட்டுப்படுத்தி வைப்பது முதலியவைகளால் எவருடைய மனதானது (அந்தக்கரணம்) தோஷமற்றதாக மிகவும் சுத்தமானதாக இருக்கின்றதோ அப்படிப்பட்ட சித்தசுத்தி உள்ளவர்க்கே வேதாந்த வாக்கியங்களின் பொருள் சரியாக விளங்கும் என்பதால்,

இது என்று நிர்தேசத்தினால் எவையெல்லாம் சுட்டிக்காட்டப்படுகின்றதோ அப்படிப்பட்ட எல்லாம் சாரமற்றதாக , ஜடமாக அநித்தியமாக உள்ளவை எல்லாவற்றையும் ஷ்ருதி, குரு உபதேசம் மற்றும் அனுபவம் ஆகியவை கொண்டு தீணமானிக்கவேண்டும். இப்படி தீர்மானிப்பதே விவேகம் எனப்படுகின்றது. இதுவே இந்த உலகத்திலோ அல்லது வேறு உலகத்திலோ உள்ள போகத்தின் மேல் உள்ள ஆசையான ராகமும் , துவேஷமும் இல்லாது இருக்க வேண்டும். இதனால் **விவேகம், வைராக்கியம்** இரண்டும் கூறப்பட்டது. பயமற்றவராக தன்னிலும் பிறரிலும் பயம் உண்டாகாதவராக இந்திரியங்களை அடக்கியதால் ஆசையை ஒழித்தவராகிறதால் எல்லாவற்றிக்கும் மூல காரணத்தினை ஒழித்ததால் தன்னில் பயம் இல்லாமல் சகிப்பு முதலிய உத்தம குணங்களால் சாதுவாக இருப்பதால் பிறரிலும் பயம் உண்டாகாமல், இதனால் **சமம், தமம், உபரதி, திதிக்ஷா, ஷ்ரத்தா மற்றும் சமாதானம்** ஆகிய **ஷமாதி ஷட்க சம்பத்தி** கூறப்பட்டது. கூறப்பட்ட குணங்களை உடைய நான் மோக்ஷம் அடையவேண்டும் என்கிற எண்ணமுடைய **முமுக்ஷு** ஆனவர்க்கு, அவர் சச்சிதானந்த ஸ்வரூப தன்னுடைய ஆத்மாவை அறியவேண்டி, கஷ்டமில்லாமல் சுலபமாக பொருளை அறியும்வண்ணம், **அஷ்ரத்தை, ஷாட்டியம்** முதலிய கெட்டகுணங்கள் உள்ளவர்க்கு போதிக்க கூடாதாகிய ரகசியமான குருபரம்பரையினால் பிராப்பதமான இந்த விஷயத்தினை தெளிவாக கூறுவேன் என்று கூறியதால் பிரம்ம சூத்திரத்தின் **அதாதோ பிரம்ம ஜிஞ்ஞாசா** என்ற சூத்திரத்தில் வரும் அத என்ற சொல் **அதாதோ தர்ம ஜிஞ்ஞாசா** என்ற ஜைமினியின் சூத்திரத்தில் வரும் அத சொல்லுக்கு சமமான பொருளான வேதத்தினை படித்த பின்பு என்கிற பொருள் கொடுக்காமல், இந்த விவேகம் , வைராக்கியம், சமாதிஷட்க சம்பத்தி மற்றும் முமுக்ஷுத்துவம் ஆகிய சாதன சதுஷ்டயத்தையுடைய அதிகாரியையே குறிக்கின்றது என்பதும் தெளிவாகின்றது. -4-

சூத்திரத்தில் குறிப்பிட்ட பிரம்ம ஜிஞ்ஞாசா என்ற பதத்திற்கு **ஷ்ரோதவ்ய மந்தவ்ய நிதித்யாசிதவ்ய** என்கிற விதியில் **ஞானாதேவ து கைவல்யம்** என்ற வாக்குப்படி விசாரணையினால் ஞானமும் அந்த ஞானத்தினால் கைவல்யமான மோக்ஷமும் உண்டாகும் என்றாகின்றது. இப்படி மோக்ஷமானது ஞானத்தினால் உண்டாவது என்பது தீர்மானமானதால், பந்தமும் அத்தியாசத்தினால் உண்டானது என்பதும் நிரூபணமாகின்றது.

ज्ञात्वा देवम् सर्वपाशाऽपहानिः नऽन्यः पन्थाश्चेति भूयोवचोभिः।

ज्ञप्तेः साक्षान्मुक्तिहेतुत्वसिद्धा वध्यासत्वं बन्धस्याऽर्थसिद्धम्॥ ५॥

**ஞாத்வா தேவம் சர்வபாஷாபஹானி க்ஷீண க்லேஷைர்ஜன் மிருத்யு ப்ரஹானி** தேவனை அறிவதால் எல்லா பற்றுகளும் விடுபடுகின்றது, அழிகின்றது. தடைகள் அழிந்தால் பிறப்பிறப்பு என்பதும் நிரந்தரமாக அழிகின்றது. **தமேவ வித்வானம்ருத இஹ பவதி நான்ய பன்தா வித்யதேயனாய** அந்த உண்மையை இப்படி அறிந்தவர்கள் அமிருத (பிறப்பிறப்பற்ற) நிலையை இங்கேயே அடைகின்றனர். அந்த நிலையை அடைய வேறு வழியில்லை முதலிய வாக்கியங்கள் மீண்டும் மீண்டும் இதையே கூறுகின்றன. ஞானத்தினால் மட்டுமே மோக்ஷம் என்பதை இந்த வாக்கியங்கள் பிரமாணங்களாகும். ஆத்ம ஞானத்தினை அடைய நேரடியான வழியாக ஞானமே வழி என்பதை நிச்சயிக்கின்றபடியால் முக்தியான நிரந்தரமான பந்த நிவிருத்தியுமோ அல்லது அதனால் குறிப்பிடப்பட்ட இணையற்ற இன்பமடைதலோ, கயிரினில் தோன்றும் பாம்பினை போன்று தவறாக தவறான யதார்த்தமற்றதில் யதார்த்த புத்தியான பந்தத்தை போலல்லாது. உண்மையானது ஞானத்தினால் நீக்க முடியாது என்பதும் பொய்யான தோற்றத்தை அறிவினால் நீக்க முடியும் என்பதும் **அர்த்தாபத்தி** என்னும் பிரமாணத்தினால் நிரூபணமாவதால். ஞானத்தினால் பந்தம் நீங்குவதும் அதன் பலனாக இரண்டற்ற பிரம்ம மற்றும் ஆத்மாவின் பிரிவற்றதன்மையும் நிரூபணமாவதால் இந்த சாஸ்திரமானது துவங்க யோக்கியதை உள்ளது என்று பொருளாகின்றது. -5-

ஆனால் பூர்வபக்ஷியின் வாதம், ஞானத்தினாலேயே மோக்ஷம் என்று எது கூறப்பட்டதோ அது ஏற்புடையதல்ல. சுவர்கமும் குறைவில்லாத இன்பம் மற்றும் நிரந்தரத்தன்மை உடையது என்று **யன்ன துக்கேன சம்பின்னம்** (எது துன்பத்தினால் தீண்டப்படவில்லையோ), **அபாம சோமம்ருதா அபூம** (சோமரஸத்தை குடித்து நாம் அமரத்துவத்தை அடைந்து விட்டோம்). **அக்ஷய்யம் ஹ வை சாதுர்மாஸ்யயாஜின சுக்ருதம் பவதி** (சாதுர்மாஸ்ய யாகத்தை செய்தவர்களுடைய புண்ணியம் அழிவற்றதாக இருக்கின்றது). முதலிய சுருதி வாக்கியங்கள் இதையே நிரூபிக்கின்றது. ஜைமினியும் இதையே மனதில் கொண்டு **ஸ ஸ்வர்க ஸ்யாத் சர்வான் பிரத்யவிஷிஷ்டதவாத்** என்ற சூத்திரத்தில் குறிப்பிட்டு இருக்கின்றார்.

இதனால், வேதாந்திகள் கூறும் நியாயமான **யத்க்ருதகம் ததனித்யம்** (எது செய்யப்பட்டதோ அது அநித்தியமானது) என்கிறதும் மேலும் அதற்கு பிரமாணமான **தத்யதேஹ கர்மசிரோ லோக க்ஷீயதே ஏவமேவாமுத்ர புண்யசிதோ லோக க்ஷீயதே** (எப்படி இங்கு கர்மத்தினால் அடையப்பட்டது அழிகின்றதோ அப்படியே புண்ணியத்தினால் அடையப்பட்ட சுவர்கமும் அழிவிடையது) என்கின்றதும் நிராகரிக்கப்படுகின்றது. அந்த ஷ்ருதியானது உபாசனையை போற்றி பெரிதுபடுத்தி கூறும் **பிரஸம்ஸா** மாத்திரம். **கர்மனைவஹி சம்சித்திமாஸ்திதா ஜனகாதய** (கர்மத்தினாலேயே ஜனகர் முதலியவர்களும் அழிவற்றதன்மை அடைந்தார்கள் ) முதலிய ஸ்மிருதிகளும் இதையே கூறுகின்றது. அதுமட்டுமில்லாமல் இந்த தேகம் ஆரம்பம் ஆவதற்கு உண்டான பிண்ணிய பாவங்கள் (**பிராரப்தகர்மம்**) போக மற்றவை சுவர்கம் அல்லது நரகத்தினை அனுபவித்தால் அழிந்ததாலும், எஞ்சியுள்ள பிராரப்தமோ அனுபவிப்பதாலே அழிவு அடைகின்றது என்கிற நியாயத்தினால், நித்தியம் மற்றும் நைமித்திக கர்மத்தினை சரியாக அனுஷ்டிப்பதாலும், காம்யகர்மங்களை மற்றும் நிஷித்த கர்மங்களையும் தவிர்ப்பதாலும், தவறுகளால் உண்டாகும் தோஷத்தினை பிராயச்சித்த கர்மத்தினால் நீக்குவதாலும் மீண்டும் பிறப்பு எடுக்க அவசியமான கர்மங்கள் இல்லாததால் அவ்வாறும் ஞானம் இல்லாமலேயே மோக்ஷம் அடையும் மார்க்கம் உள்ளதால் கூறப்பட்ட **பிரதிஞ்ஞா** (தீர்மானம்) சரியல்ல என்று சந்தேகமுற்றால்.

सत्यं भावं न वित्तिर्व्यपनुदति यतः कर्मनाश्यो घटादि
मिथ्याभूतं च कर्म क्षपयति न तथा वित्तिघात्यं यतस्तत्।
इत्थं सिद्धे विभागे श्रुतिशिखरगिरा वित्तिघात्यः प्रतीतो
बन्धो मिथ्येति सिद्धे न तदपहतये कर्मजातं समर्थम्॥ ६॥

உண்மையானதிற்கு அழிவு என்றும் இல்லை, அழிகின்ற பொருளும் உண்மையானவை இல்லை என்பதால், அதனாலேயே குடம் முதலிய பொருட்களிற்கு தடியினால் அடிப்பது போன்ற கர்மத்தினால் அழிவு உண்டாகின்றது என்பது எல்லோரும் அறிந்ததே. இது ஞானத்தினால் நீக்கப்பட

முடியாது. அதனால், லோகத்தில் மற்றும் தேவதத்தினால் கூறப்பட்ட கர்மத்தினால் உண்டானவை மித்யையானதை அழிப்பதில்லை. ஏனென்றால், இவை ஞானத்தினால் மட்டுமே அழியக்கூடியவை என்பது பிரசித்தமே. எப்படி இருளும் ஒளியும் போல இவை சுபாவத்தினாலேயே வேறு வேறானதால் (அஞ்ஞானமும், ஞானமும்) பிரமாணங்களினால் நிரூபிக்கப்பட்டதாலும் வேதமும் அதன் முடிவான வேதாந்தத்திலும் இதுவே கூறப்பட்டதாலும் ஞானத்தினால் நீங்குவதான அவித்யா முதலிய இரட்டை மற்றும் முப்பிடி உள்ள இந்த பொய் தோற்றமான பந்தமானது , முன்பு கூறப்பட்டது போல, அர்த்தாபத்தி பிரமாணத்தினால் கூறப்பட்டதுபோல, யாகம் முதலியவைகளால் உண்டாகும் சுவர்கம் முதலியவை சுருதியில் மட்டும் கூறப்பட்டதாலும் அப்படி இல்லாமலிருந்ததால் அதுவும் பொய்தோற்றமே ஆவதாலும் சுருதியே அதை மித்யா என்று தீர்மாணிக்கின்றது என்பதால் பந்தமும் பொய் தோற்றம் என்பது நிரூபணமாகிறது. இப்படி அது மித்யா என்பதால் அதன் நீக்கம் யாகம் முதலிய கர்மத்தினாலேயோ அல்லது உபாசனை முதலியவைகளாலோ அல்லது வேறு மாதிரியான கர்மத்தினாலேயோ செய்வது முடியாது என்பதால் பந்தம் கர்மங்களினால் நாசம் செய்யப்பட முடியாது. ஞானம் ஒன்றினாலேயே பந்தம் நீங்குகின்றது என்பது முடிவாகின்றது. -6-

ஞானமே மோக்ஷத்திற்கு வழி என்பது நிரூபிக்கப்பட்டாலும் கூட பந்தமானது அவித்தையினால் உண்டானால் மட்டுமே அது ஞானத்தினால் நீக்கப்படுவதாகின்றது என்கிற நிலையில் பந்தமே அவித்தையினால் உண்டானது என்பது நிரூபிக்கப்படவில்லை. ஒவ்வொரு சித்தாந்தியும் பந்தமானது உண்டான காரணத்தினை வேறு வேறு போல ஒப்புகொள்வதால், மித்யா ஞானத்தின் வாசனா காரணமாக பந்தம் உண்டாகிறது என்று **கணாத மற்றும் கௌதம** மதவாதிகளும், பிரகிருதி மற்றும் புருஷனை அறியாதது காரணம் என்று **சாங்கிய மற்றும் யோகிகளும்**, கர்மமே காரணம் என்று **மீமாம்ஸாவாதிகளும், பௌத்தர், ஜைனர்களும்** வேறுவேறு காரணங்கள் கூறுவதாலும் வேதாந்திக்கு அவித்தையானது பாவமுள்ளது (இருத்தல்) என்றாலும் பிரம்மத்தில் ஆஷ்ரயமுடையதும் முக்குணமுடையதும் உலகினை சிருஷ்டிக்கிறதும் என்று ஒப்புக்கொள்கின்றனர். பாவரூபமாக உள்ளதால் இது ஞானத்தால் நீக்கப்படுவதாகும்.

आविद्यो ह्येषबन्धो विरमति न विना वेदनं कर्मजालै
र्मालोद्भूताऽहिरस्तं व्रजति किमु नमस्कारमन्त्रौषधाद्यैः ।
एवं निश्चित्य नागस्त्वचमिव विधिना कर्मबन्धं विधूय
ज्ञानोपाये गुरुश्रीचरणमभिगतः सेवामानो यतेत ॥ ७ ॥

தேகம் இந்திரியம் முதலியவைகளால் நேரம், காலம், வஸ்து ஆகிய வரையறைகளை அடைகின்றதால் பந்தமானது, பாவரூபமான அஞ்ஞான காரியமான அவித்தையானது பிரத்யக்ஷம் முதலிய ஆறுபிரமாணங்களால் அறிப்படுவதே. அப்படிப்பட்ட இந்த அவித்தையானது அது ஆஸ்ரயித்துள்ள தத்துவத்தின் சாக்ஷாத்காரமில்லாமல் எத்தனை வேறு கர்மத்தினாலும் அல்லது கர்மமானது மீண்டும் கர்ம சமுத்திரத்தில் தள்ளிவிடும் என்கிற காரணத்தினால் அது வலையை போன்றது என்பதால் நீங்காது. இது எப்படியென்றால் மிதமான இருட்டினில் மாலையில் காணப்படும் பொய்தோற்றமான பாம்பானது நமஸ்காரத்தினாலோ, மணி, மந்திரம், மருந்து முதலியவைகளாலோ எப்படி நீங்குவதில்லையோ அப்படியே, அதனால், கூறப்பட்ட முறையில் கர்மங்களின் தன்மையை அறிந்து அவை மோக்ஷம் கொடுக்கக்கூடிய தகுதியற்றவை என்பதை அறிந்து **நாஸ்தி அகிருதக்ருதேன** என்று அறிந்து வைராக்கியத்தினை அடைந்த அதிகாரியானவன், எப்படி பாம்பானது தன்னுடைய சட்டையை உரித்து நீக்குகின்றதோ அதுபோல நித்திய நைமித்திக மற்றும் காமிய கர்மங்களை பந்தத்திற்கு காரணம் என்றறிந்து சாஸ்திரத்தில் கூறப்பட்டபடி **யதஹரேவ விரஜேத் ததஹரேவ பரிவிரஜேத்** என்பது போல எப்பொழுது வைராக்கியத்தை அடைந்தனரோ அப்பொழுதே சன்யாச வாழ்க்கையை சாஸ்திர நியமப்படி அடைந்து ஷ்ரோத்திரியர் மற்றும் பிரம்மநிஷ்டரான குருவினை அடைந்து அந்த அபயத்தை கொடுக்கும் குருவின் பாத கமலங்களில் சரணடைந்து அவருக்கு தன்னுடைய உடல் , பொருள், ஆவி ஆகிய எல்லாவற்றாலும் சேவை செய்து ஞானத்திற்கு காரணமான வார்த்தைகளை கேட்க முயற்சியுடைவராக வேண்டும். **அந்யான் வாசான் விமுஞ்சத, தத் சிந்தனம் தத் கதனம்** முதலிய வாக்கியங்களுக்கேற்ப இருந்ததினால் அதுவே சுபாவமாகிய அந்த ஷ்ரோத்திரிய பிரம்மநிஷ்டராகிய சத் குருவின் திருவாயிலிருந்து வரும் ஒவ்வொன்றும் சாஸ்திரவாக்கியமாகவே இருக்கும் என்பதால் குருவையே அடையவேண்டும். -7-

மோக்ஷத்திற்கு ஞானமே வழியானாலும் அதற்கு சன்னியாசமே முறையானதாலும் **சன்யஸ்ய ஷ்ரவனம் குர்யாத்** (சன்னியாசம் செய்து சிரவனம் செய்யவும்) முதலிய வாக்கியத்தினாலும் அதுவே சரியென்றும் சில கர்ம நிஷ்டையுடையவர்களும், **ஏஷணாதிரயமான** (மூன்று ஆசை - மகன், காசு, சாஸ்திரம்) ஒன்றிலோ அல்லது எல்லாவற்றிலுமோ பிடிப்பு அதிகம் உள்ளதாலும் சன்னியாசத்தினை விரோதிப்பவர்களாக இருக்கும் அவர்களை நிந்தித்து மற்ற கருத்தை கூறுகின்றார்.

केचित्कर्मैव काम्योज्झितमुदितपदप्राप्त्युपायं प्रतीता
स्तच्चोपास्तिं च मुक्तौ मिलितमथ पर साधनं सङ्गिरन्ते ।
अन्येतु ज्ञानकर्मोभयमिति मतिभिःस्वाभिरुत्प्रेक्षमाणाः
ज्ञानादेवेति वाक्याद्द्वयमिह सहसा नाऽनुमन्यामहे तान् ॥ ८ ॥

சில கர்ம நிஷ்டர்கள் கர்மத்தின்மீதுள்ள பற்றால் அதனை விட இயலாமல் **நிஷ்காமிய** கர்மங்களை அதாவது செய்யும் கர்மங்களின் பலனில் விருப்பமில்லாதாவது கர்மத்தினை செய்து துக்கமற்ற நிரந்தரமான இருப்பிடமான அல்லது அழிவற்ற சுகரூபமான சுவர்கத்திலோ மோக்ஷம் என்கிற எண்ணம் கொண்டு அதனை அடையும் வழிகளை கூறியுள்ளனர். இன்னும் சிலரோ ஞானத்தினை ஏற்றாலும் சன்னியாசத்திற்கு பயந்து ஞானகர்ம சமுச்சயமே (சேர்க்கை) மோக்ஷத்திற்கு வழியாகின்றது என்கின்றனர். இப்படி எல்லாம் தவறாக ஏற்பதற்கு காரணம் குரு காட்டும் வழியில் செல்லாமல் தன் மனம்போன போக்கில் தான்தோன்றியாக போவதே. ஆனால் ஆசாரிய பகவத்பாதருடைய வழியில் வந்த நாங்களோ மோக்ஷ சாதனமாக மற்றவர்களுடைய வாக்கினை ஏற்பதில்லை. ஞானமே மோக்ஷத்திற்கு நேரடிவழி என்று முன்பு கண்டது போல் ஞானத்தை மட்டுமே ஏற்கின்றோம். ஆனால் நேரடியாக இல்லாமல் பரம்பரையாக கர்மத்தினை ஏற்கின்றோம். கர்மத்தினால் சித்தசுத்தியும், அந்தக்கரணம் தூய்மையடைதலும் அதனால் அது ஞானத்திற்கு அங்கமாகின்றது. -8-

நித்திய மற்றும் நைமித்திக கர்மங்களை பற்றி விசாரிக்கும் போது

பூர்வமீமாம்ஸையில் அவற்றிக்கு எந்த பலனும் கொடுக்கப்படவில்லையென்றாலும் செய்வதினாலும் பலன் கூறப்படாத கர்மத்திற்கு எல்லாம் சுவர்கமே பலன் என்று நிச்சயித்து இருப்பதால். அதுமட்டுமல்லாமல் இந்த கர்மங்களை செய்யாமல் இருந்தாலோ **அகரணே பிரத்யவாய** என்கிற வாக்குப்படி அதற்கு பிரத்தியவாயம் என்கிற தோஷம் உண்டாவதால் அதனை தவிர்க்கும் பொருட்டு நித்திய மற்றும் நைமித்திக கர்மங்கள் அனுஷ்டிக்கப்படவேண்டியது அவசியமாகின்றது என்று மட்டுமே ஆகின்றதால் அது மோக்ஷம் அடைய சாதனமாகாது என்பது திண்ணம். இதையே

पैत्रो लोकोऽधिगम्यः क्रतुभिरधिगतो विद्यया देवलोको
यद्वा चेतःकषायक्षपणमिह तयोः स्मार्तमेवाऽस्तु साध्यम् ।
यज्ञेनेत्यादिवाक्याद्भवतु विविदिष तत्फलं वेदनं वा
ज्ञानादेवाऽमृतत्त्वं न हि शशकवधूः सिंहपोतं प्रसूते ॥ ९ ॥

**கர்மனா பித்ருலோக** என்ற வாக்குபடி கர்மத்தினை செய்வதினால் நித்திய-நைமித்திக கர்மங்களை செய்வதினால் **அர்யமா** முதலிய பித்ரு தேவதைகளின் லோகமே அடையப்படுகின்றது. ஆதபோல **வித்யயா தேவ லோக** என்கிற வாக்குப்படி பிராண உபாசனை போன்ற மனதினால் செய்யப்படும் செயல்களினால் ஜபம் முதலிய சாதனைகளால் இந்திரன் முதலான அந்தந்த உபாசனை தெய்வத்தின் லோகத்திற்கு செல்லுதல் என்பதும். ஆனால் இந்த பலன்களை விரும்பாமல் ஒருவர் ஈஸ்வர அர்ப்பண புத்தியோடு செய்யும் கர்மங்களுக்கு மற்றும் உபாசனைகளுக்கு ஸ்மிருதி கிரந்தங்களில் கூறப்பட்ட சித்தத்தின் கஷாயமான பல ஜன்மங்களாக அடையப்பட்ட சம்ஸ்காரத்தின் அழிவே பலமாக கூறப்பட்டுள்ளது. அதுவும் மோக்ஷத்தை கொடுக்கக்கூடிய சக்தியுடையது இல்லை. ஆனால் இந்த கர்மங்களால் அழிவற்ற தன்மையை கொடுக்கும் பதத்தினை அடையும் ஆசையுள்ள அந்த கர்மிகளுக்கு அதை அடையும் வழியான சன்யாசமும் அதனால் வேதாந்த சாஸ்திரத்தினை கேட்கும் பாக்கியமும் உண்டாகும். ஏனென்றால் மோக்ஷம் ஞானத்தினால் மட்டுமே அடையப்படும் என்பதால். ஒரு முயலுக்கு பிறக்கும் குட்டியானது எப்படி சிங்கமாகாதோ அதுபோல அழியும் தன்மையுள்ள கர்மத்தினால் உண்டாகும்

பலனும் அழியும் தன்மையுடையது. அழிவற்றதாக ஒரு போதும் உண்டாகாது. கழுத்தில் உள்ள மாலை முதலியவைகளை அறிய அதனை சுட்டிகாட்டி காண்பிப்பதால் அது உள்ளது என்று அறியப்படுவது போல ஞானமின்றி அதனை அடைவதற்கு ஒரு கர்மமும் அவசியமில்லை என்பது போலவே மோக்ஷமும். -9-

**अर्थी दक्षो द्विजोऽहम् बुध इति मतिमान् कर्मसूक्तोऽधिकारी**
**शान्तो दान्तः परिव्राडुपरमपरमो ब्रह्मविद्याऽधिकारी ।**
**इत्थं भेदे विवक्षन् समुदितमुभयं मुक्तिहेतुं सुशीतं**
**नीरं वैश्वानरं चोभयमहह तृषोच्छेद्कामः पिबेत्सः ॥ १० ॥**

முன்பே, மூன்றாவது சுலோகத்தில் **அதாதோ பிரம்மஜிஞ்ஞாசா** என்ற சூத்திரத்தின் **அத** என்ற பதம் வேத அத்யனத்திற்கு பிறகு என்பதில்லை அது சாதனமான நான்கினையும் அடைந்தபின்பு என்று விளக்கப்பட்டது. இங்கு மீண்டும் கர்மத்தின் மற்றும் ஞானத்தின் அதிகாரிகள் எவ்வாறு வேறுபடுகின்றார்கள் என்பது காண்பிக்கப்படுகின்றது. யாகத்திற்கு திரவியம் மற்றும் தேவதை என்ற இரு ரூபங்கள் மீமாம்ஸர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. திரவியமானது அவர்கள் செய்யும் கர்மத்தினை நடத்த தேவையான பொருள் அதுவும் நியாயமான முறையில் அவரவர் வர்ணத்திற்கு ஏற்ப அடையப்பட்டதாக இருத்தல் அவசியமாகின்றது. அப்படி பொருள் உண்டாயிருந்தாலும் குறிப்பிட்ட யாகத்தினால் அதன் பலனை நான் அடைவேன் என்கிற பலத்தின் மேல் ஆசையுள்ளவராக இருத்தல் அவசியமாகின்றது. ஆசையிருந்தாலும் அந்த கர்மதினை செய்வதற்கு உள்ள தகுதியுடையவராக இருத்தல் வேண்டும். **க்ருஷ்ணகேஷி ஜாதபுத்ர** (கருப்பு தலைமுடி மற்றும் பிள்ளையுள்ளவராக) முதலியது போன்ற தகுதியும் **அக்னி நிரீக்ஷிணம்** போன்ற கர்மங்களில் அக்னியை காண்பதற்கு கண்களும், **பிரதக்ஷிணம்** செய்ய கால்களும் முதலிய இருத்தல் அவசியமாகின்றது. இப்படிப்பட்ட தகுதிகள் உள்ளவராக இருந்தாலும் **த்விஜனாக** (ப்ராம்மண, க்ஷத்ரியர் மற்றும் வைஷ்யர்) இருத்தல் அவசியமாகின்றது. மேலும் வேதத்தில் விதிக்கப்பட்ட கர்மங்களை செய்ய ஆண்மகனாகவும், யக்ஞோபவீதம் முதலிய கர்மங்கள் செய்விக்கப்பட்டவராகவும் இருத்தல் அவசியமாகின்றது. வேதத்தினை முறைப்படி

அதன் பொருளுடன் படித்திருத்தல் அவசியமாகின்றது. அப்படிப்பட்ட ஒருவர் ஜைமினி மகரிஷியின் மீமாம்ஸா சூத்திரத்தின் ஆறாம் அத்யாயத்தில் கூறப்பட்டபடி ஆசைப்பட்ட கர்மத்தினை செய்ய அதற்குரிய தகுதிகளையுடைய நான் என்கிற பலனில் அபிமானமுள்ளவர் கர்மத்தினை செய்வதில் அதிகாரி என்று ஏற்கப்படுகின்றார்.

ஆனால், வேதாந்தத்தில் ஞானத்திற்கு அகம் மற்றும் புறக்கரணத்தை தண்டம் (கட்டுபடுத்தி) செய்து முன்பு கூறப்பட்ட விவேகம் , வைராக்கியம், சமாதிஷட்க சம்பத்தி, முமுக்ஷுத்துவம் உள்ளவர். எல்லா கர்மங்களையும் அதன் பலன்களையும் இச்சிக்காமல் சன்னியாச வாழ்க்கையை ஏற்றவராக , பற்றற்றவராக ஷ்ரவணம் முதலியவை செய்ய தேவையான புத்தியுள்ளராக அதுகாலம் தன்னுடைய சரீரத்தை தாங்குவதற்கு உள்ள செயல்களில் மட்டும் பிரவிருத்தியுள்ளவராக உள்ள ஒருவரே பிரம்மவித்யை பழக அதிகாரியாவார்.

இப்படி இவை இரண்டிற்கும் உள்ள அதிகாரிகளின் வேறுபாடு இருப்பதினால். இப்படி ஒளியும் இருளும் போல வேறாக இருக்கும் ஞானத்திற்கும் கர்மத்திற்கும் சமுச்சயத்தினை முக்திக்கு காரணமாக கூறுபவர்கள். நல்ல குளிர்ந்த நீரையும், நெருப்பும் ஒன்று சேர்த்து தாகம் தனிய பருகுவார்களாக. எப்படி குளிர்ந்த நீரும் நெருப்பும் ஒன்றுக்கொன்று விரோதிகளானவை சேர்ந்து தாகத்தை தனிக்கமுடியாதோ அப்படியே ஞானகர்மத்தின் ஒற்றுமையை போதிப்பவர்களின் போதனையும் ஆகின்றது, என்ன செய்வது -10-

சரி, ஞானமே மோக்ஷமடைய வழி என்று ஏற்றாலுமே இந்த ஞானமானது பல தர்ஷணங்களில் பலவிதமாக கூறப்பட்டதால் எது உண்மை, எது பொய் என்கிற சந்தேகமும் எது எத்துனை ஏற்கப்படவேண்டும் எவ்வளவு விடப்படவேண்டும் என்ற கேள்வியும் எழுகின்றது. காரணம் சாங்கியமும் யோகிகளும் பிரகிருதி மற்றும் புருஷனின் ஞானமே மோக்ஷத்திற்கு வழி என்று கூறுகின்றனர். பதார்த்தங்களின் ஞானமே என்று நையாயிகர் மற்றும் வைசேஷிகள். இப்படி பலரும் பலவிதமான கருத்து கூறும்போது ஷ்ருதியே பிரமாணம் என்றும் கூறமுடியாது. மற்றவரும் ஷ்ருதி வாக்கியங்களையே பிரமாணமாக காட்டுவதினால், வேதாந்த வாக்கியமான உபநிஷத்துக்களே பிரமாணம் என்றாலும் சப்தத்தினாலேயே அபரோக்ஷமான ஞானம் உண்டாகின்றது என்று ஏற்பதினால்

அந்த சப்தத்தில் சந்தேகம் என்பது எற்கப்படுவதில்லை. மஹாவாக்கியங்கள் மூலம் பிரம்ம சாக்ஷாதகாரம் கிடைத்தது என்றால் மீண்டும் சம்ஸ்காரமானது ஏற்படக்கூடாது. ஆனால் அப்படி காணப்படுவதில்லை என்பதால் ஒரு நிலைபாட்டிற்கு வருவது என்பது முடியாததாகிறது என்றால்.

**ज्ञानं चाप्यद्वितीयस्वरससुखघनानन्तचिन्मात्ररूप**
**ब्रह्मात्मैकत्वबोधः स भवति सुमतेस्तत्त्वमस्यादिवाक्यात् ।**
**देहाद्यध्यासदार्ढ्याच्छ्रुतमपि सहसा नैव संभावनीयं**
**ब्रह्मत्वं स्वस्य तस्मान्नयगुरुवचनैः साधु मीमंसनीयम् ॥ ११ ॥**

இரண்டாவது என்பது எதில் இல்லையோ அப்படிப்பட்ட அத்விதீயத்தில். தன்னுடைய சமானமான ஜாதியோ, வேற்றுமையோ, தன்னிருந்து வேறான ஜாதியோ, தன்னிலேயே வேறுவேறான தன்மையோ இல்லாததினால் தனக்கு தானே எது ரஸமாக இருக்கின்றதோ **ரஸோ வை ஸ** என்று வேதமும். அப்படிப்பட்ட அந்த பூர்ணானந்தமாகவும் தேசம், காலம் மற்றும் வஸ்துவினால் வரையறுக்கப்பட்டதாக இல்லாததாகவும். தானே ஒளிர்கின்ற சுவயம்பிரகாசமாகவும் இருப்பதான அதுவே ஆத்மாவும் பிரம்மனும் மானதின் நீ மற்றும் அது என்பதால் குறிக்கப்படுகின்றதின் பிரிவற்ற தன்மையை, வேறுவேறற்ற ஒற்றுமையை, வேறுவேறானது என்ற பிரிவினை தோற்றுவிக்கும் பிரமத்தினை (தப்பு எண்ணத்தினை ) நீக்கும் அகண்டாகார ஞானமே எல்லா வேதவாக்கியத்தின் தாத்பர்யமும் அதுவே என்பதால். மற்ற பிரமாணங்களுக்கு அது விஷயமாகததால் அவைகளால் அது பாதனை செய்யப்படாததாக இருக்கின்றது அப்படிப்பட்ட தத்துவ ஞானமானது பலகோடி பிறப்புகளில் அடைந்த புண்ணியத்தினாலும் பல ஜென்மத்தில் செய்த ஷ்ரவணாதிகளால் உண்டான திடமான சம்ஸ்காரணத்தினாலும், மிகவும் கடினமான, சூக்கும புத்திக்கு மட்டுமே புரிகின்ற இந்த ஆத்ம தத்துவமானது உத்தம அதிகாரியாக இருப்பவர்களுக்கு **தத்துவமஸி** போன்ற வாக்கியம் ஒரு முறை உபதேசிக்கப்பட்டதுமே தெளிவாகின்றது. அப்படிப்பட்ட முக்கிய அதிகாரிகளுக்கு மட்டுமே வாக்கியத்தினை கேட்டவுடன் அபரோக்ஷமான ஞானம் ஏற்படுகின்றது . அவருக்கு மீண்டும் சம்ஸ்காரமானது இல்லை. அது முழுவதுமாக மித்யா என்றாகின்றதால் ஞானத்தினால்

நீக்கப்பட்டதாகிறது.

ஆனால் மத்தியம மற்றும் மந்த அதிகாரிகளுக்கு பல பிறவிகளில் உண்டான தவறான சம்ஸ்காரணத்தினால் நான், எனது என்கிற ஏற்றிப்பார்க்கும் குணமான விபரீத பாவணையினால், தத்துவமஸி முதலிய வாக்கியங்களை கேட்டும் தானே பிரம்மம் என்று அபரோக்ஷஞானம் தெளிவாக உண்டாவதில்லை. அப்படி உண்டாவதற்கு வழியில்லா காரணத்தினால். அதனால், தன்னுடைய ஆத்மாவின் ஞானத்தை, தானே பிரம்மம் என்கிற அறிவை, உடனே அடையாத இந்த அதிகாரிகள் அதனை அறியவேண்டி ஷ்ரோத்திரிய பிரம்மநிஷ்டரான குருவினை அடைந்து அவர் காட்டும் வழியில் சென்று, முன்னோர்கள் கூறிய வழியில் அதனை குருவிடமிருந்து முறையாக அறிந்து, தன்னுடைய பிரம்ம தத்துவத்தை முழுவதுமாக தீர்மானமாக அறியும் வரையில் விசாரத்தினை செய்யவேண்டும். எப்படி நோய் முழுவதும் நீங்கும் வரையில் மருந்தானது உட்கொள்ளப்படவேண்டுமோ. அதுபோல ஆத்மாவின் நிச்சயம் உண்டாகும் வரை விசாரமானது செய்யப்படவேண்டும் என்பது பொருள். – 11 –

விசாரணை என்றால் அது எப்படி செய்யப்பட வேண்டும் . அதன் முறை யாது என்று மந்த மத்தியம அதிகாரிகள் சிலருக்கு புரியாது என்பதால், அந்த விசாரம் செய்யவேண்டிய முறையை காட்டுவது மூலம் முதலில் த்வம் - நீ என்ற சொல்லின் பொருளானதை விளக்கும் வண்ணம் அடுத்த இரண்டு ஸ்லோகம் மூலமாக காண்பிக்கப்படுகின்றது.

**देहं केऽपि वदन्ति खानि तु परे प्राणान्मनश्चापरे**
**बुद्धिं च क्षणिकां स्थिरामत परे केचिच्चितं निस्सुखाम् ।**
**आत्मानं जडचित्स्वभावमपरे चिद्वज्जडम् चेतरे**
**सत्यज्ञानसुखाद्वितीयमपरे तत्राऽस्य को निश्चयः ॥ १२ ॥**

**சார்வாக்க** மதமானது தேகமே ஆத்மா என்றும் அதனை தவிர வேறு ஆத்மா இல்லை என்பதையும் சித்தாந்தமாக கூறுகின்றது. இப்படி கூறுபவர்கள் **தேகாத்மவாதிகள்** என்று அழைக்கப்படுகின்றனர். நான் குருடு, செவிடு முதலாக

இந்திரியங்களையே ஆத்மா என்று ஏற்கும் சிலரும் இருக்கின்றார்கள். தேகத்தை காட்டிலும் சூக்குமமாக இருக்கும் இந்திரியத்தினை சிந்தித்து அதனை ஆத்மாவாக ஏற்கும் இவர்கள் **இந்திரியாத்மவாதிகள்**. இதிலும் சிறிது சூக்குமமாக சிந்தித்து தூங்கும் போது இருக்கும் பிராணனானது இறந்த உடலில் இருப்பதில்லை, குருடருக்கும் செவிடருக்கும் கூட இது ஒரே போல உள்ளதால் பிராணனே ஆத்மா என்று கூறும் **பிராணாத்மவாதிகளும்** உள்ளனர். இப்படி பிராணன் முதலிய ஒழுங்காக இருந்தாலும் மனமானது ஒரு முகப்படாமல் இருந்ததென்றால், வேறு ஏதாவது ஆழ்ந்த சிந்தனையில் இருக்கும் போதோ முன்பு உள்ள சுகமானதோ அல்லது துக்கமானதோவான அனுபவங்களும் நன்மை பாதிப்பதில்லை என்பதால் மனமே ஆத்மா என்று கூறும் **மனாத்மவாதிகள்** சிலரும் உண்டு.

புத்த மதத்தினரோ மனம் தூக்கத்தில் லயத்தினை அடைவதினால் அப்பொழுது உயிரோடு இருக்கும் காரணத்தினால் சித்தத்திலும் அதன் பரிமாணத்திலும் உள்ள க்ஷணிகமான விஞ்ஞானத்தினை, **ஆலய விஞ்ஞானம்** என்று ஏற்கின்றனர். இந்த ஆலய விஞ்ஞானமோ ஒவ்வொரு க்ஷணமும் அழிகின்றது. அதுவே ஆத்மா என்று அபிப்பிராயம் கொள்கின்றனர். ஆனால் **பாஸ்கரர்** முதலியவர்கள். இப்படி ஆத்மா க்ஷணிகமானதாக இருந்ததென்றால் நினைவு கூறுவது முதலியவைகள் முடியாது என்கிற காரணத்தினால், அதனால் பந்தமும் மோக்ஷமும் இருப்பதேன்பது முடியாததால் , சாஸ்திரம் பயனற்று போகும் என்பதாலும் இப்படிப்பட்ட தாராபிரவாகமான புத்தியை ஏற்காமல் நிரந்தரமானதாக உள்ள நான் செய்கின்றேன் என்கிற பற்றுடைய **புத்தியே ஆத்மா** என்று ஏற்கின்றனர். சாங்கியர்களும் யோகிகளும் சுகம், துக்கம் முதலிய தர்மத்தினையுடையது ஆத்மா என்று ஏற்றால் ஆத்மாவானது குணமுடையதாக ஆவதினால், அது அவயவமுள்ளதாக ஆவதினால் விகாரம் அடையக்கூடியதாகும் என்பதால் ஆத்மாவினை சித் ரூபமாக ஏற்கின்றனர். அந்த ஆத்மாவிற்கு , பிரகிருதியின் குணத்தினை அறியாமையால், தான் அனுபவம் கொள்கின்றவன் முதலிய லக்ஷணத்தினை உடைய பந்தம் உண்டாகின்றது. அந்த பிரகிருதியை அறிந்தால் அதுவே மோக்ஷம் என்று ஏற்கின்றனர்.

**பாட்ட** மதத்தினரோ அப்படி ஏற்பதில்லை **ஆத்மா போக்தா பிரகிருதி கர்த்தா** என்று ஏற்பதை மறுக்கின்றனர். ஏனெனில் நாம் அனுபவம் செய்யும் சுகம், துக்கம் முதலியவைகளுக்கு காரணமான பாபம் புண்ணியம் செய்தவர் ஒருவரும்

அதன் பலத்தினை அனுபவிப்பவர் வேறு ஒருவர் என்ற நிலை உண்டாவதால் ஆத்மாவில் ஜடமானதும், ஞானமானதுமான இரண்டு பகுதிகளை ஏற்கின்றனர். ஜட அம்ஸமானது இன்ப-துன்பத்தினை அனுபவிப்பதாகவும் மற்றது சாக்ஷியாகவும் ஏற்கின்றனர். ஆனால் இப்படி இரு பகுதிகளாக ஏற்பதனால் ஆத்மாவானது பகுதிகள் உடையது என்பதினால் குடம் முதலியவை போன்று அதுவும் அநித்தியம் என்றாகும் என்பதால், நையாயிகர்களும், பிரபாகர மீமாம்ஸர்களும் ஆத்மா ஆகாயத்தினை போன்று ஜடமானாலும் சமவாயம் என்கிற சம்பந்தத்தினால் ஞானம் கூடியதாக ஏற்கின்றனர்.

இப்படி ஜகத்தானது சத்தியம் என்று ஏற்க்கும் வாதிகளை கூறிய பின்பு வேதாந்திகளோ, மூன்று காலத்திலும் எது நிராகரிக்கப்படமுடியாததாக இருக்கின்றதோ அப்படிப்பட்ட சுவயம்பிரகாசமான ஞானமே சத்தியம் என்றும், வேறெதும் அதனை காட்டிலும் இல்லாமையாலும் ஆத்மா சத்திய ஞான சுக சொரூபம் என்று கூறுகின்றோம். அதனை அறிய விரும்புபவர்கள் நன்கு விசாரம் செய்து எது உண்மை என்ற அறிந்துக் கொள்ளவேண்டும். -12-

இப்படி ஆத்மாவினை பற்றி பலரும் பலவிதமாக எண்ணுகின்றார்கள் என்பதை கூறிய பின்பு அந்த ஆத்மாவின் பரிணாமும், அதனை அறிய வேண்டி, அது எதனால் அறியப்படுகின்றது என்பது காண்பிக்கப்படுகிறது.

**आहुः केचिदणुं शरीरसदृशं केचिद्विभुं तं परे**
**ते तं मानसगोचरं तदपरे नित्याऽनुमेयं जगुः ।**
**अन्ये चिद्विषयं परेतु परमस्वज्योतिराभ्यन्तरं**
**सत्येवं श्रुतियुक्तिभिर्विविदिषोर्युक्तो विचारो मुहुः ॥ १३ ॥**

ஆத்மாவை **பரமாணு** என்று **பாஷுபதம் மற்றும் பாஞ்சராத்திரம்** முதலிய சித்தாந்திகள் ஏற்கின்றனர். இவர்கள் அனுபரிமாணமாக ஏற்பதற்கு காரணம், என்னவென்றால் ஆத்மா மஹத் பரிமாணமாக விபூவாக என்று ஏற்றால் அது சரீரத்தில் போகம் முதலியவைகளை அல்லது சரீரத்திலுங்கூட இருக்கும் நிலையை விளக்க முடியாததாகும். சரி, மத்திம பரிமாணமான உடல் அளவு

ஆத்மா என்று எற்றால் அது அநித்தியமாகும் என்ற நிலை ஏற்படும் என்பதால் ஆத்மா பரமாணு என்று ஏற்பதே சிறந்து என்கின்றனர்.

ஜைனர் முதலியவரோ அணுவாக ஆத்மாவை ஏற்றால் உடல் முழுவதும் உண்டாகும் குளிர் முதலியவைகளையோ அல்லது தண்ணீரில் பாதியும் மீதி உடல் வெளியிலும் இருக்கும்போது இருவித அனுபவமும் அனுபவிப்பதில் பிரச்சனை என்பதால் ஆத்மா சரீரத்தின் அளவு என்று ஏற்கின்றனர். யானையின் ஆத்மா அதன் உடலளவையும் எறும்பின் ஆத்மா அதன் உடலளவையும் கொண்டது என்று ஏற்பது எப்படியென்றால் ஒரு தீபமானது பெரிய அறையில் வைக்கப்படும்போதும். அல்லது சிறிய அறையில் வைக்கப்படும்போதும் அந்தந்த அறையினை வியாபித்து பிரகாசிக்கின்றது போல ஆத்மா **மத்திய பரிமாணம்** என்று ஏற்கின்றனர்.

ஆனால் மத்திய பரிமானமாக ஏற்பதனால் முன்பு கூறியப்படி அநித்திய தன்மை உண்டாகும் என்பதால், நையாயிகர்கள் முதலானவர் ஆகாயத்தினை போல விபு பரிமாணம் உள்ளதாக ஏற்கின்றனர். அப்படி விபுவாக இருந்தாலும் எல்லா உருவமுள்ள பொருளுடனும் சமவாய சம்பந்தம் உடையதாக ஏற்கின்றனர். இதனால் அனுபவங்களை அனுபவிப்பதில் எந்த தடையும் இருக்காது.

அளவுக்கொண்டு வேற்றுமையை கூறிய பிறகு அதை அறிவதில் உள்ள வேற்றுமை கூறப்படுகின்றது. இப்படி வேறுவேறாக அதன் அளவு பலரால் ஏற்கப்பட்டாலும் ஆத்மாவானது மனதினால் அறியப்படும் என்றும் ஏற்கின்றனர்.

சாங்கியர் முதலியவர்களோ ஆத்மா சத்துவ குணப் பிரதானமாக உள்ள புத்தியின் விருத்தியினால் அது எப்பொழுதும் அனுமாணிக்கப்படுகிறது என்று கூறுகின்றனர்.

பௌதர்களோ, க்ஷணிகமான ஆத்மா சித்தின் விஷயம் என்று கூறுகின்றனர். பிரபாகரர்களோ அது சித்தத்தின் விஷயம் மட்டுமே என்றும் அது எல்லா ஞானத்தையும் பிரகாசிக்கின்றது என்றும் ஏற்கின்றனர். இப்படி எல்லாருடைய மதப்படியும் ஆத்மா, ஞானம் , விஷயம் என்று முப்புடிகளே உள்ளது.

ஆனால் வேதாந்திகளோ, ஆத்மா தானேஒளிருவது, சுவயம் பிரகாசமானது என்றும், எப்படி ஒரு தீபத்தினை காண வேறு தீபம் அவசியமில்லையோ, அதுபோல, ஆத்மாவானது ஸ்புரணமே சுபாவமானதாக இருப்பதினால், ஐந்து கோசங்களையும் விசாரித்து நீக்கி அதற்கெல்லாம் உள்ளே இருக்கும் எல்லோரும் விரும்பும் ஆனந்தசுபாவமாகவே இருக்கும், ஸ்புரணமாக தனித்து இருக்கும் வஸ்து என்று எற்கின்றனர்.

இப்படி பலவிதமாக கூறப்பட்டதில் , ஆத்மாவின் சொரூபம் மற்றும் பரிமாணத்தினை முன்பு அதிகாரி என்று நிச்சயிக்கப்பட்டவர், ஷ்ருதி, ஸ்மிருதி, யுக்தி மற்றும் தன்னுடைய அனுபவம் கொண்டும், பரம்பரையாக பிராப்தி செய்யப்பட்ட பிரம்மதத்துவத்தை உணர்ந்தறிந்த ஆசாரியாரின் உபதேசப்படி விசாரித்து ஷ்ருதி விரோதமான தர்க்கங்களை விடுத்து ஸ்ருதி அனுசரித்த தர்க்கங்களை செய்து, வியாதி நீங்கும் வரை மருந்து உட்கொள்வது போல, பிரம்ம சாக்ஷாத்காரம் ஏற்படும் வரையிலும் ஷ்ரவணாதிகளை கைவிடாமல் இடைவிடாமல் அனுஷ்டிக்க வேண்டும். மீண்டும் மீண்டும் என்று திடமான ஞானம் உண்டாவதற்கு என்பதனை ஒன்பது முறை தத்துவமஸி என்ற வாக்கியத்தினை உபதேசித்தது மூலம் ஷ்ருதியே காண்பித்து கொடுத்திருக்கின்றது.
-13-

த்வம் பதார்த்ததினை இப்படி காண்பித்த பிறகு, தத் பதார்த்ததினையும் காண்பிக்கின்றார்.

**एवं विश्वस्य हेतुं प्रकृतिमभिदधुः केऽपि केचित्पराणू**
**नीशेनाधिष्ठितांस्तान् कतिचन कतिचिन्नश्वरं ज्ञानमेव ।**
**अन्ये शुन्यं विरिंचिं कतिचन समयं केऽपि केचिद्यदृच्छां**
**कर्माऽन्ये ब्रह्म मायाशबलितमपरे सोऽपि तस्माद्विमृश्यः ॥ १४ ॥**

ஜகத் முழுவதிற்கும் காரணம் என்று ஒவ்வொருவராலும் இப்படி பலவிதமாக ஏற்க்கப்படுகின்றது. சாங்கிய மதத்தினர் **சத்துவ, ரஜஸ் மற்றும் தமஸ்**

ஆகிய குணங்களின் சமானநிலையில் உண்டாகும் பிரதானம் எனப்படுகின்ற மூலபிரகிருதியை காரணம் என்று ஏற்கின்றனர்.

ஜைனர்களும், பௌத்தர்களில் ஒரு பிரிவினரும் பிருதிவி, நீர், அக்னி, வாயு ஆகிய பரமாணுவினால் கர்ம சக்கிரத்தினால் அவித்யா முதலிய நிமித்ததினால் உண்டாவது என்று ஏற்கின்றனர். பாதஞ்சல, நியாய மற்றும் வைசேஷிகர்கள் பரமானுவிலிருந்து உண்டானது என்று ஏற்றாலும் அது ஈஸ்வரனின் சிருஷ்டிக்கும் பிரவிருத்தியினால் உண்டானது என்று ஏற்கின்றனர்.

**விஞ்ஞானவாதிகளான** பௌத்தர்களோ அது க்ஷணிகம் என்று ஏற்பதினால் அசத்காரணத்தினால் உண்டானது என்று ஏற்கின்றனர். இவர்களின் மதத்தில் விஞ்ஞானம் மட்டுமே உண்மையானதால் மற்வையெல்லாம் எப்பொழுதும் (முக்காலத்திலும்) இல்லாததாகவே ஏற்கப்படுகின்றது.

**மாத்தியம சித்தாந்திகளான** பௌத்தர்களோ என்றால், முன்பும், பின்பும், எது இல்லையோ அது நடுவிலும் எப்பொழுதும் இல்லாததாக, சூன்யமாக ஏற்கின்றனர்.

ஹிரண்யகர்பவாதிகளோ, ஹிரண்யகர்பமே அதற்கு காரணம் என்று கூறுகின்றனர். லோகாயிதர்களான சார்வாக்கர்களோ சுபாவம் காரணமாகவே ஜகத் உண்டானது என்று ஏற்கின்றனர். எப்படி விதையிலிருந்து முலைவருவது சுபாவமோ அதுபோல என்று கூறுகின்றனர்.

காலமே காரணம் என்கின்றனர் கால வாதிகள் இவர்களுக்கு எப்படி சமயத்தில் (சில மாதத்தில்) பூக்கும் பூ மற்றும் காய்களினால் வேறு சமயத்தில் உண்டாவது காணப்படவில்லையோ அதனால் காலமே என்கின்றனர்.

ஈஸ்வரனை ஏற்காத சிலரோ சிருஷ்டியானது அகஸ்மாத்தாக உண்டானது என்று எற்கின்றனர். கர்மத்தினை காரணமாக மீமாம்ஸர்கள் ஏற்கின்றனர். கர்மத்தினால் ஏற்படும் புண்ணிய பாபங்களே காரணம் என்று ஏற்கின்றனர்.

வேதாந்திகளோ என்றால் **அநிர்வசனமான** மாயையினால் பலவாக

தோன்றும் இந்த ஜகத்தனாது அந்த பிரம்மத்திலிருந்தே உண்டானது என்கின்றனர். எப்படியென்றால் சத்தான உடலிலிருந்து முடி தோன்றுகின்றனவோ, கயிறில் பாம்பு தோன்றுகின்றதோ அப்படியே பிரம்மத்திலிருந்து வேறல்லாதாக பிரம்மமே அபிந்ந நிமித்த உபாதான காரணமாக இருக்கின்றது என்கின்றனர்.

இப்படி இந்த ஜகத்திற்கு காரணமும் பலவாக பிறரால் ஏற்கப்படுவதால் இதுவும் விவேகமுள்ள முமுக்ஷுக்களால் நன்றாக விசாரிக்கப்படவேண்டியதாக உள்ளது. -14-

இப்படியே, எல்லாவிதமான விசாரணைகளையும் முன்நிருத்தி சாஸ்திர சம்மதமான தர்கங்களை கொண்டு விசாரிக்கும் பொருட்டு **ஜன்மாத்யஸ்ய யத**, **சாஸ்த்ரயோனித்வாத்** மற்றும் **தத்துசமன்வயாத்** ஆகிய அடுத்த மூன்று சூத்திரங்களின் பொருளைக்கொண்டு அடுத்த சுலோகம் கூறப்படுகின்றது.

**यस्मादुत्पत्तिगुप्ती क्षतिरपि जगतां यच्च शास्त्रैकयोनिः**
**सर्वज्ञं मायया यत् सहजसुखसदद्वैतसंवित्स्वरूपम् ।**
**तत् ब्रह्म स्वप्रकाशं श्रुतिशिखरगिरां सैवतात्पर्यभूमिः**
**स्वात्माऽसौ यं विदित्वा जनिमृतिजलधिं निस्तरन्तीह सन्तः ॥ १५ ॥**

முன்பு கூறப்பட்ட அபின்னநிமித்த உபாதான காரணமான எந்த பிரம்மத்திலிருந்து, இந்த காணப்படும் சிறு பூச்சி முதல் அந்த பிரம்மா வரையில் எல்லாமே உண்டானதோ, உண்டானதுபோல உள்ளதோ, எது இப்படி உண்டானதினை காப்பாற்றுகின்றதோ, எதில் இந்த சிருஷ்டி முழுவதும் லயம் அடைகின்றதோ, அது பிரம்மம். இங்கு **ஜன்மாத்யஸ்ய யத** என்கிற சூத்திரமும் ஷ்ருதிவானது **யதோ வா இமானி பூதானி ஜாயந்தே, யேன ஜாதானி ஜீவந்தி, யத் பிரயந்த்யபிவிஷந்தி, தத் விஜிஞாசஸ்வ, தத் பிரம்ம இதி** (எதிலிருந்து இந்த சிருஷ்டி முழுவதும் உண்டானதோ, எதனால் இது பாலனம் செய்யப்படுகின்றதோ, அழிந்ததும் எதிலிவை லயம் அடைகின்றதோ அதனை அறியவேண்டும், அதுவே பிரம்மம் என்று ) என்று எந்த தத்துவத்தினை கூறியதோ அது விளக்கப்பட்டது. இங்கு தோன்றுவது போல என்று கூறி பின்பு அதன் பாலனம்

முதலியவை குறிப்பிட்டது அந்த பிரம்மம் சேதனமான வஸ்து என்பதை காண்பிக்கவே. ஏனென்றால் அந்த இரண்டற்ற பிரம்மத்தை இந்த ஜகத்தினை மித்தியா என்று நிச்சயிக்காமல் அதனை அறியமுடியாது. ஜகத் மித்தியா என்று நிரூபிப்பதனால் அது நிரூபிக்கப்பட்டதுபோலவே ஆகின்றது என்பதாலும், வேதாந்த சித்தாந்தத்தில் **அத்தியாரோப மற்றும் அபவாதம்** (ஏற்றிபார்த்தல், நீக்குதல்) மூலமாக நிரூபிக்கப்படுகின்றது. இதனால் பிரம்மமானது சர்வஞ்ஞம், சர்வ சக்தி சம்பண்ணம் முதலாக ஷ்ருதியினால் கூறப்பட்ட வாதம் நிரூபணமாகின்றது.

இப்படிப்பட்ட சிருஷ்டி, ஸ்திதி மற்றும் லயத்திற்கு இரண்டற்ற காரணமான பிரம்மம் என்று கூறப்பட்டது. எல்லாவிதமான வித்யைக்கும் ஸ்தானமான ரிக்வேதம் முதலியவை எந்த பிரம்மத்திலிருந்து வந்ததோ, அதனை சிருஷ்டி செய்ததால் பிரம்மமே இந்த சாஸ்திரத்திற்கு யோனி (தாய்) என்பதால் அதன் சர்வஞ்ஞத்துவ தன்மை நிச்சயம் ஆகின்றது. அல்லது எந்த பிரம்மத்திற்கு சாஸ்திரமே பிரமாணம் என்றாகின்றது.

இந்த சிருஷ்டியானது, பாலானது உறை ஊற்றியபின்பு முழுவதும் தயிர் ஆவது போல பிரம்மம் முழுவதும் ஜகத்தாகின்றது என்று சிலர் வாதிக்கலாம். அப்படி ஏற்றால் ஜகத்தே பிரம்மம் அதனை தவிர வேறு இல்லை என்ற நிலையாகும் சரி பாதி பிரம்மமமாகவும், மீதி ஜகத்தாகவும் என்று ஏற்றால் பாதி முட்டை குஞ்சு பொறிக்க மீதி முட்டையை உண்ணுவது போலாகும். இதனால் பிரம்மம் அநித்தியம் என்றாகும் என்பதால் **மாயாந்து பிரகிருதிம் வித்யாத் மாயினம் து மஹேஷ்வரம்** என்ற ஷ்ருதி மற்றும் **யா மா ஸா மாயா** என்பது போல எது முடியாதோ அதையும் உண்டாக்குவது மாயா என்பது போல என்பதால், மித்யாவான பாம்பானது எப்படி கயரில் தோன்றுகின்றதோ. அது ஞானத்தினால் நீக்கப்பட்டபோது கயிரில் எந்த மாற்றமும் எப்படியாகாதோ அதுபோல, ஜகத்தானது நமது அவித்தையின் காரணமாக தோன்றுவது என்பதால் அதனை விளக்க கற்பிக்கப்பட்ட விஷயமான மாயையும் மித்தியா என்றாகும். பிரம்மத்தின் மாற்றம் ஜகத் என்பதல்ல. அத்யாஸம் எங்கு செய்யப்பட்டதோ, அது எதில் செய்யப்பட்டதோ அதன் குணத்தையோ, தோஷத்தையோ அடைவதில்லை என்பதாலும், **ஆனந்தோ பிரம்மேதி விஜானாத்** . **சத்யம் ஞானம் அனந்தம் பிரம்ம**, **ஷாந்தம் ஷிவம் அத்வைதம்** முதலிய ஷ்ருதீ வாக்கியத்தினால் சத்தியம், ஞானம்,

ஆனந்தம் இவைகள் எந்த பிரம்மத்தின் சுபாவமாகவே இருக்கின்றதோ, மூல வியாக்யானத்தில் **ந வித்யதே த்வைதம் யஸ்ய** என்**று பஹுவ்ரீஹீ** சமாஸம் செய்யப்பட்டள்ளது. எதனுடைய இரண்டு என்பதே இல்லையோ என்று ஏற்பது சால சிறந்தது.

அப்படிப்பட்ட தானே ஒளிர்கின்ற ஸ்புரண சுபாவமாக இருப்பனால், எதனை விளக்க வேறு ஞானம் அவசியமில்லையோ அப்படிப்பட்ட பிரம்மானது, என்பது வேதாந்த சாஸ்திரத்தினாலேயே அறியப்படுகின்றது. தத்துசமய்வயாத் என்று வேதாந்த வாக்கியங்களும் இதனையே குறிப்பதாக இருக்கின்றது.

இப்படி விசேஷணம் உள்ள பிரம்மத்தினால் நமக்கு என்ன பிரயோஜனம் என்று சரியாக இதுவரை படிக்காததால் யாராவது கேட்டால், இப்படி கூறப்பட்ட பிரம்மானது தன்னுடைய உண்மையான சுவரூபமே என்பதினை விளக்குவது என்று மட்டும் ஏற்கவேண்டும்.

இப்படிப்பட்ட பிரம்மம் தானே என்றறிந்து **பிரம்மவித் பிரம்மைவ பவதி** (பிரம்மத்தை அறிந்தவர் பிரம்மமாக ஆகிறார்) என்பதால் கூறப்பட்ட சாதன சதுஷ்டயம் உள்ள அதிகாரியானவர் ஆசாரியாரின் உபதேசப்படிக் கேட்டு விசாரித்து அந்த பிரம்மத்தை இந்த ஜன்மத்திலே அறிந்து பிறப்பிறப்பு என்கிற பிறவி கடலை கடந்து மீண்டும் பிறப்பில்லாத நிலையை அடைவார்கள் **தரதி ஷோகம் ஆத்மவித்** (ஆத்மாவை அறிந்தவர் சோகத்தை கடக்கிறார் ) என்பதால் – 15–

இதனால் பிரம்மமே ஜகத்காரணம், அது சத், சித், ஆனந்த , அத்வைய ஸ்வரூபம், அது சுயம்பிரகாஷம், எல்லா வேத வாக்கியமும் அதையே குறிக்கின்றது. அதுவே பிரத்யகாத்மா என்று விளக்கப்பட்டது. இதை விளக்கும்போது ஜீவன் முக்த நிலையும் காண்பிக்கப்பட்டது என்பதால் இனி இந்த கிரந்தத்தினை தொடர எந்த அவசியமும் இல்லை என்றாகும் நிலையில் , பூர்வபக்ஷிகளின் மதத்தினை முழுவதும் நிராகரிக்காததால், அதனை நிராகரித்து அத்வைத சித்தாந்தத்தினை சாதிப்பதற்கு கிரந்தம் தொடருகின்றது.

**साङ्ख्यैः प्रख्यापितम् न क्षममिह जगतां निर्मितौतत्प्रधानं**

**हेतुर्नैतादृशेऽर्थे प्रभवति गदितस्तार्किकैरीश्वरोऽपि ।**

**नाणुः काणादबौद्धक्षपणकभनितो नापि निस्साक्षिशून्यं**

**तस्मादास्माकमेव श्रुतिगदितपरब्रह्मसिद्धं निदानम् ॥ १६ ॥**

சாங்கியர்களால் ஏற்க்கப்படும் இந்த ரஜஸ் . சத்துவ மற்றும் தமஸ் ஆகிய குணங்களில் சமான அவஸ்தையினாலேயே இந்த ஜகத்தானது உண்டானது என்பது ஏற்புடையது அல்ல. காரணம் அசேதனமான குணங்கள் சேதனமான புருஷனின் போகத்திற்காகவும், மோக்ஷத்திற்காகவும், மஹத், அஹங்காரம் முதலியவைகளாக பரிணமிக்கின்றது என்பது அசேதனமான மண் தானாகவே குடம் போன்றவைகளை செய்வதற்கு சமமானதாக இருக்கும்.

ஈஸ்வரன் பிரதானத்திலிருந்தோ, பரமாணுவிலிருந்தோ இந்த ஜகத்தை உண்டாக்கினார் என்று பாதஞ்சல, நியாய மற்றும் வைசேஷிக மதத்தினர் ஏற்பதும் அதற்கு எல்லா காரியங்களுக்கும் ஈஸ்வரன் நிமித்த காரணமாக இருக்கமுடியாது என்று ஷ்ருதி விசேஷமானதாக இருப்பதாலும், ஈஸ்வரனை ஷ்ருதி நிமித்த காரணமாக ஏற்காததாகவும் உள்ளது என்பதால் அதுவும் சரியல்ல.

பௌத்தர்களில் **சௌத்ராந்திகரும், வைபாஷிகரும்**, ஜைனர்களும் எப்படி துணியானது நூல் கொண்டே பின்னுவதால் உண்டாகின்றதோ அந்த நூலும் பஞ்சிலிருந்து உண்டாவதால், பஞ்சும் அதன் அவயவத்திலிருந்து என்று முறையாக சென்று ஆகாயம் தவிர மற்ற நான்கு பூதங்களின் பரமாணுவிலிருந்து இந்த சிருஷ்டி கிரமமாக **த்வியனுக், த்ரெஸ்ரேனு** என்று ஜகத் உண்டானது என்று கூறுகின்றனர். ஆனால் இவர்களின் பரமாணுவே க்ஷணிகமான இருப்பதால் அதிலிருந்து சிருஷ்டியானது நடக்க வாய்ப்பில்லை. சிருஷ்டியை நிரூபிக்க வழியும் இல்லை.

சரி, இப்படி வேறு வழிகளில் இதனை நிரூபிக்க முடியாததால் ஜகத் உண்டாவதற்கு காரணம் சூன்யமே என்று **சூன்யவாதிகளான** பௌத்தர்கள் ஏற்கின்றனர். அதுவும் சரியல்ல ஏனெனில் சிருஷ்டிக்கு முன்பு இந்த சூன்யமானது

சாக்ஷியுடையதாகவா அல்லது சாக்ஷியற்றதாகவா இருந்தது என்று கேட்டால் முதலில் சூன்யவாதமே இல்லாதாகிவிடும். மேலும் எந்த பிரமாணத்தினாலும் நிரூபிக்க முடியாததாகிறதால் சூன்யம் ஜகத்காரணம் என்பதும் சரியல்ல. ஆனால் விதையானது அழிந்து (சூன்யத்திலிருந்து ) அங்குரம் (முலை) உண்டாகின்றது என்றும் அதனால் விதையின் சூன்யத்தன்மை சித்திக்கின்றது என்று ஏற்கமுடியாது. முதலில் விதையானது முலையாக மாறுகின்றது. இரண்டாவது சம்ஸ்காரமாக எல்லா பொருட்களிலும் இருத்தலை ஏற்பதினாலும் சூன்யவாதிகளின் மதமும் மறுக்கப்படுகின்றது.

இப்படியே எல்லாருடைய நிலைபாடுகளும் தகர்ந்து போனதால் வேதாந்திகளின் மதமான ஷ்ருதிகளினால் நிரூபிக்கப்பட்டதும், எல்லாருடைய அனுபவ சித்தமானதுமான இந்த உன்னதமான பிரம்மமே இந்த ஜகத்தின் காரணம் என்பது நிரூபணமாகின்றது. -16-

இதுபோல, சாமான்யமாக நிராகரிக்கப்பட்டும், வேதாந்த மதம் நிரூபிக்கப்பட்டும், சில மந்த புத்தியுள்ளவர்கள், கபிலர் முதலியவர்களை மஹரிஷி என்று ஏற்கப்பட்டதாலும், வேத வாக்கியங்கள் அவர்களை புகழுவதாலும் அவர்களின் வார்த்தையை உண்மை என்று ஏற்று அதன் வழியே மோக்ஷத்தினை அடைய துணிவார்கள் என்பதால், **சதாசிவ சமாரம்பாம்** என்பதால் சிவன் முதல் **பாதராயணர், பகவத்பாதர் சங்கராசாரியர்** ஆகிய பரம்பரையாக குருவிற்கும். அவரால் தனக்கும் கிடைத்த தர்க்கங்களால் (சூத்திரம், பாஷ்யம் முதலியவைகளில் கூறப்பட்ட) ஒவ்வொரு மதத்தினையும் நிராகரிக்க துவங்கி முதலில் **பிரதான மல்லன் நிவர்ஹன** நியாயத்தினால் , உலக வீரனை வெல்வதால் மற்றைய வீரர்களை சென்றது போல என்பதால் சாங்கியர்களின் மதத்தினை நிராகரிக்க துவங்குகின்றார்.

नाचैतन्याप्रधानं प्रभवति चलितुं तन्निसर्गाक्रियं चेत्
नित्यं सर्गप्रसङ्गो नियतिरपि यतः सर्गपूर्वा न पूर्वम् ।
बन्धो निर्हेतुकः स्यात्कथमथ न भवेद्बन्धमोक्षाव्यवस्था
निःसौख्यंनापि मोक्षंस्पृहयति मतिमान्कापिलं तेनदुष्टम् ॥ १७ ॥

சாங்கியர்கள் முக்குணங்களும் சமமான அவஸ்தையில் உள்ள பிரதாணத்தின் அசைவினால் மஹத் முதலிய விகாரங்களாக அதிலிருந்து உண்டாயிற்று என்று கூறுகின்றனர். ஆனால் உண்மையில் இந்த அசைவு என்பதே அதில் உண்டாக வாய்ப்பில்லை. ஏனெனில் அது தானே சைதன்யமற்றதாக இருப்பதல்லாமல் வேறு ஒரு சைதன்யத்தையும் சார்ந்தல்லாது இருப்பதினால், பானை முதலியது போல என்று நிராகரிக்கப்படுகின்றது.

ஆனால் சாங்கியர்களோ, எப்படி குழந்தை வளர்வதற்கு பாலானது தானே சுரக்கின்றதோ அப்படி புருஷனின் பிரவிருத்திக்கு வேண்டி பிரதானமானது அசேதனமானாலும் தானே பிரயத்தனம் செய்கின்றது என்கிறார்கள். இது சரியல்ல, ஏனெனில் குழந்தைக்கு பாலும், உயரத்திலுள்ள நீர் கீழே பிரவிருப்பதும் ஈஸ்வரனின் நியமப்படி என்று வேதமானது கூறுவதால் உதாரணத்தினை நிரூபிக்க இயலாது.

ஆனால் சத்துவமானது எடையற்றதாக இருப்பதாலும், தமஸானது எடையுள்ளதாகவும், இதன் இடையில் உள்ள ராஜஸமானது இரண்டின் சுபாவமும் உள்ளதால் ஒன்றினால் மேலேழும்புதலும் மற்றதினால் கீழே இழுக்கப்படுவதாலும் அசைவு உண்டாகும் என்று கூறினால், பிறகு பிரதானமானது சுபாவத்திலேயே அசைவுடையதாலும் அது நிற்க எந்த காரணமும் இல்லாததாலும் எப்பொழுதும் ஸ்ருஷ்டி உண்டாவதும், நாசம் என்பது எப்பொழுதும் இல்லாததாகவும் ஆகும் என்கிற நிலையே உண்டாகும். இதனால் குணங்கள் சமான நிலையில் இருக்கும் பிரதானமும் நிராகரிக்கப்படுகின்றது.

ஆனால் உயிரினங்கள் முன் ஜன்மத்தில் சேர்த்த புண்ணிய பாவங்களால் இந்த சிருஷ்டியானது உண்டாயிற்று என்று கூறினால் அதுவும் சரியல்ல, ஏனென்றால் முன்புள்ள சிருஷ்டி என்பதே நிரூபிக்கப்படவில்லை என்றாகிறதால், இதனால் **பூர்வசிருஷ்டி** நிரூபிக்கப்பட்டாலே பிரதானம் பிரவிருத்திக்கும், பிரதானம் பிரவிருத்தித்தாலே பூர்வ சிருஷ்டி உண்டாகும் என்று **அந்நியோன்யாஷ்ரய தோஷம்** உண்டாகின்றது. அது மட்டுமல்லாமல் பற்றற்ற உதாசீனமான புருஷன் வாஸ்தவமாகவோ அல்லது ஏற்றிப்பார்ப்பதினாலேயே பிரகிருதியுடன் எந்த சம்பந்தமும் ஏற்பதில்லை என்பதால் பந்தமானது

காரணமின்றியா அல்லது எந்த சம்பந்தமும் இல்லையென்ற காரணத்தினாலா என்று கேள்வி எழும். முதலாவது (காரணமின்றி) என்றால் எந்த வகையான முயற்சியாலும் நீக்கமுடியாது போவதால் மோக்ஷம் ஒரு போதும் உண்டாக வாய்ப்பில்லை. சரி, இரண்டாவது காரணத்தினை (சம்பந்தமற்றது) ஏற்றால் முக்தியடைந்தவரும் மீண்டும் பந்தத்திலேயே இருக்க நேரிடும் என்கிற நிலை உண்டாகும்.

இப்படி ஆனந்தமற்ற கல் போன்ற நிலையுடைய ஒரு முக்தியை அடைய புத்தியுள்ளவர் ஒருவரும் ஆசைபடமாட்டார்கள் என்பதால் இந்த சாங்கிய மதத்தினை ஒருவரும் அறிய முயற்சிக்க மாட்டார்கள். ஆனால் நாங்கள் மூன்று விதமான துக்கத்தினை முழுமையாக தீர்க்க வேண்டி உபதேசிக்கின்றதால் இதில் பிரவிருத்தியானது உண்டாகும் என்றால், அது சரியல்ல, ஏனெனில் முன்பு கூறியதுபோல துக்க நிவிருத்தியானாலும் சுகம் அடைதல் இல்லாததால் ஒருவரும் இன்பமற்ற நிலையை விரும்பமாட்டார்கள்.

இது மட்டுமல்லாமல் சாங்கிய மதத்தின் ஆத்மாவானது அனுமானத்தினால் அறியப்படுவதாகின்றதால், தனியானவரின் ஆத்மாவும், பரமாத்மாவும் எந்தவித வேறுபாடும் இல்லாது போகும் என்ற நிலையுள்ளதால் அடுத்தவரின் துக்கத்தினை போல தன்னுடையதும் அனுபவிப்பது என்பது இயலாதாகின்றது. இந்த காரணங்களால் கூறப்பட்ட முறையில் விசாரித்து தோஷமுள்ள இந்த சாங்கிய (கபிலரின்) சித்தாந்தத்தை நிராகரிக்கப்படவேண்டும். - 17 -

**किञ्चाऽकर्तैव भोक्ता यदि तव कृतहानाकृताभ्यागमः स्या**
**त्कीदृग्भोगोऽप्यसङ्गेऽनतिशयिनि भवेत्तेन भोग्यस्य कोऽर्थः ।**
**किदृक्कस्याविवेकः कथमत स भवेद्भोगहेतुर्विवेकः**
**कस्य स्यत्तेन किम् स्यादिति हि विमृशतो दुर्वचं ब्रह्मणोऽपि ॥ १८ ॥**

கர்த்தாவான பிரகிருதியோ போகத்தினை அனுபவிக்காததால், அகர்த்தாவான புருஷன் போகம் அனுபவிப்பதாக ஏற்றால், **கிருதஹானி அகிருத அப்யாகம** என்ற தோஷம் உண்டாகின்றது. அதாவது ஒருவர் செய்யும் கர்மத்திற்கு

அவர் பலன் அனுபவிக்காதது மட்டுமல்லாமல் அவர் செய்யாத கர்மத்தின் பலனையும் அனுபவிக்கவேண்டிவரும். ஆனால் கர்த்தாவினால் உந்தப்பட்ட போக்தாவாக நாங்கள் இதனை ஏற்கவில்லை. சக்தியாக மட்டுமே அதாவது சிருஷ்டி செய்யும் சக்தியுடையதால் குணங்கள் போக்கியம் என்றும், பார்க்கும் சக்தியுடைதினால் புருஷன் போக்தா என்றும் ஏற்கின்றோம் என்றால், அதுவும் கூட ஏற்கமுடியாது. எப்படி குணத்துடன் எந்த சம்பந்தமும் இல்லாத, குணத்தினால் ஏற்படும் சம்பந்தத்திற்கும் ஆதாரமில்லாத புருஷனில் போகத்தினை கூறமுடியும். ரஜோ குணத்தினால் சத்துவம் சூடாக்கப்படும்பொழுது (உந்தப்படும்போது) சத்துவகுணமுடைய புருஷனும் அதனால் சூடாக்கப்படுவது போல உபசாரமாகவும் போகத்தினை ஏற்க இயலாது. எப்படி நெருப்பை போன்றவர் என்று கூறும்போது சம்பந்தபட்டவர் எதையும் எரிப்பதையோ அல்லது வெளிச்சப்படுத்துவதையோ காணமுடியாததாகையால்.

ஆனால், பிரதானமானது புருஷனுக்காக போகம் கொடுக்க பிரவிருத்திக்கும்போது தனக்காகவும் என்ற உத்தேசத்துடனேயே செய்கின்றது. சேவகன் முதலாளிக்கு செய்யும் வேலைபோல என்று கூறுவதும் முடியாது. அசேதனமான பிரதானத்திற்கு எந்த உத்தேசமும் இருக்க முடியாது. ஆகையாலும் அது சேதனமற்றதால் பிரவிருத்தியும் செய்வது என்பது இயலாது என்பதாலும்.

ஆனால் **பங்கு அந்தயோரிவ தத் கிருதஸ்ஸர்க** என்று சாங்கிய காரிகையால் கூறியது போல அவிவேகத்தினால் அவை ஒன்றாகியது போல, எப்படி குருடனும் நொண்டியும் ஒருவருக்கொருவர் உதவியாக இருக்கின்றார்களோ அப்படியென்று ஏற்றால்., என்றால் அதுவும் முடியாது. அந்த விவேகம் எப்படிப்பட்டது விவேக ஞானத்தின் இன்மையா, இல்லை ஒன்றான ஞானமா, முதலாவது இல்லை ஏனென்றால் அபாவ பிரமாணத்தினை சாங்கியர்கள் ஏற்பதில்லையாதலால், இரண்டாவதும் (ஐக்கிய ஞானம்) வேறுவேறானதில் ஞானத்தின் ஒற்றுமையை ஏற்கமுடியாது அதுமட்டுமல்லாமல் **அந்நியதாக்யாதியை** சாங்கியர்கள் ஆதரிப்பதால், மூன்றாவதும் இருக்க முடியாது ஏனெனில் அனுபவமில்லாமல் சம்ஸ்காரமானது ஏற்கபடாததால்.

அவிவேகம் கூறப்பட்டவகையில்லாமல் வேறுவகையாக இருந்தாலும், அது பிரகிருதிக்கா, காரியத்திற்கா அல்லது புருஷனுக்கா, தர்மமாகின்றது என்று

கேள்வி எழும்புகின்றது. முதலிரண்டும் இருக்க இயலாது. அவை சேதனமற்றதால் மூன்றாவதும் ஏற்புடையதல்ல. நிர்விகாரமான, அசங்கனான அறிவு மாத்திரமே சுவரூபமாக இருக்கும் புருஷனுக்கு அறிவின்மை என்கிற தர்மம் கூறமுடியாது.

சரி, அவிவேகம் ஏற்கப்பட்டாலும்கூட, அது எப்படி போக காரணமாக இருக்க முடியும். போகத்தினை உண்டாக்கும் சக்தியற்றது. அதனால் இல்லையென்றால் விருப்புள்ளவைபோல, விருப்பற்ற போக்கியமானதாக இல்லாத விஷயத்திலும் போக்யத்தன்மை வரும்.

அவிவேகத்தினை போல, விவேகமும் யாருக்கு என்ற கேள்வி எழுகின்றது. அது மட்டுமல்லாமல் புருஷனில் அத்யாசமாகவோ அல்லது உண்மையாகவோ ஞானத்தினால் நீக்கப்படும் பந்தமானது ஏற்கப்படாததால் குணங்களும் நித்தியமானதால் மோக்ஷம் என்பது ஏற்பட முடியாததாகையால் விவேக ஞானமானது ஒரு பிரயோஜனமும் இல்லாததது.

இப்படி கூறப்பட்ட முறையில் **சாங்கிய மதத்தினையும், ஹிரண்யகர்ப்ப தர்ஷணத்தினையும்** விசாரித்து நிராகரிக்க வேண்டும். -18-

நிமித்த காரணமாக ஈஸ்வரனை ஏற்கும் **பாதஞ்லி, மாஹேஸ்வர, நியாய, வைசேஷிக மதத்தினையும்** அடுத்த இரண்டு சுலோகங்களினால் நிராகரிக்க.

नेशोऽधिष्ठातुमीशोऽतनुकरणगुणस्तार्किकाणां प्रधानं
स्यच्चेत्तन्वक्षवत्त्वं सुचरितदुरोद्भूतभोगप्रसङ्गः ।
दुःखाढ्यं कुर्वतोऽस्य प्रसरति विषमाचारनैर्घृण्यदोषः
कर्मैप्सोश्चक्रकऽवस्थितिहतिविफलत्वाऽन्यथासिद्धयःस्युः ॥१९॥

உள் மற்றும் வெளி இந்திரியங்களும், உபகரணங்களும், அதன் குணங்களான ஆசையும் பிரயத்னமும் இல்லாத வெறும் ஞானஸ்வரூபமான ஈஸ்வரன், அவயவம் ஆகாதவரும் அதனால் ரூபமற்றதால் பிரத்யக்ஷம் ஆகாதவரும் அதனால் காரியங்களை உண்டு பன்னும் சமர்த்தியமற்றவர் என்றும்

தர்கத்தினால் அதன் அனுமானத்தினாலேயே, ஈஸ்வரின் இருப்பை ஏற்று நிரூப்பிபவர்களான பாதஞ்சலி, மஹேஸ்வர, நியாய, வைசேஷிகர்களின் ஈஸ்வரனின் நிராகரிப்பு.

ஆனால் சரீர முள்ளவர்களும் சில இந்திரியங்கள் இல்லாத போனாலும் வேறு வழிகளாலோ, வேரொருவரின் மூலமோ எப்படி வேலைகளை செய்விக்கின்றார்களோ அப்படி சூக்ஷ்மமான இந்திரியங்களுடைய பிரதானம் முதலியவையையே ஈஸ்வரினின் சரீரம் என்று ஏற்றால் புண்ய மற்றும் பாபத்தினால் உண்டாகும் அனுபவங்கள் எப்படி ஜீவனை பாதிக்கின்றதோ அப்படியே ஈஸ்வரனுக்கும் என்றாகும். ஏனெனில் தேகம் என்பது **போகாயதனம்** என்பதால், அதாவது அனுபவத்திற்கு இடம், என்ற நியமத்தியால், அதுமட்டுமல்லாமல், ஈஸ்வரணானவர் கருணைகடலாததால், ஆசாபாசங்களற்றவரானதாலும் சுதந்திரமானவர் என்பதாலும் அவர் சிருஷ்டியில் உள்ள மக்களின் துன்பத்தை பிரவிருத்திப்பார் என்று ஏற்பதால் அவர் தானே செய்கின்றாரா அல்லது வேரொருக்காகவா. வேறெருவருக்கு என்றால், அவரும் இன்னொருவருக்கு என்று அனவஸ்தா தோஷம் மற்றும் ஈஸ்வரனும் ஜீவனை போன்றவராவார். சரி, அப்படியில்லாமல் தானே என்றால் இன்னும் அதிக கஷ்டம், அப்படிப்ட்ட ஈஸ்வரனை கொண்டு, சிலரை நித்தியமாக சுகத்திலும், சிலரை நித்தியமாக துன்பத்திலும், சிலரை இரண்டுவிதமாகவும் ஏற்ற-இறக்கங்கள் உள்ளதால் அப்படிப்பட்ட ஈஸ்வரன் கொடுமையானவராகவும், கருணையற்றவராகவும் இருப்பரென்ற தோஷங்கள் உண்டாகும்.

இப்படிப்பட்ட தோஷங்களை நீக்க அவர் பிராணிகளின் கர்மத்தினை அனுசரித்து அதற்கு ஏற்றாற்போல இன்ப-துன்பங்களை கொடுப்பவர் என்றால், மீண்டும் அவர் கர்மத்திற்கு அதீனமானவர் என்று ஆகின்றது. அதுமட்டுமல்லாமல் கர்மங்களுக்கு பலனை கொடுக்க ஈஸ்வரனும் மற்றொன்றை எதிர்பார்க்கும் அன்யோன்யாஷ்ரய தோஷம் உண்டாகும். முன் சிருஷ்டியில் செய்த வினைகளால் இந்த சிருடியில் பலன் என்றால், முன் சிருஷ்டியிலும் மேலே கூறிய அதே ஈஸ்வர மற்றும் கர்மத்தின் அன்யோன்யாஷ்ரய தோஷம் இருக்கும். அதனால் பிரமாணத்தினை ஏற்காமல் முன் சிருஷ்டியை ஏற்பதினால் குருட்டு பரம்பரையே ஆகும் தார்க்கிகள் தார்க்கிகர்களாக இருக்கமுடியாது என்றாகும் பிரமாணம் இல்லாதவர்களானதால்.

**பீஜாங்குரத்தை** போல என்று கூறமுடியாது. கோழியிலிருந்து முட்டையா அல்லது முட்டையிலிருந்து கோழியா என்பதில் நேர்மடையாகவோ அல்லது எதிர்மடையாகவோ ஒன்று பிரத்தியக்ஷமாக நிரூபணமாகின்றால், கர்மம் மற்றும் ஈஸ்வரனை குறித்த இடத்தில் பிரத்தியக்ஷமே இல்லாததால் அனுமானமே சரணம் ஆகும் என்பதால் பலனற்றதாக போகின்றது. கர்மத்தினால் ஈஸ்வரனும், ஈஸ்வரனால் பிரதானம் முதலியவைகளும் நியந்தரிக்கப்படுகின்றது என்று கூறமுடியாது. கற்பனை செய்வதிலும், இன்னும் சுலபமாக , கர்மத்தினாலேயே பிரதானம் முதலியவை நிபந்தரிக்கப்படுகின்றது என்று கூறமுடியும் என்பதால் நடுவில் ஒரு ஈஸ்வரன் தேவையில்லாததால்.

சிலர் , ஈஸ்வரன் அனுமானத்தினால் அல்ல, நாங்கள் ஆகமத்தினை கொண்டு நிச்சயிக்கின்றோம் என்கின்றனர். ஆகமத்தின் மூலமானது ஷ்ருதியானதால் என்றால், இது **பூர்வ மீமாம்ஸாவில்** நிராகரிக்கப்பட்டுள்ளது. அது மட்டுமல்லாமல், ஈஸ்வரனின் வசனமானதால் ஆகமம் தானேபிரமாணம் என்றால் அது சரியல்ல. ஆகமத்தினால் ஈஸ்வரனும் , ஈஸ்வரனால் ஆகமபிரமாணம் என்று அன்யோன்யாஷ்ரய தோஷம் உண்டாகுமென்பதால்.

ஆனால் வேதாந்திகள் ஏற்க்கும் ஈஸ்வரனிலும் கூறப்பட்ட தோஷங்கள் உள்ளன என்றால். அது சரியல்ல. நாங்கள் **அபின்னநிமித்த உபாதான காரணமாக** ஏற்கும் ஈஸ்வரன் மாயா கூடிய சைதன்யமான சர்வசக்தி உள்ளவராக இருப்பதினால் அப்படிப்பட்ட ஈஸ்வரன் ஷ்ருதியினால் நிரூபிக்க பட்டதால் அது வேறெதையும் எதிர்பார்க்காத பிரமாணமானதால், அப்படிப்பட்ட ஈஸ்வரனே ஜகத்தை உண்டாக்கினார் என்று கூறுகின்றோம். இதனால் பிரம்மனே இந்த ஜகத்திற்கு காரணம் என்று நிரூபிக்கப்பட்டதல்லாமல் மற்றவர்களின் ஈஸ்வரனும் நிராகரிக்கப்பட்டது . -19-

அசங்கன் , உதாசீனமானவன் மற்றும் சித்ரூபமான ஈஸ்வரன் பிரதானத்தினை நிர்வகிக்க சாமர்த்தியம் இல்லாதவர் ஆகுமானால், நித்தியமாக ஞானமும், ஆசையும், பிரவிருத்தியும் உடைய எல்லா மூர்த்தமான பொருட்களினும் சம்யோகம் என்று சம்பந்தத்தினை உண்டு செய்யும் ஈஸ்வரனானவர் மூர்த்தமான பரமானுவிலிருந்து இந்த ஜகத்தினை உண்டு

செய்வதில் எந்த பிரச்சனையும் இல்லை என்று நியாய-வைசேஷிகர்கள் கூறினால் அவர்களின் பக்ஷத்தையும் விசாரம் செய்து நிராகரிக்க அடுத்த இரு ஸ்லோகம்....

**सर्वज्ञः सर्वलिप्सुः सकलकृतियुतो नित्यमीशो यदिस्या**
**त्सर्वं कार्यं सदास्यादुदयभृतिलया यौगपद्येन च स्युः ।**
**बाह्योपादानवत्स्यत्तनुकरणधियां विश्वसर्गे व्यपेक्षा**
**निस्तर्कं चानुमानं कृतिरपिहियतश्चेष्टयऽर्थं विधत्ते ॥ २० ॥**

நித்தியமான ஞானம், இச்சா மற்றும் பிரவிருத்தியையுடைய ஈஸ்வரனை ஏற்பவரான எங்களுக்கு, நையாயிக, வைசேஷிகருக்கு ஒரு பிரச்சனையும் இல்லை என்றால் அது சரியல்ல. ஏனெனில் எல்லாமும் எப்பொழுதும் நடக்கவேண்டும். சில நேரங்களில் மட்டும் என்று ஒரு விஷயமும் இந்த உலகத்தில் இருக்கமுடியாது. அது மட்டுமல்லாமல், நித்தியமான சிருஷ்டியே நடக்க வேண்டும் என்கிற நிலையில் அதன் பாலனமும் நாசமும் நடக்கமுடியாது என்றாகிவிடும். இந்த தோஷத்திலிருந்து தப்பிக்கவேண்டும் என்று ஒரே நேரத்தில் சிருஷ்டி முதலியனவைகளின் இச்சா, ஆசை உண்டாகின்றது என்றேற்கின்றோம் என்றால் க்ஷணமாத்திரம் ஒரு விஷயம் உத்பத்தி என்று ஏற்க்கநேரிடும். இதனால் அதன் உற்பத்திக்கு முன்பும் பின்பும் அதனை பற்றிய அறிவு ஒருவருக்கும் இல்லாதிருக்கும் என்பது மட்டுமல்லாமல் முன்பு கூறிய தோஷமும் அப்படியே இருக்கும்.

உண்டானவையெல்லாம் ஒருவரால் உண்டாக்கப்பட்டது என்கிற நியமத்தினால், ஈஸ்வரனையும் கைகால் உள்ள ஒரு பானை பிடிப்பவர் போன்றவராக அனுமானம் செய்தால் அவருக்கும் அவயவங்கள் ஏற்கும்படியாகும். அப்படியானால் அவர் இந்த சிருஷ்டியை உண்டாக்க த்வியணுக்குகளை சேகரிக்க ஆசைகொள்ளவேண்டும். சிருஷ்டி ஆசையும் ஒரு காரியமானதால் அதனை உண்டாக்க ஒரு ஆசை என்று அநவஸ்தா தோஷமே உண்டாகும்.

அதுமட்டுமல்லாமல் கொடுக்கப்பட்ட காரியத்தன்மையுடையதால் என்கிற

தர்க்கமும், ஈஸ்வரனை சித்தம் செய்ய உபயோகிப்பதும் சரியல்ல, காரணம் பிரயத்தனம் என்பது ஒரு செயல் மூலம் காரியத்தை உண்டு செய்வது நேரடியாக இல்லை என்பதால், அந்த செயலும் ஒரு சரீரத்தினால் உண்டாக்ககூடிய ஒரு காரியத்தினை குறிக்கின்றதால் வேறு வகையை (ஜாதியை) சேருகின்றது. ஒரு பொருளை மேலே எரியும்போது அது ஒரு செயலின்றியே தானே கீழே விழுகின்றது என்பதால் எல்லா காரியத்திற்கும் ஒரு செயல் அவசியமற்றதாகின்றது. -20-

இப்படி தார்க்கிகர்களின் ஈஸ்வரனை குறித்த வாதத்தை நிராகரித்து பரமாணுவினாலும் இந்த ஜகத் உண்டாக்க முடியாது என்று. ..

**कस्मादण्वोः क्रियास्यात्कथमथ मिलितौ निष्प्रतिकौकथं वा**
**कार्यं ताभ्यां तृतीयं किमिति च न महत्पारिमाण्डल्यतः स्यत्।**
**तेभ्यः कस्मान्महान्स्यात्किमिति पुनरसावेव नित्यो न तेस्या**
**न्नित्यश्चाणुः कथं व निरवयव इति ब्रूह्यसत्कार्यवादिन्॥ २१॥**

நையாயிகர் மற்றும் வைசேஷிகர்கள் கூறும் பரமாணுவிலிருந்து சிருஷ்டி உண்டாயிற்று என்று கூறுவதும் முறையன்று. அவர்கள் கூறுவதுபோல பரமாணு கூடி த்வியணுக் ஆகி சிருஷ்டி ஈஸ்வரனின் இச்சையாலும் ஜீவர்களின் புண்ணிய பாவங்களாலும் உண்டாகும் இது இந்த பரமாணுக்களின் சேர்க்கை உண்டாலும் அவை அளவற்றதாக இருப்பதால் எங்ஙனம் த்வியணுக் முதலியவைகளில் அளவு கூடும். அதுமட்டுமல்லாமல் அசத்காரியம் என்று ஏற்பதால் காரியம் உண்டாவதற்கு முன்பும் அசத் இருப்பதாலும் அதிலிருந்து எப்படி சிருஷ்டியானது துவங்கமுடியும்.

சரி, இங்கு த்வியணுக் வரை அளவு இல்லாததாகவும் திரயணுவிலிருந்து அதற்கு அளவு உண்டென்று ஏற்கின்றோம் என்றால், அதுவும் முறையன்று பரமாணுவிலிருந்து சம்யோகத்தினால், சேர்க்கையினாலோ, த்வியணுக் முதலியவை உண்டாகமுடியும் ஆனால், பரமாணுவானது நித்தியமானது அவயவமற்றதும் என்று நீங்கள் ஏற்பதினால் அவைகளின் சம்யோகம் என்பது

எந்த காரணத்தினால் உண்டாகமுடியும். ஈஸ்வரனால் என்றால் அது நிராகரிக்கப்பட்டுவிட்டது. புண்ணிய-பாவங்களினால் என்றால் அதுவும் முடியாது எப்பொழுதும் பிரளயமானது உண்டாக்க முடியாது என்றாகிறதால் மூர்த்தமான திரவியங்களில் சம்யோகத்தினால் என்றால் அப்படி ஒன்றையும் பிரளய காலத்தில் ஏற்காததால், வேகத்தினால் என்றால் அதற்கு பிரமாணமும் இல்லாததால் இந்த காரணங்கள் கூறமுடியாது.

சரி, கிரியையை (செயலை) ஏற்றாலும், ஏதோ ஒரு அறியாத காரணத்தினால் செயல் உண்டாயிற்று என்று , அப்பொழுதும் பரமாணுவானது அவயவமற்றது என்பதால் எப்படி அது சேறும். ஒரு பக்கத்தில் என்று கூறமுடியாது. அப்பொழுது அவயவமற்றது என்று கூறியது தவறாகும். முழுவதும் என்றும் கூறமுடியாது. முழுவதும் என்றால் அளவு இல்லாத இரண்டும் முழுவதும் சேருவதால் அளவற்ற ஒன்றே உண்டாகும் என்பதால் இங்கும் முன்பு கூறியதுபோல, ஏதோ ஒரு காரணத்தினால் என்று, அதுபோல ஏதோ ஒரு கற்பனை செய்யப்பட்ட திசையில் என்றாலும் நீங்களும் மாயாவாதிகள் ஆகிவிட்டீர்கள். வரவேற்கின்றோம்.

இப்படி சேர்வதிலும் பிரச்சனையுண்டு, காரணம் தாதத்மிய சம்பந்தத்தினை தவிர வேறு எதனையும் நிரூபிக்க முடியாததாகையால் வேறு சம்பந்தத்தினால் என்று ஏற்பதில் என்ன பிரச்சனை என்று கேட்டால் அதுவும் பரமாணுவும் சேர வேறு ஒரு சம்பந்தம், அந்த சம்பந்தங்கள் இரண்டும் சேர மூன்றாவது என்று அநவஸ்தா தோஷமே உண்டாகும்.

முன்பு கூறியதுபோல பரமாணுவின் பரிமாணம் அனுவாக இருப்பதால் அதிலிருந்து மஹத்ரூபம் உண்டாக முடியாது. அசத்காரியவாதிகளான நீங்கள் (பௌத்தர் முதலியவரும் அசத்காரியம் ஏற்பதனால் அவர்களுடைய சித்தாந்தமும் நிராகரிக்கப்படுகின்றது.) அசத்திலிருந்து உண்டாகியது என்று கூறினால், இங்கு ஒன்றும் நியமமாக இருக்க வாய்ப்பில்லை . நெல்லை விதைத்தால் சோளம் உண்டாகும், கல்லிலிருந்து எண்ணை உண்டாகும், அசத் உற்பத்தி செய்யும் என்று ஏற்றாலும் அதற்கு காரணம் வேறொன்று என்று அநவஸ்தா தோஷமே உண்டாகும். இப்படி கூறும் சத்காரியவாதிகள், வேதாந்திகளின் நிலையும் அதே பிரச்சனைகள் உள்ளதாகும் என்றால் , எங்களுக்கு பிரம்மத்தினை தவிர வேறு காரணங்கள் ஏற்காததால், உண்டாவதும், அழிவதும், அநீர்வசனமான மாயாவினால் என்பதும்

ஒரு பிரச்சனை இல்லை. -21-

புத்தர்களின் சிஷ்யவர்கமான நான்கு பிரிவிலும் (**சௌத்ராந்திகம், வைபாஷிகம், யோகாசாரம் மற்றும் மாத்யமிகம்**) முதல் இரண்டு பிரிவும் வெளிவிஷயங்கள் ஒன்று போல ஏற்பதால் அவர்களை நிராகரிக்க...

**बाह्यं भोग्यं प्रजल्पन्क्षणिकमणुचयं भोक्तृ संघातमन्तः**

**स्कंधानां पंचकञ्चेद्दशमिति सुगतः पृच्छ्यतां वेदबाह्यः ।**

**किन्ते मानान्तरेण प्रमितमिदमुत प्रौढिरेषा त्वदिया**

**किं वा मोहात्प्रलापः किमथ जद जगद्विप्रलिप्सा कुबुद्धे ॥ २२ ॥**

இந்த உலகம் க்ஷணிகமானது , உத்பத்தி, ஸ்திதி மற்றும் லயம் என்று மூன்று நிலை இல்லாமல் வேறு நிலையில்லாததான ஒரு பரமாணு கூட்டமே என்றும், அது அனுபவிப்பதற்கு என்று கூறி அத்யாத்மிகத்தினையும் வெளியுள்ளது போல க்ஷணிகம் என்று கூறும் பௌத்தர்களான வேதவிரோதிகளே உங்கள் **ஐந்து ஸ்கந்தமான** (கூட்டமான) அனுபவிக்கும் பொருட்களான **ரூபஸ்கந்தம்**, அனுபவமுறையான **விஞ்ஞானஸ்கந்தம்**, அனுபவமான **வேதனாஸ்கந்தம்**, பிரிவுகளான (பெயர்களான) **சஞ்ஞாஸ்கந்தம்**, விருப்பு வெறுப்பு முதலிய மனோ மாற்றங்களான **சம்ஸ்காரஸ்கந்தம்** என்று தார்க்கிப்பதில் திறமையுள்ளவர்களை கேட்கவேண்டும்.

அறிவீனர்களான, காரணமின்றி தவறான உபதேசம் கொடுக்கும் கெட்ட புத்தியுடையவர்களே உங்களுடைய வாக்கான ஜகத் க்ஷணிகமானதும் பரமாணு சேர்க்கையாலும் உண்டானது என்று உங்களின் சித்தாந்தம் பிரத்யக்ஷம் முதலிய பிரமாணங்களை விட்டு வேறு பிரமாணத்தினால் பிரசித்தமானதா என்றால், பிரத்தியக்ஷத்தினால் முடியாதாகிறதால், அதற்கு இந்திரியத்தோடு சம்பந்தம் உடையதாக இருத்தல் அவசியமாகிறது. பரமாணு அப்படியிருக்க முடியாததால், அனுமானத்தினால் நிச்சயிக்க முடியாது. வேறு ஒன்று அனுமானத்தினை காண்பிக்க அவசியமாகின்றதால், அதுபோல என்று, காண்பிக்கப்படுவதும் காணப்படுவதும் க்ஷணிகமானதால் அது ஒரே நேரத்தில் முடியாததாகிறதால்,

உபமானம் முதலியவற்றையோ நீங்கள் ஏற்காததால் அதனாலும் முடியாது.

அதனால், கூறப்பட்ட பிரமாணத்தினால் நிரூபிக்க முடியாது போனாலும் என் வாக்கே பிரமாணம் என்று கூறினால் குழந்தையை போல பிதற்றலாகவே இருக்கும். இப்படி வேதத்தினை விரோதிக்கும் அவர்களின் வசனத்திலிருந்து தப்பித்து கரை சேரவேண்டும். -22-

பிரமானமற்ற தன்மையை காண்பித்து, பிரமாண விரோதத்தினை காண்பிக்க..

**संघीभावः कथ्ंवा चलनविरहिणां भङ्गुराणामणूनां**

**संघोऽनन्यः कथंव विषयपदमियात्कश्च संघं विधत्ते ।**

**स्कंधान सन्निपातः कथमिव कियतां भोक्तृता काच धारा**

**कस्य स्तां भोगमोक्षौ वद जद सफलं केन वा दर्शनं ते ॥ २३ ॥**

முன்பே வைசேஷிக மதத்தில் பரமாணுவின் சேர்க்கை நிராகரிக்க பட்டதுபோல இங்கும் நிராகரிக்கப்படவேண்டும். அங்கு உள்ளது மட்டுமல்லாமல் இன்னும் அதிகம் ஒரு பிரச்சனையாக அது க்ஷணிகம் என்றும் எற்கப்பட்டதால் அது எவ்வாறு சிருஷ்டியை உண்டாக்கமுடியும்.

இந்த பரமாணுவின் சேர்க்கையானது பானை முதலியவை போலவா அல்லது வேறாகவோ, அது போல அல்லவென்றால் உங்கள் மதத்தில் வைசேஷிக மதத்தில் கூறப்பட்ட தோஷம் மட்டுமல்லாமல் **சித்தாந்தஹானியும்** சேரும். அதுபோல என்றால் பரமாணுக்கள் மஹத் பரிமாணமற்றதால் மீண்டும் அது இந்திரியங்களுக்கு விஷயமல்லாதது என்கிற தோஷத்தினையே சிருஷ்டிக்கும். **சங்காதமானால்** (சேர்ந்ததால்) அது தெரியவேண்டும் என்கிற நியதி இல்லை. இல்லாவிடில் வாயுவும் பிரத்யக்ஷம் ஆகவேண்டிய நிலைவரும் என்றால், இங்கு புல், பூண்டினை மூர்த்த திரவியத்தினை குறித்து பேச்சு என்று நினைவுபடுத்தவேண்டும். ஆனால் இந்த சேர்க்கையை செய்விப்பவரையும் ஏற்காததால் சேர்க்கை நிராகரிக்கப்படுகின்றது.

இப்படி ஒரு கர்த்தாவான ஈஸ்வரனை ஏற்காவிடில் வேறுவேறு வகையான சிருஷ்டி உண்டாக முடியாது. வேறுவேறானாலும் ஒவ்வொரு க்ஷணமும் அது மாறுதல் அடையவும் கூடும். அல்லது விதையிலிருந்து முலை வருவதற்கு பதில் மாறுதலாக உண்டாககூடும் முதலிய தோஷங்கள் உண்டாகும்.

ஆனால் இந்த தோஷங்களை நீக்கவே நாங்கள் ஐந்து ஸ்கந்தங்களை ஏற்று அறிவின் பிரகாசத்தினால் அது அனுபவிப்பவராக ஆகின்றதால் கூறப்பட்டவையினை மீண்டும் நாங்கள் நிராகரிக்கின்றோம் என்றால், இது இன்னும் தோஷங்களையே கொண்டுவரும். தோஷத்தினை நீக்காது எப்படி என்றால், அந்த ஐந்து ஸ்கந்தங்களின் சேர்க்கை எவ்வாறு உண்டாகும். வேறு உதாரணம் இல்லாததால், அது வேறு ஒருவரினால் என்று ஏற்க்கப்படவேண்டியதாகும். அப்படி ஏற்றால் அனவஸ்தா தோஷம் உண்டாகும். சரி, இதிலிருந்து தப்பிக்க, அவரவருடைய அறிவின் பிரகாசத்தினால் என்று எற்றால் , அன்யோன்யாஷ்ரய தோஷம் மட்டுமல்லாமல் நிலையான ஒருவரையும் ஏற்காததினால் அதை ஏற்பது போலாகும் என்பதால் சித்தாந்தஹானி உண்டாகும்.

அது மட்டுமல்லாமல் ஸ்கந்தத்தின் சேர்க்கையில் அனுபவிப்பவர் என்பது அவற்றிலிருந்து வேறானவர் என்று ஏற்றால் **அபசித்தாந்தம்** (தவறான) ஆகும். அதிகமான அவயவங்களை ஏற்பதால், அந்த ஸ்கந்தங்களே அனுபவிக்கும் என்றால் வேறு வேறு அனுபவிப்பவர் ஒரே சரீரத்தில் இருந்தால் அது நிலைகுலைந்துவிடும். இதனால் அந்த ஸ்கந்தத்தினில் ஏதேனும் ஒன்று அனுபவிக்கும் என்றால் அதனை நிர்தாரிக்க(நியமிக்க) முடியாது என்கிற காரணத்தினால் அதற்கு எந்த காரணமும் கொடுக்கமுடியாது என்பதாலும். இந்த ஸ்கந்தமே அனுபவிக்கும் என்று அதுவும் நிராகரிக்கப்படுகின்றது.

ஆனால் ஆலயவிஞ்ஞானமே தானே ஒளிர்கின்றதானால் ஆத்மாவும் , அதுவே போக்தாவும் ஆகும். எப்பொழுதும் அது இருப்பதால் எல்லாவற்றையும் பிரகாசித்து ஆளும் என்பதால் அதுவே நிர்தாரிக்கும் . எந்த ஸ்கந்தம் என்று என்றால், இந்த ஆலயவிஞ்ஞானம் க்ஷணிக விஞ்ஞானத்திலிருந்து வேறானதா அல்லது ஒன்றானதா, ஒன்றானது என்றால் நீங்களும் வேதாந்திகளான எங்களை போன்று நிலையான ஆத்மாவை ஏற்கின்றதாக ஆவதால்

வேறல்லாதவர்களாவீர்கள். இதற்கு பயந்து வேறானது என்று கூறுவீர்களானால் க்ஷணிகமான விஞ்ஞானம் என்பதால் முன்பின் உள்ளவையில் எந்த தொடர்பும் இல்லாததாகிறதால் அனுபவிக்கும் ஆசை, அதனை அடையும் சாதனம் என்று இவைகளை நியமிக்க வழியில்லாததாகும். ஆனால் போகத்திற்கான சேர்க்கை அது நிரந்தரமாக ஏற்கவில்லை போகம் போகத்திற்கே என்பதால் அதனை கொடுக்க, தடுக்க வேறு ஒருவரும் வேண்டாம் என்பது எங்கள் மதம் என்றால் பின்னர் மோக்ஷமும் மோக்ஷத்திற்காக என்பதால் நிலையான ஆத்மா இல்லாததால் ஒருவரும் முயற்சிக்க வேண்டியதில்லை என்றாகும். இதனால் புத்தியற்றவர்களான பௌத்தர்களின் மதம் எந்த பிரயோஜனத்திற்கு பயன்படும். -23-

ஆனால், ஐந்து ஸ்கந்தங்களும் நிமித்தமாகவும் நைமித்தமாகவும் மாறிமாறி உண்டாவதால் சேர்க்கையானது அந்தந்த அனுபவத்தினை பொருத்து அதாவது, க்ஷணிகமான வேறுவேறான பிருத்வி முதலிய தாதுக்களில் மனுஷ்யன், அம்மா, அப்பா முதலிய புத்தியும் அதில் நான் என்னுடையது என்கிற அவித்தையும், அதுவே எல்லா பிரச்சனைக்கும், சம்சாரத்திற்கும் காரணமாகும். அதனால், விருப்பு வெறுப்பு முதலிய சம்ஸ்காரங்கள், அதனில் இருந்து உண்டான சிருஷ்டி துவங்குகின்றது. அதிலிருந்து ரக்தம், மாமிசமான உடல் , அதில் இந்திரியங்கள், அது விஷயத்துடன் உண்டான தொடர்பினால் ஸ்பர்ஷம் முதலியவை அதனால் இன்ப-துன்ப அனுபவங்கள், அதனால் விஷயத்தின் தாபம், அதனால் பிரவிருத்தி, அதனால் சம்சாரம் , இதனால் மீண்டும் ஸ்கந்தங்களின் பிறப்பு இதனால் பிறப்பிறப்பு. உண்மையில் க்ஷணிகமாக இருந்தாலும் இந்த பொருட்களிலும் அதன் அனுபவத்திலும் ஏற்ப்பட்ட நிரந்தரம் என்கிற புத்தியால் போகமும் மோக்ஷமும் உண்டாகும் என்பதால் பௌத்த சாஸ்த்திரத்தில் பிரவிருத்தி உண்டாகும் என்றால்....

**नाविद्यादिप्रवृत्तेर्द्विविधसमुदयस्ते यदैकैकसन्ना**
**नश्यन्नुत्पादने न प्रभवति किमरे हेत्वसंबन्धि कार्यम् ।**
**तच्चेन्निर्हेतुकं स्यत्करणविफलता स्वप्रतिज्ञाविरोधौ**
**त्रैविध्यं चाप्यभावे कथमिति वितथोबुद्धबंधोः प्रलापः ॥ २४ ॥**

காண்பிக்கப்பட்ட இரண்டுவிதமான சேர்க்கையானது உண்டாக முடியாது. எப்படியென்றால் . அவித்தை முதலியவைகள் ஒவ்வொரு காரியத்திலும் உத்பத்ததியாகும்போது நாசமுடையதாகின்றது. காரணம் அவித்தை முதலியவை க்ஷணிகம் என்று எற்றதால் அது காரியத்தை உற்பத்தி செய்யும் முன்பு நாசம் அடைந்து விடுவதனால்.

ஆனால், இதில் என்ன தவறு, காரியம் உண்டாகும் முன்பு அதன் பூர்வ க்ஷணத்தில் காரணம் இருந்ததென்றால் போதுமானது காரியம் உண்டாகும் போதும் இருத்தல் அவசியமன்று. என்றால், மூடபௌத்தா காரணத்துடன் சம்பந்தமற்ற காரியம் ஏதாவது இருக்கமுடியுமா மண்ணில் இருந்து உண்டாகிய பானையிலும் காரியம் என்றால் அது அந்த காரணத்துடையது என்று எப்படி கூறமுடியும்.

காரியம் காரணம் இல்லாமலே உண்டாகட்டும் என்றால் பின்னர் பானை முதலியவை செய்ய சக்கரம், தடி, மண் முதலிய சாதனங்கள் அவசியமற்றது என்பதுடன் இவை இல்லாமலே பானை உண்டாகும் என்றாகும். அதுமட்டுமல்லாமல் நீங்கள் ஏற்கும் காரியம் உண்டாக அவசியமான நான்கு பிரத்தியயங்கள் (**ஆலம்பன், சமனந்தர, அதிபதி மற்றும் ஆலோகாதி**) வீணாகும். இந்த பிரத்தியங்களை காப்பாற்ற காரியம் உண்டாகும் வரை காரணம் என்று ஏற்றால் எல்லா சம்ஸ்காரங்களும் க்ஷணிகம் என்ற வேறு ஒரு சித்தாந்தம் காற்றில் பிறக்கும் என்று இரண்டு பக்கமும் இடி என்ற நிலையாகும்.

நான் இதனை அழிப்பேன் என்கிற **பிரதிசங்க்யா**. அதன்படி அதனை அழித்தல் **பிரதிசங்க்யாநிரோதம்** . மற்றதான த்வம்சமோ **அபிரதிசங்க்யா** என்று மூன்று விதமாக புத்தியால் அறியப்படுவது என்கிற இதுவும் உங்களால் நிரூபிக்கமுடியாது. விசேஷமில்லாததாலும் . அசத்தானதாலும் ஆத்மா க்ஷணிகம் என்றால் முன்பு அனுபவித்தது நினைவில்லாது போகவேண்டும். வேறு ஒருவர் அனுபவித்து மற்றொருவர் நினைவு கொள்வது என்பது ஏற்கமுடியாது என்பதாலும் பழைய அனுபவத்தில் எந்தவித சந்தேகமும் இல்லாததாலும் க்ஷணிகவாதம் நிராகரிக்கதக்கது. அதனால் புத்தரின் சிஷயவர்கத்தின் வாதங்களை விவேகிகள் பொய் என்று தள்ளவேண்டும். -24-

பாஷ்யார்த்த வாதிகளான வைனாசிக மதம் இப்படியாக

நிராகரிக்கப்பட்டதும் விஞ்ஞானவாதியான மற்றொரு பௌத்தன் அதனை ஆமோதித்து கூறுவது வைனாசிக மதம் புத்தரின் விசாரமல்ல. உண்மையில் அப்படியொரு வெளிபொருள் இருக்கமுடியாததால் அது உண்டாவதும் இல்லை. கடந்த மற்றும் எதிர்காலத்தில் இல்லாததால். அதனால் கடந்த , நிகழ் மற்றும் எதிர்காலம் என்று ஏற்கப்படும் ஒன்றில் நம்முடைய வாசனையினால் அதற்கேற்றார்போல் ஆலயவிஞ்ஞானம் உண்டாகின்றது என்பதால் வெளிவிஷயங்களாக இருப்பதும் விஞ்ஞானமாகவே இருக்கின்றது என்பதே சித்தாந்தம் என்று. இதுவும் சரியில்லை என்பதாக. –

**नापोद्यं मानसिद्धं कथमिवविविधंज्ञानमर्थापलापे**
**बाधोऽर्थानां न दृष्टो बहिरिति च पदं न प्रसिद्धार्थमृच्छेत् ।**
**वेद्या विज्ञानभेदाः कथमथ विविधा वासना व कुतस्स्युः**
**किंच प्रगुक्तदोषाः क्षणिकचिति हतस्तेन विज्ञानवादः ॥ २५ ॥**

பிரத்யக்ஷம் முதலான பிரமாணங்களால் நிரூபணமாகும். சிறு துறும்பு முதல் பெரிதான எல்லா விஷயங்களையும் அது இல்லை என்று கூறுவது முறையாகாது . நீங்களும் வெளியைபோல அது பிரகாசமாக இருக்கின்றது என்பது முதலான வாக்கியங்களில் போல என்று பின்னர் உபயோகபடுத்தக்கூடாது.

ஆனால் பானை , துணி முதலியவற்றில் அவைகளின் ஞானம் என்பது ஏற்கப்படுவதால், ஞானமாகவே வெளிவிஷயமும் ஏற்கப்படுகின்றது. இதற்க்கு தனியாக அந்த பொருட்களை (இருத்தலை) கற்பனை செய்யவேண்டியதில்லை என்றால், வேறு அவயவமாகவா அல்லது அதே (ஞானம்) அவயவமாகவா என்று கேள்வி எழும். வேறாக என்றால் பொருளின் இருத்தல் ஏற்கப்பட்டதாகிறது. அதே என்றால் வேறுவேறாக எப்படி அதன் தோற்றம் உண்டாகமுடியும் என்கிற கேள்வியும் உண்டாகும் என்பதால் ஞானத்தினை ஆஷ்ரயித்து (சார்ந்து) இருக்கமுடியாது. அதுமட்டுமல்லாமல் ஞானத்திலேயே ஸ்மரண ஞானம் மற்றும் பிரத்யக்ஷ ஞானம் என்று ஒரே பொருளை குறித்து இருக்கும் போதும் ஞானமானது வேறுவேறாகின்றது என்பதாலும்.

ஆனால், கனவில் தோன்றும் காட்சிகளில் எவ்வாறு வெளியில் பொருட்கள் இல்லாமலே பலவாக தோன்றுகின்றனவோ அப்படியே, பலவகைப்பட்ட வாசனைகளால் ஞானமும் பலவிதமாக இருக்கின்றது. கனவிலும், விழிப்பு நிலையில் காணப்படுவதும் எங்களுக்கு அசத்தானதால் ஒரு தோஷமும் இல்லை என்று கூறவும் முடியாது. பின்னர் சத்தாக தோன்றும் விஷயங்கள்போல, **அலீகமான** எப்பொழுதும் இருக்கமுடியாத முயல்கொம்பு முதலியவைகளும் அமூர்த்தமான பொருட்கள் என்று கூறவேண்டியதாக இருக்கும். ஆனால் அது பாதனையாகும் விஷயம் என்றால் கனவினைபோல விழிப்பு நிலையில் உள்ளவை பாதனையாவது காணப்படுவதில்லை.

ஆனால் வெளியில் உள்ள விஷயங்களை எதனையும் பௌத்தர்களான நீங்கள் உள்ளே தோன்றும் பொருட்களே வெளியில் உள்ளதுபோல தோன்றுகின்றது என்று கூறும்போது, வெளியில் என்ற சொல்லில் ஏதாவது பொருள் இருத்தல் வேண்டும். இல்லையென்றால் வெளியில் என்று ஒரு சொல்லை நீங்கள் உபயோகபடுத்தமுடியாது ஆகும். இதனால் குரு-சிஷ்ய பரம்பரையும் , சாஸ்திரவாதங்களும் ஏற்படமுடியாதுபோகும்.

அதுமட்டுமல்லாமல் விஞ்ஞானத்தின் பிரிவு ஏற்றாலும் அது எப்படி வேறுவேறாக அறியப்படுகின்றது. அது க்ஷணிகம் என்பதாலும் தன்னால் மட்டுமே அறியப்படுவதாக ஏற்பதாலும் பந்தமோ மோக்ஷமோ இதனால் ஏற்படவும் வாய்பில்லை. இன்னும் , அந்த வேறுபட்ட ரூபங்களும் யாரால் அறியப்படுகின்றது. தன்னால் முடியாது தன்னில் கிரியையை ஏற்காததால் வேறொருவரால் என்றும் கூறமுடியாது. சாக்ஷியை ஏற்கவேண்டியதாகும் என்பதால்.

ஆனால் எப்பொழுது இரண்டுபேருடைய தோஷம் சமமாக உள்ளதோ அதனை குறித்து எந்த வாதமும் செய்யமுடியாது. காரணம் அதற்கு நீங்கள் கூறும் பரிகாரமே நாங்களும் ஏற்கின்றோம் என்பதால், சாக்ஷியால் அறியப்படுகின்றது என்று கூறும் வேதாந்திகள் மதத்திலும் தன்னில் கிரியை ஏற்கபடாததால், வேறு சாக்ஷியினால் என்றால் அனவஸ்தா தோஷமும் உண்டாவதால் என்று கூறமுடியாது. சுயம்பிரகாசமான சாக்ஷிக்கு வேறுபிரகாசம் வேண்டியது அவசியமில்லாததாலும் புத்தி பரிணாமமான விஞ்ஞானமும் சித்ரூபமாக

இல்லையென்றாலும் சுத்தமாக இருப்பதால் உண்டாகும் பிரதிபிம்பமும் உடனேயே ஆகாயத்தைபோல எல்லா இடத்திலும் வியாபித்து இருப்பதால் ஸ்புரணமாகும் என்பதால் எந்த தோஷமும் இல்லை.

வாசனையினால் என்று கூறவும் முடியாது முன்பு கண்டதுபோல வாசனைகள் **அநாதி** என்று கூறினாலோ பிரமாணம் இல்லாததால் வாசனையை சித்தம் செய்ய வெளிவிஷயங்கள் ஏற்கவேண்டியது உண்டாகும். அந்த வாசனைகளும் எப்படி இருக்க முடியும். விஞ்ஞானத்திலிருந்து வேறாக என்றால் விஞ்ஞானம் என்கிற ஒரு ஸ்கந்தத்தினை ஏற்கும் உங்கள் மதம் அழியும். வேறல்ல என்றால் நிமித்தமாகவும். நைமித்தமாகவும் ஆலய விஞ்ஞானம் உண்டாகமுடியாது என்றாகும். வாசனையென்பது ஆலய விஞ்ஞானத்தின் தாரையில் உண்டான ஞானமே என்றும் கூறமுடியாது. அது அசத்தானதால் அதில் வேறுவேறான தன்மை இருக்கமுடியாது என்றாகிறதால். இதனால் விஞ்ஞானம் க்ஷணிகம் ஆக இருப்பதால் முன்பு சௌத்திராந்திக மதத்தினை நிராகரிக்க கூறப்பட்ட வாக்குகளே அபாவமானது உத்பத்தியாக வாய்பில்லை முதலியது இங்கும் சமமாக இருப்பதால். அங்கு கூறப்பட்ட தோஷங்கள் இங்கேயும் உண்டாகும் என்றாகின்றது. இதனால் விஞ்ஞானத்தினை ஏற்கும் (ஒரு ஸ்கந்த) பௌத்தர்களும் நிராகரிக்கப்பட்டார்கள். -25-

இப்படி க்ஷணிகவாதமதம் நிராகரிக்கப்பட்டதும். அடுத்து கொடுக்கப்பட்ட தோஷங்களை கண்டு பயந்து. பயத்தினால் அபாவத்திலிருந்து இந்த ஜகத் உண்டானது என்றும். துன்பத்திலிருந்து என்றும் வைநாஸிகர்களும். சூண்யவாதிகளும் உளர அவர்களின் பிதற்றலான வாதத்தினையும் ஒரே சமயத்தில் நிராகரிக்க..

नाऽभावाद्भावजन्म क्वचिदपि कलितं निर्विशेषाद्विचित्रं
न स्यात्तेनानुविद्धेऽह्यसदिति च प्रत्ययस्स्यादशेषे ।
केनाऽभावप्रथा ते किमिति न सकलं सर्वतस्स्यादभीष्टं
सर्वेषां स्यादयत्नं किमिति जड भवानात्मघाते प्रवृत्तः ॥ २६ ॥

முக்காலமும் இன்மையான அபாவத்திலிருந்து பாவமான பொருட்கள் உண்டாகியது என்பதனை ஒருவரும் எங்கும் எப்பொழுதும் கண்டதுமில்லை, கேட்டதுமில்லை. க்ஷணிகத்தில் கண்டதுபோல இங்கு அபாவத்திலும் வேறுவேறாக பொருட்களை பிரிக்கும் செயல் அதில் இல்லாததால், அதே சமயத்தில் விதையிலிருந்து முலைவருவது போல பானை முதலிய பொருட்களும் காரணத்தின் வேறுவேறான தன்மையில்லாததால் காரியமும் அப்படி என்றாகும் என்பதால். அப்படி ஜகத்தானது அபாவத்துடன் இருந்ததானால் பானை இல்லை , துணி இல்லை என்று அசத்தாகவே எல்லாம் பிரதிபலிக்கும் உண்டு உண்டு என்றில்லை.

இந்த அபாவமும் எதனால் எந்த பிரமாணத்தினால் அறியப்படுகின்றது. பிரத்யக்ஷம் செய்யமுடியாது இந்திரியத்துடன் சம்பந்தம் உண்டாகததால், அனுமானமும் இல்லை அதுபோல காண்பிக்க மற்றொன்று இல்லாததால் . இன்மை பிரமானமும் இல்லை. முன்பு கூறியது போல நீங்கள் அதனை ஏற்க்காததால், சாக்ஷியாலும் முடியாது சூன்யவாதம் அழிந்துபோகுமென்பதால், க்ஷணிகவிஞ்ஞானமும் தன்னாலேயே அறியப்படுவது என்று ஏற்பதால் சூன்யத்துடன் சம்பந்தம் ஏற்படமுடியாததால். எந்த விசேஷங்களும் அபாவத்தில் இல்லை என்று ஏற்க்கும் போதிலும் வேறுவேறானதை தோற்றுவிக்கும் சுபாவமுடையது என்று ஏற்றால் அபாவம் எல்லா இடத்திலும் இருப்பதால் எல்லா இடத்திலும் எல்லா நேரத்திலும், எல்லா பொருட்களிலும் அபாவம் மட்டுமே ஏன் இருக்காதுபோகும். அதனால் எந்த முயற்சியின்றியுமே எல்லாம் எல்லோருக்கும் நடக்கும் என்பதால் ஒரு காரியமும் செய்யவேண்டாமென்றாகும். சூன்யம் எல்லாம் என்கிற ஞானத்தினால் ஆத்மாவற்ற நிலையை அடையத்துடிக்கும் முக்தியை நீங்கள் ஏற்கின்றீர்கள். தான் இல்லாது போகுதலை ஒருவரும் மேலான விருப்பமாக விரும்புவதுமில்லை என்பதால், உளரல்களுக்கு சமமான உங்கள சாஸ்த்திரத்தில் ஒருவரும் விருப்பம் கொள்ள மாட்டார்கள், ஆத்மாவினை அழிக்கும் மரமண்டயர்களே .. -26-

ஏழு பதார்த்தங்களை ஏற்க்கும் ஜைனர்களோ அவைகளின் பலவாறான இருப்பை நிரூபிக்க **சப்தபங்கி** என்கிற நியாயத்தினை கூறுகின்றனர். அது **ஸ்யாதஸ்தி** (இருக்கலாம் ) 2. **ஸ்யாத்நாஸ்தி** (இல்லாமலிருக்கலாம்). 3. **ஸ்யாதஸ்தி ச நாஸ்தி ச** (இருந்தும், இல்லாமலும் இருக்கலாம்) 4. **ஸ்யாதவக்தவ்ய**

(கூறமுடியாததாக இருக்கலாம்).. 5. **ஸ்யாதஸ்தி ச அவக்தவ்யஸ்ச** ( இருந்தும் கூறமுடியாததாக இருக்கலாம்) 6. **ஸ்யாத்நாஸ்தி ச அவக்தவ்யஸ்ச** (இல்லாமலும் கூறமுடியாததாக இருக்கலாம்) .7. **ஸ்யாதஸ்தி ச நாஸ்தி ச அவக்தவ்யஸ்ச** (இருந்தும் இல்லாமலும் கூறமுடியாததாக இருக்கலாம்) என்பது. இந்த நியாயத்தினை ஒவ்வொன்றிலும் பிரயோகிப்பதால் எல்லாமே நிலையற்றதாக நிரூபிக்கப்படுகின்றது. அவர்களை நிராகரிக்க..

नैकोऽर्थः सप्तधा स्याद्भवति यदि भवेत्साप्तविध्यं च तद्व
ज्जीवाजीवादयोऽर्थाःकिमिति च न तथास्याज्जगच्चाव्यवस्थम् ।
संदेहस्स्याद्विरोधादवधृतिरथ ते बंधमोक्षाऽव्यवस्था
सर्वाऽनैकान्त्यवादो गतवसन ततो भाति मत्तप्रलापः ॥ २७ ॥

பானை முதலிய ஒரே பொருளில் உண்டு, இல்லை முதலிய ஏழு வகை விரோதமான தன்மைகள் இருத்தல் இயலாது. ஏழும் ஒரே இடத்தில் இருக்கும் என்று கூறினால் அந்த நியாயம் தவறாகும்.

அப்படி ஏழு பதார்த்தங்களும் கூறப்பட்ட ஏழுவிதமான தர்மங்களுடன் ஒரு தன்மையற்றதால் உண்டாகுமென்றால் ஏழு என்று பதார்த்தங்களின் எண்ணிக்கையும் அப்படியே ஆவதால் நியமமில்லாமல் **பிரதிஞ்ஞா** (தீர்மாணம்) தவறாகும்.

அந்த ஏழு பதார்த்தங்களிலும் அந்த நியாயத்தை பயன்படுத்தினால் சித்தாந்தமே இருக்கமுடியாது போகும். அப்படிப்பட்ட ஜகத்திலும் கொள்ளுதல், தள்ளுதலுக்கு காரணமான சத் மற்றும் அசத் சூன்யமாக இருக்கட்டும் என்றால் உங்கள் வாதமும் கொள்ளுதல், தள்ளுதல் நிலையை உடையது என்றாகும்.

ஒரு பொருளில் விருத்தமான பல ஞானங்கள் உள்ளது சந்தேகம் எனப்படுவதால் உங்களுடைய சாஸ்திரத்தில் ஏற்க்கப்பட்ட ஞானமானதும் சந்தேகத்திற்கு இடமுடையதாகும். இதனால் பிரமாணத்தன்மையும் இழந்துவிடுகின்றது.

ஜைனர்களின் கொள்கைபடி ஆத்மா மத்தியம பரிமாணமுடையது என்பதால், சிறிய ஜீவனிருந்து பெரியதிற்கோ அல்லது பெரியதிலிருந்து சிறியதிற்கோ சென்று அடையும் போது ஏது ஏற்றதாழ்வு இல்லாமல், அவயவங்கள் நிலை, முறை இல்லாமல் ஆகமுடியாது என்பதால் வளர்தல், தேய்தலில் உண்டான புதிய ஜீவனுக்கு காரணமில்லாமல் பந்தமோ அல்லது மோக்ஷமோ உண்டாகும் என்பதால் பந்த மோக்ஷத்திலும் நிலையற்ற தன்மை உண்டாகும். இந்த சாஸ்திரம் இல்லாமலேயே மோக்ஷம் உண்டாகும் நிலையும் ஏற்படுகின்றது.

திகம்பரர்கள் துணியிடாமல் இருப்பதால், கூறப்பட்ட தோஷங்கள் உடைய, குடிகாரர்களின் ஊறல் போன்ற இந்த பிரமாணமில்லாத சாஸ்திரத்தினை முழுமையாக நிராகரிக்க வேண்டும் . -27-

இப்படி வேதபாஹ்யர்களின் ஒழிக்கப்பட்டதும், வேதத்தின் ஒரு பாகத்தினை மட்டும் சித்தாந்தமாக பிடித்து கொண்டிருக்கும் ஹிரண்யகர்ப்ப மதத்தினை (ஹிரண்யகர்பமே ஜகத் உண்டாக காரணம் , அதுவே உயர்ந்த வஸ்து அதனையே எல்லா வேதங்களும் போற்றுகின்றது என்று கூறும் ) நிராகரிக்க.

**एवं हैरण्यगर्भाद्युदितमपि जगत्कारणं नाऽऽदराहं**
**यस्मात्कस्य प्रसूतिः श्रुतिभिरधिगता क्लृप्तमायुर्मितं च ।**
**अस्य ज्ञानादियोगं गमयति च यतो ब्रह्मवाणी**
**तस्मद्ब्रह्मैव मायशबलितमुचितं श्रौतमेकं निदानम् ॥ २८ ॥**

ஹிரண்யகர்பம், காலம், சுபாவம் இவைகளை ஜகத் காரணமாக ஏற்பவர்கள் அதனை யோக சித்தாந்திகள் ஏற்பதுபோல வெறும் நிமித்த காரணமாக ஏற்றால் அங்கு கூறப்பட்ட தர்கத்தினாலேயே நிராகரிக்கப்படவேண்டும்.

**ஸ வை ஷரீரி பிரதம** என்பது முதலான பிரமாணங்களை ஹிரண்யகர்பனே முதன் முதலில் உண்டானது என்று கூறும்போது, அந்த ஹிரண்யகர்பனான காரணம் எதிலிருந்து உண்டாயிற்று. **ஹிரண்கர்பம் ஜனயாமாஸ**

**பூர்வா** முதலிய ஷ்ருதிகளை பிரமாணமாக காண்பிப்பதற்கு அந்த ஹிரண்யர்கர்பன் உண்டானவர் என்று காண்பிக்க அவருடைய ஆயுள் இரண்டு பரார்தம் கூடியது என்று புராணங்களில் ஏற்க்கப்பட்டதால். காரணம் பிராணதர்ஷணம் செய்யும் (உபாசனை) அவர்கள் ஹிரண்யகர்பமாக ஆகின்றார்கள் என்று வேதத்தில் கூறப்பட்டதால் அது அநித்தியம் என்றாகின்றது. வேதத்தினால் பிரம்மமே மூலகாரணம் என்றும் அதிலிருந்து சிருஷ்டியை செய்ய தேவையான எல்லா ஞானமும், ஐஸ்வர்யமும், உள்ள அதிலிருந்து ஹிரண்யகர்பத்தின் சிருஷ்டி உண்டாயிற்று என்று விளக்கப்பட்டுள்ளதால். மற்ற காலமும், சுபாவ வாதங்களும் பிரமாணம் அற்றவைகளாகையாலும் பிரத்யக்ஷ பிரமாணத்திற்கு விரோதமானதாலும் நிராகரிக்கப்படுகின்றது.

இப்படி மற்றெல்லா சிருஷ்டி வாதங்களும் நிராகரிக்கப்பட்டதால், இரண்டற்றதான எல்லா வேதவாக்கியங்களும் குறிக்கும் சச்சிதானந்த பிரம்மமே வாக்குக்கெட்டாத விவரிக்கப்படமுடியாத மாயாவையின் சேர்க்கையினால் (சேர்ந்தது போல ) ஜகத்தினை சிருஷ்டித்தது. வேறு காரணம் இல்லை என்பதால் பிரம்மமே ஜகத்காரணம் என்று நிரூபணமாகின்றது. – 28 –

தத் பதத்தின் சொற்பொருளின் விசாரத்தின் நிர்ணயம் முடிகின்றது. அடுத்து த்வம் பதத்தின் சொற்பொருள் நிச்சயிக்க, இங்கும் மற்ற மதங்களை நிராகரிப்பதன் மூலமே தன்னுடைய இஷ்டத்தை (அத்வைத தத்துவத்தை) நிலைநாட்ட, முதலில் சார்வாக்கர்களின் மதம் நிராகரிக்கப்படுகின்றது.

**कश्चिद्दुःखी स्वजन्मप्रभृति सुखयुतश्चापरः कस्य हेतोः**
**कस्माद्द्या प्रवृत्तिस्तनुरपि च कुतः किं नवेत्ति प्रमीतः**
**स्वाभाव्यं हेतुसाम्ये सममिति विदितं दीपबीजाङ्कुरादौ**
**वैषम्यं कर्मजन्यं यदि गदसि जनेः पूर्वमप्यात्मसिद्धिः ॥ २९ ॥**

சிலர் பிறவி எடுத்தது முதல் துக்கத்திலேயே உழல்வதும் வேறு சிலரோ பிறந்தது முதல் இன்பம் மட்டுமே அறிந்தவர்களாக இருப்பதுமான இந்த வேற்றுமை என்ன காரணத்தினால், இதற்கு விளக்கம் கொடுக்க வேண்டுமென்றால்

முன்பிறவிகளில் செய்த வினையே காரணம் என்று கூறவேண்டியிருக்கும். இதனால் வேறு பிறவியில் உள்ள ஆத்மாவோடு இப்பிறவியில் உள்ள ஆத்மாவுக்கு தொடர்பும் ஏற்கவேண்டியிருக்கும். அதாவது உடல் தவிர வேறு ஆத்மாவை ஏற்கவேண்டிவரும். வேறு ஜென்மத்தினை ஏற்காததால் தோஷம் உண்டாகும். இதுமட்டுமல்லாமல் பிறந்த குழந்தை முலைப்பால் குடிக்கும் அறிவு எவ்வாறு உண்டாயிற்று என்பதும் நிரூபிக்கமுடியாததாகும். சைதன்யமில்லாத மஹாபூதங்களும் எப்படி, என்ன காரணத்திற்காக இந்த உடலை உற்பத்தி செய்தது.

எப்படி, பலவகையான பழங்களை கொண்டு அதனை புளிக்க வைத்ததினால் மனதை மயக்கும் மதுவானது உண்டாயிற்றோ, அதன் (பழங்களின்) குணமில்லாத போதை தரும் சுபாவம் உண்டாவது போல, பஞ்ச பூதங்களின் சேர்க்கையால் உடலானது உண்டாயிற்று என்று கூறினால், அது சரியல்ல, தேகத்தின் தன்மையே சைதன்யம் என்று கூறினால் இறந்தவர்களின் உடலில் அது ஏன் இல்லாது போகவேண்டும்.

சரி, சைதன்யத்தினை தேகத்திற்கு அதீனமாகவே ஏற்றாலும் முன்பு கூறியதுபோல் பலவகைப்பட்ட பிறவிகள் உண்டாக காரணம் இல்லை. அதற்கு காரணம் குயவன் செய்யும் பானைகளில் , சிலது நன்றாகவும் சிலது உருவம் சரியாக இல்லாததும், சிலது உடைந்தும் காணப்படுவதுபோல சுபாவமானது காரணம் என்று ஏற்றால் . அது சரியல்ல, அந்த வேறுபாடானது எப்படி வேண்டுமானாலும் இருக்கமுடியும் என்கிற காரணத்தால் அதற்கு ஒரு அதிருஷ்ட காரணத்தினை ஏற்க்கவேண்டியிருக்கும் பின்பு வேதாந்திகள் ஏற்பதுபோல ஏற்கவேண்டியதாகும். அப்படி கூறினாலும் நீங்கள் பூர்வ ஜன்மத்தினை ஏற்காததால் தோஷத்திலிருந்து தப்பமுடியாதுபோகும்.

இதுமட்டுமல்லாமல் தூக்கத்திலும், கனவிலும் உண்டான இருத்தல் முதலிய அனுபவத்தினை அறிகின்றதால், இந்த உடலை தவிர வேறு ஆத்மா உள்ளது என்பது நிராகரிக்கமுடியாத வகையில் நிரூபணமடைகின்றது. -29-

சார்வாக்கர்கள் பிரத்யக்ஷத்தினை மட்டுமே பிரமாணமாக ஏற்பதினால் நான் மனுஷ்யன் முதலிய பொதுவான அனுபவமான பிரத்யக்ஷம், வேதாந்திகள் கொடுக்கும் அனுமானத்திற்கு விரோதமாக இருப்பதாலும் வேதமானது ஒரு

புருஷனால் எழுதப்பட்டது என்று வேதாந்திகள் ஏற்க்காததாலும் அதனை பிரமாணமாக ஏற்பது எப்படியென்று ஒரு சரியல்லாத சந்தேகம் எழுந்தால் அதனை நிராகரிக்க.-

**मानं प्रत्यक्षमेकं यदि कथय कथं भाषितं ते प्रमाणं**
**संभाव्यार्थं सदोषं यदि तदपि बली किं न वेदो विदोषः ।**
**न ह्यध्यक्षं विनाक्षैर्नच तव सुगमा मानताऽध्यक्षमात्रे**
**ज्ञानं नान्यस्य बोद्धुं प्रभवति च भवांस्तेन मिथ्याप्रलापी ॥ ३० ॥**

பிரத்யக்ஷம் மட்டுமே பிரமாணம் என்று கூறும் உங்கள் வாக்கியம் எப்படி பிரமாணமாகும். ஒரு சொல்லும் அதன் பொருளும் அறிய பெரியவர்களின் வியவகாரத்தினை நோக்கி அதிலிருந்து அனுமானம் செய்யப்பட்டே சொல் மற்றும் பொருளுக்கு சம்பந்தம் அறியப்படுகின்றது. அதனால் அனுமானம் பிரமாணம் இல்லை என்று ஏற்றால், சொல் சப்தத்தினை கேட்டு அறியப்படுவதால் கேட்பவர்களின் புத்தியில் நீங்கள் கூறிய சொற்தொடர் விளங்காது என்பதால் அதுமட்டுமல்லாமல் உங்களை அப்பிரத்யக்ஷம் பிரமாணமா என்று கேட்டால், உண்டு என்றால் பிரத்யக்ஷத்தினை தவிர வேறு பிரமாணம் ஏற்கப்பட்டதாகும் இல்லை என்றால் எங்கள் வாக்கியம் உங்களுக்கு பொருள் விளங்கியது என்பதால் சப்தபிரமாணம் ஏற்கவேண்டியதாகும்.

பிரமை, சோம்பேறிதனம், ஒழுங்காக கேட்காதது முதலிய தோஷங்கள் உடைய உங்களுடைய வாக்கே பிரமாணம் என்று ஏற்கும் போது குரு-சிஷ்ய பரம்பரையாக சீக்ஷா, வியாகரணம் முதலிய அங்கங்கள் கூடிய வேதத்தினை முறையாக படிக்கப்படும் வேதமானது எந்த தோஷமும் இல்லாததால் எப்படி பிரமாணமல்லாது போகும்.

தூரத்திலிருந்து பொருட்களை கானும் போது, அத்துனை தூரத்திற்கு நம்முடைய பார்வையானது செலுத்தப்படமுடியாத காரணத்தினால் அங்கு உள்ளவைகளை அனுமானம் செய்து ஏற்பதினால், அப்படி அனுமானத்தினை பிரமானமாக ஏற்காத உங்களுடைய பிரத்யக்ஷம் எப்படி நிரூபணமாகும்.

அதுமட்டுமல்லாமல் . ஞானமானது பிரத்யக்ஷத்தினாலேயா அல்லது அனுமானத்தினாலேயா பிரமாணமாக ஏற்கப்படுகின்றது. முதலில் அனுமானம் முதலியவை பிரத்யக்ஷமாக ஏற்க்கப்பட்டதால் அப்படி கூறமுடியது. இரண்டாதில் தவிர வேறு பிரமாணம் ஏற்றதால் **பிரதிஞ்ஞா ஹானி** (சூளுரை அழிவு) உண்டாகும்.

நீங்கள் கூறுவதினால் மாத்திரமே பிரத்யக்ஷத்தினை மட்டும் பிரமாணம் என்று ஏற்கமுடியாது. தோஷங்களுடைய கருவிகள் இருக்க வாய்ப்புள்ளதால், நீங்கள் கூறியதை வேறொருவர் அப்படியே பிரத்யக்ஷமாக அறியமுடியாததால் , உங்கள் வாக்கு பிரமாணம் என்று ஆவதால். பிரத்யக்ஷத்தினை தவிர வேறு பிரமாணம் ஏற்றதாகின்றது. மற்றவருக்கு ஞானத்தினை நீங்கள் கொடுக்கமுடியாது என்பதால், உபமானாதிகளை பிரமாணமாக ஏற்காததினால் அவர்களுக்கு ஞானம் கொடுக்க எப்படி வாக்கை பிரயோகம் செய்வீர்கள். இப்படி பல தோஷங்கள் உடைய சித்தாந்தம் ஆகையால் உங்கள் சொற்களானது நிராகரிக்கப்படவேண்டும் என்பதில் சந்தேகமில்லை. -30-

गौरः स्थूलो युवाऽहं पटुरिति च तनावात्मबुद्धिर्जनानां
स्वाभाव्यादेव सिद्धेत्यधिगमयदिदं निष्फलं दर्शनं ते ।
वेदद्वेषात्प्रवृत्तं यदि बत न तरां द्वेषमूलं प्रमाणं
दैवान्नष्टस्त्वमेकः किमिति शठ परान्हन्त हन्तुं प्रवृत्तः ॥ ३१ ॥

நான் வெண்மையானவன், தடியானவன், பாலகன், யுவன் , புத்திசாலி முதலிய தர்மங்களை உடம்பில் ஆத்மா என்கிற புத்தியை அதன் சுபாவம் என்று ஏற்று எந்த தர்க்கதத்தினாலும் இதனை முறியடிக்க முடியாது என்று கருதும் உங்கள் வாதமும், சாஸ்திரமும் புதிதாக எதனையும் நிரூபிக்காததால் பிரயோஜமற்றது என்று தள்ளத்தக்கது.

ஆனால் ஷ்ருதி, ஸ்மிருதி மற்றும் புராணம் முதலியவைகள் பணம் பிடுங்கவேண்டி உள்ளவை என்பதாலும், விரதம் முதலியவைகளால் பொருள் விரயம் செய்தும் மனக்குழப்பத்தில் வாழுபவர்களை அந்த துன்பத்திலிருந்து

காப்பாற்ற வேதம் முதலியவற்றின் பிரமானத்தினை அழிப்பதின் மூலம் அவர்களின் பரலோகத்தின் மேல் உள்ள பயத்தினை நீக்கி இங்கு இன்பத்துடன் வாழ செய்யும் எங்களுடைய சாஸ்திரம் எப்படி பொருளற்றதாகும் என்று கூறினால் . ஹே வஞ்சகனே, கேள் முன்பு வெறும் பொருளற்றது என்று மட்டுமே கூறப்பட்டது. இப்பொழுது வேதத்தினை நிந்திக்க பிரவிருத்திப்பதால் அது வெறுப்பினால் உண்டான (உங்களுடைய) சாஸ்திரம் என்பதால் அது நிச்சயமாக எப்பொழுதும் ஒதுக்கப்படவேண்டியதே.

இப்படிப்பட்ட தோஷங்களையுடைய சாஸ்த்திரத்தினை ஏற்று, தானும் உறுப்படாமல் மற்றவரையும் உறுப்படவிடாமல் செய்யும் உன் நிலைமை படுமோசமே. தெய்வத்தினால் தண்டிக்கப்பட்டு படுமோசமான பிறப்பிறப்பு என்கிற சம்சார கடலில் வீழ்ந்தும் மற்றவரை வஞ்சனை செய்வதின் மூலம் மேலும் துன்பத்தையே சம்பாதிக்கும் உன் நிலைமையை என்ன சொல்வது . -31-

பல ஜன்மங்களில் உண்டான வாசனையால் நான் உடம்பு என்கிற எண்ணம் எல்லோருக்கும் சாதாரணமாகவே இருக்கின்றதால், அதனை நீக்குவதே மோக்ஷம் என்பதாலும் அதனையும், உடம்பின் சாரமற்ற தன்மையையும் கூற -

**रेतोरक्तप्रसूतं जडमशनचितं षड्विकारं त्वगस्थि**
**स्नायुक्रव्याऽऽन्त्रमज्जारुधिरमयमतिस्वल्पमाध्यामयाढ्यम् ।**
**प्राणापाये मृदादिप्रमितमपि च बिड्कीटभस्माऽवशेषं**
**देहं तं मूढ कस्मादहमिति मनुषे केन वा वंचितोऽसि ॥ ३२ ॥**

தந்தையின் வீர்யத்தினாலும் தாயின் ரக்தத்தினாலும் பல மாற்றங்களையடைந்து பிறக்கும் சேதனமில்லாத ஜடமான இந்த உடல், உண்ணும் அன்னத்தினால் பிறப்பு, இறப்பு, வளர்ச்சி, மாற்றம், தேய்வு மற்றும் அழிவு ஆகிய ஆறு விகாரங்களை அடையும். எலும்பு, மாமிஸம், உணவினால் உண்டான மலம், மூத்திரம் முதலியவை, மஜ்ஜா, ரத்தம் இவைகளால் உண்டானது என்பது இவைகளிலேயே நான் என்று அபிமானம் உண்டாகின்றது. அதுவுமில்லாமல் இந்த உடலானது இடத்தினாலும் காலத்தினாலும் குருகியது என்பதோடு உடல் வியாதி

மற்றும் மனோவியாதிகளுக்கு இடமானதும் ஆகும்.

இந்த உடம்பிலிருந்து உயிர் மூச்சானது வெளியேறினாலோ இது உணர்வற்ற களிமண் போன்றதும், நாய் நரிகள் தின்பதால் அதன் மலமாகவும், பூமியில் கிடத்தியதினால் உண்டாகும் கிருமிகளாகவும் எறித்தாலோ வெறும் சாம்பலாகவோ ஆகும்.

இப்படி எந்த காரணத்தினாலும் சாரமற்றதான இந்த அநாத்மா என்று நிச்சயிக்கப்படவேண்டிய சரீரத்தில் முட்டாள்தனமாக நான் என்றும், ஆத்மா என்றும் அபிமானிக்கின்றாய். எப்படி இத்தனை மோசமாக நீ ஏமாற்றப்பட்டாய். உன் நிலைமை என்னவென்று சொல்ல எனவே அவர்களின் துர்பாக்கியத்தை எண்ணி அவர்களின் மதத்தினை நிராகரிக்கவேண்டும். -32-

தேகாத்மவாதியினை இவ்வாறு நிராகரித்த பின் - இந்திரியாத்ம வாதத்தினை நிராகரிக்க -

**खानामात्मत्ववादे प्रतिनियतगतौ स्वामिनानात्वदोषा**
**द्देहोन्मन्थप्रसङ्गस्समुदितविषये त्वंधमूका म्रियेरन् ।**
**उक्तिर्दृष्टश्रुतानामपि च न घटते नापि संघो निरूप्य**
**स्स्वप्नद्रष्टैव नस्याच्छयनमरणयोर्निर्विशेषाद्भयं स्यात् ॥ ३३ ॥**

ஷ்ருதி பிரமாணம் இருப்பதால், இந்திரியங்களை ஆத்மா என்று ஏற்க்கப்பட்டால், ஒவ்வொரு இந்திரியத்தையும் ஆத்மா என்று கூறினால் ஒவ்வொரு விஷயத்திற்கும் வேறு வேறு ஆத்மா என்பதால் பல ஆத்மாக்கள் உள்ளதால் அதனை நியந்தரிக்க ஒருவரும் இல்லாததால் பல்வேறு திசைகளில் ஒவ்வொரு இந்திரியமும் செல்வதால் தேகம் நிலைகுலையும். இதனால் இந்திரிய சமுதாயத்தினை ஆத்மா என்று குறிப்பிட்டால், இதில் ஒரு இந்திரியமானது ஒரு கண்ணோ, அல்லது காதோ பழுதடைந்தாலோ அல்லது இழந்தாலோ செவிடராகவோ, குருடராகவோ இருப்பவர்கள் அவர்களின் ஆத்மாவில் நஷ்டம் ஏற்பட்டதால் இறக்க வேண்டும் என்றாகும்.

அதுமட்டுமல்லாமல், கண்ணால் பார்த்தவைகளையும், காதால் கேட்டவைகளையும் வேறு ஒருவருக்கு புரிய வைக்கமுடியாது போகும். வாயும் மற்ற இந்திரியங்களும் வேறானதால் ஒருத்தர் கண்டதை வேறொருவர் விளக்கி கூறுதல் காணப்படாததால். அதன் சமுதாயத்தையும் நிரூபிக்கமுடியாது.

தூக்கத்திலும், கனவு நிலையிலும் இந்திரியங்கள் மனதில் லயமடைந்திருப்பதால் அங்கு காண்பவர் என்று ஒருவரும் இல்லாததால் அவை அறியப்படுதல் முடியாததாகும். அது மட்டுமல்லாமல் மரணத்திலும் மனதில் இந்திரியங்கள் லயமடைகின்றதால் தூக்கத்தில் எல்லோருக்கும் மரணத்தினை போல பயமே ஏற்படும். பிராணனானது மரணத்தில் உடலைவிட்டு நீங்கும் என்கிற அறிவு உண்டானதால் பயமானது இருக்காது என்று கூறுதல் முடியாது. அந்த அறிவு இல்லாத மிருகங்களுக்கும் மரணபயம் இருப்பது காணப்படுவதால். -

ஷ்ருதியும் பிராண சம்வாதத்தில் இந்திரியங்களை போற்றி கூறவே அர்த்தவாதமாகவே ஆத்மா என்று கூறப்பட்டது என்பதனாலும் அறியவேண்டும் இதனால் இந்திரியங்கள் ஆத்மா என்பதும் நிராகரிக்கபடுகின்றது. -33-

இந்திரியங்கள் ஆத்மா இல்லை என்று நிராகரிக்கப்பட்டதும் அதன் அடுத்த நிலையான பிராணாத்மவாதிகள், பிராண சம்வாதத்திலும் பிராணனன் அடங்கினால் மற்றெல்லா இந்திரியங்களும் சக்தியற்று போகின்றது என்பது முதலியவையை கூறியுள்ளதால் பிராணனே ஆத்மா என்று கூறும் பிராணாத்மவாதிகளை நிராகரிக்க -

**प्राणो नाऽऽत्मा जदत्वादशनसिततया वृत्तिलाभात्सुषुप्ता**
**वेतस्मिन्त्संचरत्यहमचल इति प्रत्ययादम्मयत्वात्।**
**स्रष्टा स्वोत्क्रान्तयेऽस्याऽऽमरणमपि धृतेर्जीवशब्दाभिधेय**
**स्तस्मादन्योऽस्ति रक्षन्स्वनिलयममुना दीप्तिमानेकहंसः॥ ३४॥**

ஐந்து செயல்களுடைய பிராணனானது ஆத்மாவாக இருக்க முடியாது.

ஜடமானதால், **பாலாகியின்** கேள்வியில் ஷ்ருதியே இதனை நிரூபிப்பதால். பிராணனின் பலமானது உண்ணப்படும் உணவினாலேயே ஏற்படுகின்றது என்பதால் உடலினால் சிறைப்படுத்தப்படடது போலாவதாலும் . தூக்கத்தில் பிராணனானது வேறுவகையான உணவினை உண்ணுகின்றது என்பது வேதமும் தூங்குபவரின் சத்தம் கூடிய பிராண சுவாஸகிரியையும் நிரூபிக்கின்றதால். பிராணனானது எப்பொழுதும் சஞ்சாரம் செய்யும் சுபாவம் உடையதாலும். பிராணனானது நீரின் விகாரம் என்று வேதத்தில் கூறப்படடதாலும் விகிருதியான பிராணன் ஆத்மாவாக இருக்கமுடியாது.

இந்த பிராணனானது வெளியேறுவதால் இறக்கின்றான் உட்புகுவதால் உயிர்பெறுகின்றான் என்பதால் அதனை ஆத்மா என்று கூறுதல் சரியாகும் என்றால் இல்லை. காரணம் இது ஜீவத்தன்மையை அடைந்த ஒரு உடலிலிருந்து வெளியேறுவதும் மற்றொரு உடலில் பிரவேசிக்க செய்வதும் வேறு ஒருவர் இதனை நியமனம் செய்வதால் என்க.

**ஜீவன்** என்கின்ற வேர்சொல்லின் பொருளும் **பிராணனை தாரிப்பதில்** என்பதால் பிராணனை தாரணம் செய்யும் காரணத்தினால் தான் ஜீவன் எனப்படுகின்றது. என்பதால் பிராணனை தவிர ஒரு ஆத்மா உள்ளது என்பதால் பிராணனை தவிர ஒரு ஆத்மா உள்ளது என்பது நிரூபணமாகிறது. ஜீவனின் தூக்கம் மற்றும் கனவு நிலைகளிலும் இந்த பிராணனை கொண்டு தேகத்தினை காப்பாற்றுவதினால் அதனை செய்பவர் வேறு ஒருவர் என்பது நிச்சயமாகின்றது. அந்த நியந்தரிக்கும் சுயம்பிரகாசமான இரண்டற்ற ஏகரசமான ஆத்மா பிராணனை விட அந்நியமானது என நிரூபணமாகின்றது. அதனை அறிவதனால் பந்தமானது முழுவதுமாக அழிந்துபோகும். -34-

பிராணன் ஆத்மா இல்லையென்றதால் அதன் அடுத்த நிலையில் உள்ள மனாத்மவாதிகள் மனமே ஆத்மா என்றும் அது இந்திரிய கூட்டங்களை விட வேறானது என்றும், அதன் சம்பந்தத்தினாலேயே ஞானம் உண்டாவதால், போன்ற காரணங்களை கூறும் அவர்களை நிராகரிக்க.

उद्भूतेस्साधनत्वादशनमयतया शुद्ध्यशुद्धिप्रतीते

हेतुत्वात्बंधमुक्त्योस्तदनु तनुभृतेस्तन्मयत्वश्रुतेश्च ।
जागृत्स्वप्नप्रशान्तौ करणगणलये तत्प्रशान्तेस्सुषुप्ते
रुत्थानेसुप्तिसौख्यस्मृतिभिरपि मितं मानसंचापि नाऽऽत्मा ।३५ ॥

மனமும் உண்டானது என்பது ஷ்ருதி சித்தமானதால் முன்பு கூறப்பட்ட அநித்தியதன்மை, செய்த கர்மங்களுக்கு பலன் அனுபவிக்காமல், செய்யாததற்கு பலன் அனுபவிக்கும் நிலைமை முதலியவை உண்டாகின்றது. கண்முதலிய இந்திரியங்களை போல மனமும் ஒரு கருவியாகவே (ஞானத்தை அடைய) கூறப்பட்டதாலும், உண்ணும் உணவைபோல மனமும் இருப்பதனால் அதன் விகாரமாகவே அது ஏற்க்கப்படுகின்றது. மேலும் மனமானது சுத்தம் மற்றும் அசுத்தம் என்று இரண்டு வகையாக கூறப்பட்டுள்ளது. அசுத்தமானது பந்ததத்திற்கு காரணமாயும் சுத்தமானது அது நீங்க காரணமாகவும் கூறப்பட்டுள்ளது. இந்த மனதில் உண்டாகும் வாசனைகளால் அதன்படி உடலானது உண்டாகின்றது என்பது, **ஜடபரதர்** முதலியவர்களின் வரலாற்றிலும் காணப்படுவதாலும்.

தூக்கத்திலும் மனமானது மற்ற இந்திரியங்களோடு புத்தியில் லயமாகின்றது என்று ஷ்ருதி கூறுகின்றதால், மனது அப்பொழுது ஆத்மாவை அடையமுடியாது. அது மட்டுமல்லாமல் மனமானது ஆத்மா என்று ஏற்றால் அது லயமடைகின்றது என்று கூறப்பட்டுள்ளதால் அநாத்மாவாக ஆகும் நிலையும் ஏற்படுகின்றது. இதனால் தூக்கத்தில் மனம் அழிந்து மீண்டும் விழிப்பில் எழுகின்றது என்று கூறுதல் நிராகரிக்கப்படுகின்றது. அதுமட்டுமல்லாமல் இதுபோல கூறுவதால் நான் நிம்மதியாக உறங்கினேன் என்ற அனுபவமும் இருக்கமுடியாது என்பதும் ஆகின்றது.

இந்த கொடுக்கப்பட்ட காரணங்களால் மனமானது ஆத்மா இல்லையென நிரூபணமாகின்றது. இதே காரணத்தினாலேயே அஹங்காரம், சித்தம் முதலியவைகளும் ஆத்மா இல்லை என்று நிராகரிக்கவேண்டும். -35-

இங்கு மனதினை ஆத்மா அல்ல என்று நிராகரித்ததால் விஞ்ஞானம் என்று அறியப்படும் புத்தியும் நிராகரிக்கப்படடதே என்றாலும்.

विज्ञानं स्थायि यत्तत्सममिह मनसा किंच नानाऽऽत्मतास्या
त्तस्याऽनेकात्मकत्वात्तदभिमतिवशादात्मबंधश्रुतेश्च ।
सारथ्यं तस्य क्लृप्तं यदपि तनुरथे स्वात्मनो भोगमुक्त्यो
स्तस्मादन्योऽस्य साक्षी तदुपहिततनुश्चिन्मयोऽस्त्यन्तरात्मा ॥ ३६ ॥

விஞ்ஞான வாதிகளான பௌத்தர்களின் விசாரத்தில் இது நிராகரிக்க பட்டாலும். சில கர்மமீமாம்ஸகர்கள் நிராகரிக்கப்பட்டது க்ஷணிக விஞ்ஞானமே என்றும், நித்தியமான விஞ்ஞானத்தை அல்ல என்றும் **யஞ்ஞம் தநுதே, கர்மானி தநுதே** (யஞ்ஞத்தை செய்கிறது, கர்மங்களை செய்கின்றது) என்பது முதலான பிரமாணங்களால் லௌகிக மற்றும் வைதிக கர்மங்களை செய்தல் என்கிற ஷ்ருதி வாக்கிய பிரமாணத்தினால் விஞ்ஞானமே ஆத்மா என்று கூறினால். அது சரியல்ல. **புத்திஸ்ச நேங்கதே தத்ர பரமாத்மானம் அஷ்னுதே** முதலிய ஷ்ருதிகளால் அது குணம் மற்றும் கிரியைகளின் ஆஷ்ரயமாக இருப்பதால் அது வரையறுக்கப்பட்டததாகின்றதாலும் அது ஆத்மாவாக இருத்தல் முடியாது. மத்திய பரிமாணம் உள்ளது என்று அதனை ஏற்பதனால் அது அவயவம் உடையதாகின்றதால் ஒவ்வொரு அவயவமும் ஆத்மாவாகும். நிலையும் முன்பு கூறியதுபோல அநித்தியத்துவம் மட்டுமல்லாமல் பல ஆத்மா உள்ளது என்ற தோஷமும் உண்டாகும். அந்த புத்தியும் அபிமானத்தையுடையது என்று கூறப்பட்டுள்ளதால் பந்தமே உண்டாகும். ஆனால் **ஆத்மானம்ரதினம் வித்தி** என்ற **கடோபநிஷத்** வாக்கியமும் ஆத்மாவை ரதத்தில் இருப்பவராகவும் சரீரத்தை ரதமாகவும் அதனை இயக்கும் சாரதியாகவே புத்தியை கூறியிருப்பதாலும் விஞ்ஞான மயத்திற்கு அந்நியமான அதற்கும் உள்ளே வேறு ஆத்மாவையும், அதனால் விஞ்ஞானமயம் ஒரு போர்வை (கோஷம் ) என்றும் கூறப்பட்டதாலும்.

கூறப்பட்ட காரணங்களால் விஞ்ஞானமயத்திற்கு சாக்ஷியான ஆத்மா உள்ளதாலும். அதன் அருகில் இருப்பதாலும் அதனை சார்ந்திருப்பதாலும் விஞ்ஞானம் கர்த்தா இல்லை என்றும், ஆத்மா இல்லை என்றும் நிரூபணமாகின்றது. யஞ்ஞத்தினை செய்கின்றது முதலியவை பலனை அனுபவிக்கும் தன்மையாலேயே கூறப்பட்டது என்பதால் அது பாரமார்த்திகமாக

ஆத்மா அல்ல. இதனால் விஞ்ஞானம் ஆத்மா என்பதும் நிராகரிக்கப்பட்டது. -36-

**பாஞ்சராத்திரம்** முதலிய ஆகம கிரந்தங்களில் ஏற்கப்பட்ட ஈஸ்வரனே ஆத்மா என்கிற மதத்தினை நிராகரிக்க-

**अण्वात्मा चित्स्वरूपो यदि सकलतनौ शैत्यबोधो न ते स्या**
**न्नावैधर्म्येऽस्यबोधः सकलतनुगतग्राहकोऽन्यो गुणश्च ।**
**वैधर्म्येऽणोर्गुणश्चित्कथमखिलतनुं व्याप्नुयादाणवं वा**
**सिद्धं केनाऽऽत्मनस्ते श्रुतिभिरिति न यत्तास्तदानन्त्यनिष्ठाः ॥ ३७ ॥**

சித்ரூபம் ஆத்மா என்றும் அது அணுவின் அளவு என்றும் ஏற்றால் உடல் முழுவதும் உண்டாகும் குளிர்ச்சி, வெப்பதம் முதலியவைகளை அறிவது கடினம். கங்கையில் பாதி உடலும் மீதமுள்ளது சூரியனால் தகிக்கப்படும்போது அதுபோன்ற பல அனுபவங்களும் ஒரே நேரத்தில் உண்டாவது அறிதாகும். அவயவங்கள் கூடிய உடல் முழுவதும் அது சம்பந்தபடவும் முடியாது. மேலும் அணுவாதத்தின் சம்பந்தம் முன்பே நிராகரிக்கப்படடது. அதனை (சம்பந்தத்தினை) ஏற்றாலும் அந்த ஆத்மாவானது சம்பந்தப்பட்ட இடத்திலேயே நீரானது சம்பந்தப்பட்டாலும் பரமாணுவின் ஸ்பர்ஷமானது இந்திரியங்களால் அறியப்படமுடியாது என்கிற காரணத்தினால் நீரின் சம்பந்தமே அறியப்பட முடியாது. ஞானமானது உடல் முழுவதும் பரவியிருந்தால் அனுபவங்கள் ஏற்படும் என்றும் கூறமுடியாது காரணம் ஆத்மாவை சித்ரூபமாகவும் ஞான குணமுடையது என்றும் உங்களால் ஏற்கப்பட்டதால்.

குணம் மற்றும் குணியில் வேற்றுமை இல்லை என்றால் அனுபவங்களை உண்டாக்கும் போதமானது ஞானமான குணமும் இந்த ஆத்மாவிலிருந்து வேறாக இருக்கமுடியாது. இதற்கு எந்த காரணமும் இருக்கமுடியாததால்.

இதனால் குணமாகவும் முடியாது காரணம் ரூபம், ரசம் முதலியவற்றிலேயே தன்னுடன் வேறான குணங்கள் உடையது காணப்படுகின்றது. ரூபத்திலிருந்து வேறு ரூபமானது என்றும் இல்லை.

அனுவான ஆத்மா சித்ரூபம் இல்லையென்று ஞானத்தினை ஆத்மாவின் குணமாக ஏற்கவேண்டி கூறினால். அனுப்பரிமாணம் உள்ள ஆத்மாவின் குணமான ஞானம் முழுவுடலையும் வியாபித்து இருப்பது முடியாது ஆகும். குணமும், குணியும் வெவ்வேறு இடத்தில் இருத்தல் ஏற்கப்படாததால்.

ஆனால் கற்பூரம், பூ முதலியவைகளிலோ காற்றினால் அதன் வாசம் கொண்டு செல்லப்படுவதாலும் அதனால் அதிருஷ்டம் காரணமாக அது அழிவதும் ஆகின்றது. (கஸ்தூரி முதலியவைகளில் அதிருஷ்த்தினால் அழியாததால்). ஆனால் இந்த அனுபரிமாணம் ஆத்மா என்று கூறுவதும் எப்படியெதனால் நிரூபிக்கப்படும் என்ற கேள்வியும் எழுகின்றது. பிரத்யக்ஷத்தினால் முடியாது அது காணப்படமுடியாததால். இதனாலேயே அனுமானம் மற்றும் உபமானம் முதலிய பிரமாணம் கொண்டும் நிரூபிக்கமுடியாது என்று ஆகின்றது.

இதனால் , ஷ்ருதியே பிரமாணம் என்றும் கூறமுடியாது அதிலும் **அஸ்தூலம்** என்று கூறப்பட்ட இடத்திலேயே **அனனு** என்று கூறப்பட்டிருப்பதால். முடியின் நுனியின் நூறில் ஒரு பங்கு அளவுள்ளது முதலிய வாக்கியங்களோ, அதன் முன்னுரை மற்றும் முடிவுரைகளை கண்டால் அதன் அபிப்பிராயம் அதன் அளவு அப்படி என்று நிரூபிப்பதில் இல்லை என்றறியலாம். அதன் தாத்பர்யமோ அது அநந்தமானது என்பதை நிரூபிப்பதிலேயே என்பதால். ஜீவன் மற்றும் ஈஸ்வரனை வெவ்வேறாக நிரூபிக்கும் ஷ்ருதியின் தாத்பர்யமும் கண்ணாடி பிம்பமும், பிரதிபிம்பமும் போல என்பதிலேயே என்றும் அறியவேண்டும். -37-

நித்திய விஞ்ஞானாத்மவாதிகள் நிராகரிப்பிலும், ஞான குணத்தினை நிராகரித்தலிலுமே **பாட்ட** (குமாரில பட்டரின்) அனுயாயிகளின் ஜடபோதாத்மக ஆத்மாவாதமும் நிராகரிக்கப்படடாலும். அது மீண்டும் திடமாவதற்கும் , கர்ம காண்ட விஷயத்தில் அவர்களின் நிர்ணயத்தினை எல்லோரும் ஏற்பதனால் அதனாலேயே இந்த ஆத்மதத்துவமும் சரியாக இருக்கும் என்று சில மந்தபுத்தியுள்ளவர்கள் நினைக்காமலிருக்க நிராகரிக்கப்படுகின்றது.

नैकस्स्याच्चिज्जदात्मा कथमथ विषयःसस्स्वयं स्वस्य कौ ता
वंशौ योगस्तथात्मा किमिति च जडता केन वा चेतनस्य ।
कर्तृत्वं तस्य कीदृक्करणसमुदयं सैष धत्ते कथं वा
तत्त्वं जीवस्य देवप्रियपशुभिरिदं कर्मठैर्दुर्निरूपम् ॥ ३८ ॥

இருளும் ஒளியும் போன்று ஆத்மாவில் சைதன்யமும், ஜடதன்மையும் ஒரே இடத்தில் இருப்பது முடியாது. அப்படி இரண்டும் ஏற்க்கும் நிலையில் ஆத்மாவானது ஒன்றாக இருத்தல் முடியாது. இரண்டு வேறு தன்மையுடைய இரண்டு ஆத்மா ஏற்க்கப்படவேண்டும். எல்லா மதமும் ஒரு ஆத்மா என்று ஏற்பதாலும் அனுபவத்திலும் இது விரோதமாகின்றது. ஜட அம்சத்தினை ஏற்றாலும், அந்த சித் மற்றும் ஜட ஆத்மாவில் ஆத்மாவினையோ அல்லது சித் அம்சத்தினையோ அது எப்படி விஷயமாக அறிகின்றது என்று கேள்வி எழுகின்றது. காரணம் சித்துடன் **தாதாத்மீயம்** அடைந்துள்ள ஜடத்தன்மையும் ஞானத்தின் விஷயமாகின்றது என்பதால் அநீந்திரியமான விஷயமும் பிரத்யக்ஷத்திற்கு யோக்கியமானது என்று அறியப்படாததால் என்பதால் சித் அம்சத்திலும் விஷயத்தினை ஏற்க்கப்பட்டால் ஜடத்தன்மை ஏற்க அவசியமில்லாமல் போகும் என்பது மட்டுமல்லாமல் முன்பு கூறியபடி தன்னிலேயே செயலை ஒருவரும் ஏற்பதில்லை என்பதாலும் மட்டுமல்லாமல் உங்கள் சித்தாந்தமும் அழியும் என்றாகின்றது. ஜடம் சித்துடன் தாதாத்மியத்தினில் இருப்பதால் அது தனக்கு தானே விஷயம் ஆவதும் முடியாது என்றும் நிலையுண்டாகின்றது.

ஆனால் தாதாத்மியமாக ஏற்க்காமல் மரமும் அதன் கிளையும் போல என்று **அம்சாம்சி** சம்பந்தம் என்றும் கூறுதல் இயலாது. ஜடமும் சித்தும் அப்படிப்பட்ட சம்பந்தத்தில் உள்ளது எதுபோல, அவயவமவயவியாக என்றால் மூர்த்தமல்லாத பொருட்களில் இந்த சம்பந்தம் ஏற்கபடாததால். அவயவமுடையது என்பதால் ஆத்மா அழிவுடையது என்றாகிறது. மொத்தமாகவும் சம்பந்தம் ஏற்க்கமுடியாது. சமூகத்தில் ஒன்று அழிந்தாலும் ஆத்மா அழியும் என்றும், தேகம், இந்திரியம் முதலியவையும் ஆத்மா ஆகும் நிலையும் உண்டாகும். இதனால் அது ஜாதிக்கும் அதன் வியக்திக்கும் உள்ள சம்பந்தம் போல என்றால் இரண்டும்

உங்களால் பலவாக ஏற்க்கப்படாததால் என்பது போல பல தோஷங்கள் உள்ளதால் எந்த வகை சம்பந்தமும் முடியாது. இதன் சம்பந்தமும் சம்யோகமாகவோ, தாதாத்மியமாகவோ அல்லது விஷய -விஷயிபாவமாகவோ ஏற்க்க முடியாது. காரணம் மேற்கூறிய பலதோஷங்கள் உண்டாகும் என்பதால்.

ஜடம் என்று ஏற்பதற்கு (ஜடாம்சம் ) பிரமாணமும் இல்லாததாலும். அதற்கு எந்த பிரயோஜனமும் இல்லை என்பதாலும். அந்த ஜடமும் சேதனத்திலிருந்து வர எந்த காரணமும் இல்லாததாலும், அப்படி ஒரு காரணத்தினை ஏற்றால் அந்த காரணத்திற்கு வேறொரு காரணம் என்று அநவஸ்தா தோஷமும் உண்டாகும். அதன் கர்த்துருத்தவமும் எப்படி ஏற்கப்படுகின்றது. வியவகாரமாக என்றால், ஷ்ருதி மற்றும் ஸ்ருதிகளை நிராகரித்ததால். அப்பொழுதும் ஜடாம்சம் நிரூபணமாவதில்லை. காரணத்திலேயே (உபதான காரணத்திலேயே) கர்த்துருத்துவம் நிரூபணமாவதால், அதுவும் ஷ்ருதியினால் **நிஷ்க்ரியம், நிர்குணம்** முதலாக கூறப்பட்டதால் **அத்யாசம்** இல்லாமல் அதனை நிரூபிக்கமுடியாது. என்பதால் அதன் கர்த்துருத்துவ தன்மையின் உண்மை நிலை என்ன . ஜீவனின் உண்மையான தத்துவத்தை இந்த உலகத்திலும் மற்ற உலகத்திலும் உள்ள போகங்களை அனுபவிப்பதில் மட்டும் ஆசையுள்ள கர்மத்தில் உழர்பவர்களான இந்த தேவர்களின் பசுக்கள், தேவர்களுக்கு பிரியமானதை கொடுப்பதால் அல்லது பசுக்களை போன்ற புத்தியுடையவர்கள் அல்லது போகத்தில் மட்டும் ஆசையுள்ளவர்கள் ஆகிய இவர்கள் தோஷமுடைய அந்தக்கரணம் உடையவர்களானதால் உண்மையை நிர்ணயம் செய்வது கடினம் . -38-

இதனால் ஆத்மா சித்-ஜடம் இரண்டு தன்மையுள்ளது என்பது நிராகரிக்கப்பட்டபின் அது ஜடமாக மட்டுமே ஏற்கும் நியாய-வைசேஷிக மதத்தை நிராகரிக்க-

**जीवानां वैभवं चेत्तनुकृतिकरणाऽदृष्टसाधारणत्वा**
**न्नस्याद्भोग व्यवस्था व्यक्तिकरमयते येन सर्वैर्मनोऽपि ।**
**नानात्म्यं निष्प्रमाणं गदसि यदि तनूपाधिभिस्त्वं व्यवस्थां**
**सिद्धेऽसिद्धेऽपि भेदे यत इह विफलाः कल्पनीया विशेषाः ॥ ३९ ॥**

நீங்கள் ஏற்கும் ஜீவனானது விபுவானதால் இன்பம் துன்பம் முதலிய போகங்களை பிரித்து, இது என்னுடையது என்று அறியமுடியாது போகும். இதனால் எல்லாருடைய இன்பம் மற்றும் துன்பமானது கலப்படம் ஆகும் நிலை ஏற்படும். உடல், உழைப்பு , மற்றும் உதவியான இந்திரியங்கள் இவைகளுடன் புண்ணிய-பாபங்களும் பொதுவானதால் இது இவனுடையது என்று பிரித்து காட்டவும் ஒருவர் இல்லாததாலும் முன்கூறிய தோஷம் உண்டாகும்.

அந்தந்த உடலுடன் கூடிய மனதினால் இந்த அனுபவமானது ஒருவரில் மற்றொருவரின் இன்பதுன்பத்தை பிரித்தரியும் என்று கூறவும் முடியாது. காரணம் மனமானது எந்த மாதிரி செயலினால் ஒவ்வொரு ஆத்மாவிலும் சம்பந்தத்தினை உண்டாக்குகின்றது என்ற கேள்விக்கு பதிலில்லாமல் போவதால். அது மட்டுமல்லாமல் எல்லாருமே மூர்த்த திரவியத்துடன் சம்பந்தத்தினை உள்ள ஆத்மாவுடன் சம்பந்தம் கொள்வதினாலும் இது இவருடைய மனது என்றும் பிரித்தறிய முடியாது என்கிற காரணத்தினாலும் நிராகரிக்கப்படுகின்றது. இந்த காரணத்தினால் பல ஆத்மாக்களை ஏற்க வேண்டிவரும் ஒவ்வொரு உடலோடும் சம்பந்தமுள்ள ஆத்மா என்று. ஆனால் இப்படி பல ஆத்மாவை ஏற்பதற்கு எந்த பிரமானமும் இல்லாததால். அது மட்டுமல்லாமல் அந்த உடலினால் அடையப்பட்ட புண்ணியபாபங்களை அது அனுபவிக்க முடியாமல் போகும் என்பதாலும்.

நித்திய திரவியங்களில் பேதத்தினை விசேஷம் கொண்டு நிரூபிக்கலாம் என்றால் அந்த விசேஷம் எப்படி பிரிக்கும். ஒரு விசேஷம் என்றால் ஆகாயமும் பலவாகும் என்ற நிலையாகும். பல விசேஷங்கள் பிரிக்கும் என்றால் அது எதனை சார்ந்து இருக்கும் என்ற பிரச்சனையும், பல ஆத்மாக்களை நிரூபிக்க பல விசேஷங்கள், பல விசேஷங்களை நிரூபிக்க பல ஆத்மாக்கள் என்கிற அன்யோன்யாஷ்ரய தோஷம் ஆகும். என்பதால் விசேஷமானது நிரூபணமானாலும், இல்லையென்றாலும் அதனால் எந்த ஒரு பிரயோஜமும் இல்லை. -39-

அனுரூபமான மனதுடன் உண்டான சம்யோகத்தினால் புத்தி முதலிய குணங்கள் உத்பத்தி ஆகின்றது. இப்படிப்பட்ட குணங்களை சார்ந்திருப்பதால் அது திரவியம் என்றாகிறது என்று கூறினால் அதனை நிராகரிக்க...

**किञ्चात्मन्यनवयवे न संप्रयोग स्संभाव्यो निरवयवस्य मानसस्य ।**
**न द्रव्यं निरवयवं न शाश्वतं वा तद्धर्मो नच धिषणा यतो जडा स्यात् ॥ ४० ॥**

அவயவங்கள் இல்லாதது என்று ஆத்மாவை ஏற்பதால் அதில் எந்த விதமான சம்பந்தமும் உண்டாவது இயலாது. இதனால் அதிலிருந்து புத்தி முதலிய குணங்கள் உண்டாவதும் நிராகரிக்கப்பட்டது.

அவயவங்கள் இல்லாத திரவியமும் இருத்தல் இயலாது. அப்படி அவயவங்கள் உடையது என்றால் அது நித்தியமானதாக இருத்தல் முடியாது என்று முன்பே கூறியதால்.

சித்தானது அதன் குணமாக இருத்தலும் முடியாது காரணம் ஜடம் மற்றும் சித்தானதும் ஒளி மற்றும் இருளைபோன்று விரோதமான சுபாவங்கள் கொண்டவை என்பதும் நிரூபிக்கப்பட்டதால்.

புத்தியானது ஜடத்தின் தர்மம் என்று ஏற்றாலும் அது ரூபம் முதலியவை போன்று ஜடமாகவே இருக்கும். ஜடத்திற்கு சித்தன்மை இருப்பதாக எங்கும் காணப்படுவதில்லை என்பதால் இதன் ஸ்வரூபமே நிரூபிக்கமுடியாததாகின்றது. - 40-

ஆத்மாவானது ஜடமாக இருத்தல் முடியாது என்பது மீண்டும் . .

**अज्ञानं स्वमथ सुखं सुषुप्त्यबुद्धं बुद्धस्त्वं स्मरसि कथं स्वतो जडात्मा ।**
**विज्ञानान्ययमयमित्यनेकसंख्यान्यद्राक्षं चिरमिति केन वेत्स्यसाक्षी ॥ ४१ ॥**

ஆத்மாவானது சித் இல்லாத ஜடம் என்று அதன் சுபாவத்தை ஏற்றால். தூக்கத்திலிருந்து விழித்தபின் நான் நன்றாக தூங்கினேன் என்று நினைவு கூறுதல் இல்லாது போகும். காரணம் தூக்கத்தில் அஞ்ஞானமோ அதன் ஆஸ்ரயமான ஆத்மாவோ இல்லாத காரணத்தினால் நினைவானது அனுபவத்தினாலேயே

உண்டாகிறது என்பதால்.

ஆத்மா ஜடமானதால் உங்கள் மதத்தில் அது விழிப்பு, கனவு மற்றும் தூக்கம் முதலிய நிலைகளை அறியவும முடியாது. சாக்ஷியற்றது என்கிறதாகின்றதால் ஞான தாரையினில் இது பானை, இது பானை முதலிய அனுபவங்களினால் உன்டாகும் அதனை, எதனை கொண்டு அறியப்படும் என்று இதனால் பானையை நெடுநேரம் பார்த்தாலும் அதனை மொழிதல் முடியாதுபோகும். -41-

இந்த காரணத்தினால் தூக்கத்தினையும், அங்கு உண்டாகும் நன்றாக தூங்கினேன் முதலிய அனுபவங்களையும், ஞானதாரையினையும் சாக்ஷியாக காண சித்ரூபமான ஆத்மாவினை ஏற்க்க வேண்டியதாகின்றது. இப்படி எதிர்வாதம் செய்கின்ற அணைத்து மதங்களும் நிராகரிக்கப்பட்டது. இப்படி நிராகரிக்கபடமுடியாமல் இருக்கும் அத்வைத வஸ்துவை மந்த புத்தியின் காரணமாக சரியாக புரிந்து கொள்ள முடியாமல் இருக்கும் அவர்களுக்கும் தெளிவாக புரியவேண்டி நித்தியமான இரண்டற்ற சத், சித் மற்றும் ஆனந்த வடிவான ஆத்மாவை நிரூபிக்க-

**इच्छादेरुदयविनाश सन्ततीनामक्षाणामसुमनसां धियश्चतस्मात् ।**
**द्रष्टाऽन्योस्त्यविपरिलुप्तदृक्तत्त्वो निस्सङ्गो विहरति यः पुरत्रयेऽपि ॥ ४२ ॥**

ஆசை, வெறுப்பு, சங்கல்பம், பேராசை, முதலியவையின் பிறப்பு, அழிவு, அதன் தாரையான இப்பொழுது ஆசைப்படுகின்றேன், இப்பொழுது ஆசைப்படவில்லை முதலியதாக இந்திரியம், பிராணன் , மனஸ், புத்தியின் சாக்ஷியாக காண்பவனாக வேறு ஒருவன் இருப்பதால் நிராகரிக்கப்படடதினை தவிர வேறாக ஒரு ஆத்மா இருப்பது நிரூபணமாகின்றது.

ஆனால் பானையானது நாசம் அடையும் போது அதனை கானுதல் என்பதும் நாசமடைவது போல, ஆசை முதலியவை நாசமடையும் போது அதனை கானும் சாக்ஷியான ஆத்மாவும் நாசமடையும் என்றால் அங்ஙனமில்லை, உற்பத்தி, அழிவு இல்லாத சாக்ஷி, சைதன்யமே அதன் உண்மை ஸ்வரூபமானதால். ஆனால்

நாசமடையும் தன்மையுள்ளவைகளுடன் சம்பந்தம் உள்ளதால் ஆத்மா அழியும் தன்மையுள்ளது என்றால். அதுவும் தவறு. காரணம் ஆத்மாவானது தன்னை போலவோ அல்லது தன்னைவிட வேறாகவோ உள்ள எந்தவித வஸ்துவுடனும் சம்பந்தமில்லாமல் ஆனந்தமாக விளையாடுவது போல மூன்று அவஸ்தையகளிலும் சம்பந்தமடையாமல் தனித்து சாக்ஷியாக மட்டும் இருக்கின்றது. -42-

ஆத்மாவானது நித்தியஞானமுடையது என்று நிரூபிக்கபட்டபின் அது ஞானத்தின் ஆச்ரயம் மட்டும் என்று சந்தேகத்தினை நீக்கி ஆத்மா தானே ஒளிர்கின்ற ஞானரூபம் என்பதினை நிரூபிக்க **ஜ்யோதி பிராமணம்** என்கிற பாகத்தினை சுருக்கமாக விளக்க -

संशान्तो रवि शशि वह्नि वाक्प्रकाशे निर्वाणे करणगणे निरस्तसङ्गः ।
स्वज्योतिः प्रकतित वासनामयार्थश्चिद्धातुश्श्रुतिभिरुदीरितोऽन्तरात्मा ॥ ४३ ॥

**பிரகதாரண்யக உபநிஷத்தில் ஜ்யோதிர் பிராம்மனத்தில்** வரும் விளக்கத்தினால் சூரியன். சந்திரன். நெருப்பு மற்றும் சப்தம் இவைகள் அடங்கிய நிலையான தூக்கத்தில் இந்திரியங்களானது அடங்கிய நிலையிலும் தானே ஒளிர்கின்ற வேறு ஒளியானது அவசியமற்ற நிலையில் . அங்கு தூக்கத்தில் . விழிப்பு நிலையில் செய்த அனுபவங்களின் வாசனையினால் உண்டாகும் மாற்றமான கனவினையும் பிரகாசிப்பது அந்த ஆத்மாவே ஆகும். சித்தே சுவரூபமான **ஆத்மைவாஸ்ய ஜ்யோதிர்பவதி** போன்ற ஷ்ருதிகளிலும் இதுவே நிரூபிக்கப்பட்டதாலும் வேறுமாதிரி நிரூபிக்கும் பிரமாணம் இல்லாததாலும் தானே ஒளிர்கின்ற ஆத்மாவானது இப்படிப்பட்டதாக கூறப்பட்டுள்ளது ஷ்ருதி மற்றும் ஸ்மிருதிகளில் -43-

இப்படி தூக்கத்திலும். கனவு நிலைகளிலும் மட்டும் சாக்ஷியாக அறியப்படும் ஆத்மாவினால் என்ன பிரயோஜனம் விழிப்பு நிலையில் இல்லாதிருந்தால் என்ற சந்தேகத்தினை நீக்க விழிப்பு நிலையிலும் தானே ஒளிர்கின்ற சைதன்ய ரூபமாக ஆத்மா ஒளிர்கின்றது. அதனை விசாரித்து அறியமுடியும் என்பதனை கூற-

**बाह्यार्थान्करणगणेन तं च बुद्ध्याबुद्धिं यः प्रथयति सन्ततं स्वभासा।**
**आत्माऽसाऽवनधिगतः पराग्भिरेभिर्विज्ञेय स्तनुभवनाऽऽन्तरप्रदीपः॥ ४४॥**

ஆத்மாவானது இந்திரியங்களின் துணைக்கொண்டு வெளிவிஷயங்களை பிரகாசிக்கின்றது. அந்த இந்திரியங்களால் அறியப்படும் விஷயங்களையும் புத்தியினால் பிரகாசிக்கின்றது. இப்படியாக இந்திரியம் சரியாக இருந்தால் நான் பார்க்கின்றேன் என்றும் பழுதடைந்திருந்தால் நான் குருடன் எனவும் அந்த சாக்ஷியான ஆத்மா பிரகாசிக்கின்றது. புத்தியினை பழுத்த இரும்பினைபோல, அதாவது இரும்பு சுடுகின்றது என்று கூறுவதுபோல ஆத்மாவின் சம்பந்தந்தினால் புத்தி அறிகின்றது என்று பொருள்.

பொருளானது இருந்தாலும், மனதானது வேறு எங்கோ அலைபாய்ந்தது என்றால் அதனை கேட்கவோ, பார்க்கவோ முடியாதகின்றது. இப்படியல்ல ஆத்மாவின் சாக்ஷியானது அது எப்பொழுதும் புத்தியினை, அலைபாயும் மனதினையும் பிரகாசிக்கின்றது. சாக்ஷியானது இருந்ததென்றால் அது ஏன் அறியப்படுவதில்லை என்றால் அது சரியல்ல. அந்தக்கரணம் மற்றும் இந்திரியங்களை அது எப்பொழுதும் பிரகாசிக்கின்றது என்பதால் அதனோடு உள்ள சம்பந்தத்தினை அறியமுடிகின்றது. எப்பொழுதும் வெளியில் உள்ளதனை பார்க்கும் நியதியுடைய உள் மற்றும் வெளி இந்திரியங்களால் அதனை காணுதல் முடியாது.

ஆனால் எப்பொழுதும் அறியப்படாதது என்றால், மனதினாலும் சாஸ்திரமானதும் அதனை போதிப்பது முடியாததாகின்றதால், மனதினால் அறியப்படுகின்றது என்பதற்கு வேறு பிரமாணமும் இல்லாததாலும் என்றால், தவறு, சரீரமான வீட்டினுள்ளே உள்ள விளக்கை போன்று ஆத்மா தானே ஒளிர்கின்றதாக இருப்பதால் அதனை பிரகாசிக்க வேறு ஒன்றின் உதவி அவசியமல்லாது போகின்றது. சாஸ்திரமானது இதனை குறித்த அறிவினை மட்டும் போதிக்கின்றது. -44-

ஆத்மாவானது சித்ரூபம் என்பது நிரூபணமானதின் அதன் ஆனந்த

ரூபத்தினை நிரூபிக்க-

प्रेयान्यस्सदन धनाऽऽत्मज प्रियादेर्यत्प्रेम्णा प्रियमिति मन्यते परा चः।
पारार्थ्याऽवधिरवधीरितैतराथ्यों विज्ञेयस्स खलु सुखाऽब्धिरन्तरात्मा ॥ ४५ ॥

ஆத்மாவில் உன்டான பிரியத்தின் காரணமாகவே தன்னுடைய வீடு பொருள், மனைவி மக்கள் இவைகளின் மேலுள்ள அன்பானது இருக்கின்றது. ஆத்மாவானது அளவற்ற இன்பமானதாலேயே அநாத்ம விஷயங்களான பிராணன், இந்திரியம் முதலியவைகளில் நான் என்றும், என்னுடையது என்றும் அன்பானது உண்டாகின்றது. அதன் (விஷயத்தில்) மேலுள்ள பிரியத்தால் அல்ல. ஷ்ருதியும் இதனையே **ஆத்மனஸ்து காமாய சர்வம் ப்ரியம் பவதி** என்று கூறுகின்றது.

வீடு முதலியவற்றினை ஒப்பிடும்போது, மனைவி மக்களும், இப்படி ஒவ்வொன்றும் உத்தரோத்திரம் ஆசை அதிகம் கொள்ளதக்கதாக இருந்தாலும், ஒருவரும் நான் இல்லாமல் போவேனாக என்று எண்ணுவது கிடையாது என்பதாலும் இப்படி அதிக விருப்பமுள்ளது இது, இதனைவிட அது என்று இந்த ஆசையின் பரம்பரையில் கடைசியாக தானே இருப்பதாலும், ஆத்மாவே அதிக பிரியப்படும் விஷயம் ஆவதாலும், அது குறைவற்ற இன்பமுடையதானதாகவும் இருப்பதால், அப்படிபட்ட இன்பம் விஷயசுகத்தினில் இல்லாததாலும். ஆத்மாவானது இன்ப சுவரூபமுள்ளது என்றால் ஒருவரும் விஷயசுகத்தினை நாடுவது முறையில்லை. முழுவதுமாக உணவு உண்ட ஒருவருக்கு பசியானது இருக்கமுடியாது என்பதுபோல என்றால் அது சரியல்ல. காரணம் அவித்யாவினால் மூடப்பட்டதாக இருக்கும் இந்த ஆத்மாவின் உண்மை சுவரூபத்தை அறியாததாலும் , அதுமட்டுமல்லாமல், நன்றாக உண்டபிறகும் ஒருவரின் தூக்கத்தில் பசி முதலியவை ஏற்படுவது காணப்படுவது உண்டானதாலும் விழிப்பே இந்த மயக்கத்தினை போக்கும் என்றாகின்றது.

அப்படியானால் விஷயங்களில் இன்பமானது இருத்தல் கூடாது என்றாகும். என்கிற சந்தேகம் எழலாம் இதற்கு பதில் அந்த விஷய சுகமானதும் உண்மையில் ஆத்ம சுகமே என்பதாலும், தவறான ஞானத்தினால் அந்த விஷயத்தில் அந்த

சுகத்தினை ஏற்றிபார்த்தலே தோஷம் என்பதாலும். **ஏதஸ்யைவ ஆனந்தஸ்ய அன்யானி பூதானி மாத்ரமுபஜீவந்தி** என்ற வாக்குபடி இது அந்த பரமேஸ்வரனின் ஆனந்தமே என்று ஏற்பதும் சரியல்ல. காரணம் அந்த வேத வாக்கியத்தில் கூறப்பட்ட இதன் என்பது ஆத்மாவினை குறிப்பது என்பதால் -45-

த்வம் பதார்த்தமானது தன்னுடைய ஆத்மா என்பதினை சச்சிதானந்தமாக நிரூபித்த பின்பு. ஆத்மாவானது செய்பவர் . அனுபவிப்பவர் போன்ற தன்மைகள் இல்லாததது என்பதை நிரூபிக்க-

**शुद्धोऽसावहमिदमित्युपाधिधर्मानध्यासादभिमनुते परस्परेण ।**
**वृद्धयादीनिव सलिलप्रभेदधर्मान्ब्रध्नेऽम्बुप्रतिपलिते मृषैव मोहात् ॥ ४६ ॥**

ஆத்மாவில் உண்மையில் செய்பவர் முதலிய தர்மங்கள் இல்லை. அது உடலின் தர்மங்களும் இல்லை. தானே தன்னில் தூய்மையானது இந்த ஆத்மா. ஒன்றில் மற்றொன்றினை ஏற்றி பார்பதால் அஹங்காரம் முதலியவற்றின் தர்மங்களை ஆத்மாவில் ஏற்றி பார்பதினாலேயே இந்த பிரச்சனை. ஏற்றிபார்பது என்றால் அநாத்மாவில் ஆத்மபுத்தி. இதனால் அநாத்மா வஸ்துவினில் அஹங்காரம் முதலியவற்றில் சைதன்யதன்மை. நிரந்தரதன்மை. தோஷமற்றதன்மை முதலியவை உண்டாகின்றது இது எப்படி என்றால் . எப்படி தண்ணீரில் (நதி தண்ணீரில்) உள்ள சலசலப்பு. வளைந்து நெலிந்து செல்லுதல் எல்லாம் அதனில் பிரதிபலிக்கும் சூரியனின் தர்மமாக பார்பது போல.

கர்த்தா முதலிய தன்மைகளும் கேள்வி கேட்கபட்டதால் இதன் தர்மம். அதன் தர்மம் என்று கூறப்பட்டாலும் கேட்டதற்கு எற்ப உண்மையில் விசாரித்தால் அது எதனுடைய தர்மமும் ஆகமுடியாது. காரணம் இந்த தர்மங்கள் எல்லாம் வாஸ்தவமான ஒரு வஸ்துவில் மட்டுமே இருத்தல் முடியும் மித்யாவானதில் முடியாது என்பதால். இந்த அத்யாஸத்திற்கு காரணம் என்ன என்று கேட்டால் அஞ்ஞானமே . அறிவின்மையே காரணம் என்றாகும். -46-

அஞ்ஞானத்திற்கு பிரமாணம் நம்முடைய அனுபவமே அது எதனை மூடியிருக்கின்றதோ அந்த சைதன்யமே அதனை பிரகாசிக்கின்றது. இந்த

அஞ்ஞானம் இரண்டு சக்திகள் உடையது ஒன்று **ஆவரணம்** மற்றொன்று **விக்ஷேபம்** என்பதாகும். இதனை இப்படிப்பட்டது என்று விளக்க முடியாது என்பதால் அது **அநிர்வசனீயம்** என்றும் ஏற்க்கப்படுகின்றது என்பதை காட்ட

अज्ञोऽस्मीत्यनुभवनादनाद्यबोधश्चिन्निष्ठश्चिति विषयस्तमो यथेन्दुम् ।
प्रच्छाद्य स्फुरति चित्तं चितैव भुयो विक्षिप्य भ्रमयति हन्त दुर्निरूपः ॥ ४७ ॥

நான் என்னை அறியாதவன், என்னுடைய உண்மை சுவரூபத்தினை நான் அறிவேனில்லை முதலிய அனுபவத்தினால் எப்பொழுது உண்டாயிற்று என்று கூறமுடியாத அநாதியான இந்த மோகத்தினால் உண்டாகும் அறியாமையானது சித்தை (அறிவை) சார்ந்திருக்கின்றது . இதுவே **மூல அஞ்ஞானம்** என்று கூறப்படுகின்றது.

ஆனால், ஆவரணம் எனப்படுகின்ற மூடல் சுபாவமுள்ள அஞ்ஞானமானது விஷயமாக எப்படி ஆகமுடியும், காரணம், அது அறிவையல்லவா மூடலால் அடைந்திருக்கின்றது என்ற கேள்வி சரியல்ல. எப்படி இருட்டான ராகுவினால் பிடிக்கப்பட்ட சந்திரனையும் அதன் வெளிச்சம் கொண்டே அந்த இருட்டையும் (ராகுவையும்) காண்பது போல என்பதால். ஆவரண ரூபம் உள்ள அஞ்ஞானத்தால் மூடப்பட்டதால் வேறு போல அனுபவமாகின்றது. இந்த சைதன்னியமானது தன்னுடைய சுவரூபமாக அறியப்படுதில்லை என்பதால் பிரகாசிக்கவில்லை முதலிய வியவகாரங்கள் அதில் ஏற்புடையதே.

ஆவரண சக்தியால் பிடிக்கப்பட்டு பின்பு விக்ஷேபசக்தியாலும் சூழப்பட்டதால். விழிப்பில் இந்த இரண்டு சக்திகள் இருப்பதால் ஆத்ம தத்துவமே வேறு ரூபமான ஜகத்தாக தெரிக்கின்றது. ஆனால் தூக்கத்திலோ ஆவரண சக்தி மட்டுமே இருகின்றதால் இந்த ஜகத்தானது அறியப்படுவதில்லை.

இதன் (இந்த அஞ்ஞானத்தின்) சுவரூபம் என்ன என்றால். இது சத்தாக இருத்தல் முடியாது. ஆத்மாவை தவிர வேறு சத்தை ஏற்பதில்லை என்பதால்.

அசத் என்றால், அதுவும் முடியாது, அதன் பிரகாசமோ, அனுபவமோ உண்டாக முடியாது என்பதாலும் பின்னர் பந்தத்திற்கு எந்த காரணமும் இல்லாது போகும் என்பதாலும். இரண்டு ரூபமாகவும் இருக்கட்டும் என்பதும் முடியாது. இருளும் ஒளியும் போல சத்தும் அசத்தும் ஓரிடத்தில் இருத்தல் முடியாது என்பதால். இதனால் சத்தும் அசத்தும் இல்லாதது என்று ஏற்க்கப்படுகின்றது. இங்கு எதிர்பரமாக இருப்பதால் இருட்டு இல்லை என்றால் வெளிச்சம், இந்த இரண்டும் இருக்கும் இடம் மந்த பிரகாசம் முதலிய காரணங்களால் இரண்டும் அல்லாத நிலை எப்படியென்று கேள்வி கூடாது. ஆடு, மாடு இல்லை யென்றால் அது குதிரை ஆக இருக்கலாம் என்பதுபோல என்று ஏற்க்கப்படுகின்றது. இதனால் அஞ்ஞானமாவது மித்யா என்று கூறப்படுகின்றது. -47-

அஞ்ஞானமானது மித்யாவாக இருத்தல் முடியாது. இல்லாமையே மித்யாதன்மைக்கு காரணம் என்பதால் அது காரியத்தில் மட்டுமே இருத்தல் முடியும் என்பதாலும் **வாசாரம்பனம் விகாரோ நாமதேயம்** ஆகிய ஷ்ருதி வாக்கியங்களால் காரியம் மட்டுமே மித்யை என்றாகும் காரணம் இல்லை என்ற சந்தேகத்தினை நீக்க-

**चिद्भाने चितरिव या भिदेव भेदे निर्वाहे निजपरयोस्स्वतस्समर्था ।**
**संभाव्येतर घटनापटीयसी सा संमोहं जनयति विभ्रमेण माया ॥ ४८ ॥**

எப்படி பிரிவானது தன்னை நிலைநாட்டிக்கொள்ள வேறொன்றையும் எதிர்பார்பதில்லையோ. உதாரணத்திற்கு பானை மற்றும் துணியில் உள்ள வேற்றுமை வேறு மூன்றாவது வஸ்துவினால் ஆகாமல் அந்யோன்யமாக, அவைகளிலேயே உண்டாகின்றதோ அதுபோல சைதன்யமானது தன்னை மட்டுமல்லாது மற்றெல்லாவற்றையும் பிரகாசிக்கும் சாமர்த்தியம் உள்ளதானதால் அதனை அறிய வேறொரு வஸ்துவை ஏற்க்க அவசியமில்லை. இரண்டற்ற நிலையில் மற்றவற்றையும் பிரகாசிக்கும் என்று ஏற்பது எப்படி என்றால், மித்யையான தன்னிலேயே தோன்றும் வஸ்துக்களையும் என்று பொருள்.

ஆனால், இப்படி, எல்லாம் அந்த இரண்டற்ற வஸ்துவான பிரம்மமே என்று ஏற்றாலும், ஜீவனாகவும் ஈஸ்வரனாகவும் இருப்பது அதுவே என்பதால் உபதேசிக்க

குரு. சிஷ்யன் என்ற நிலை இல்லாது போவதால் மோக்ஷமே உண்டாக வாய்ப்பில்லை என்றாகும் என்றால நாங்கள் ( வேதாந்திகள்) கூறுவது என்னவென்றால். இந்த மாயையானது நாம் கற்பனை செய்து பார்க்க முடியாத சக்தியுடையதால் இல்லாததை உண்டாக்கவும். இருப்பதனை இல்லாது செய்யவும் சாமர்த்தியம் உள்ளது என்பதால் அதன் ஆவரண சக்தியால் உண்மையை மறைத்து அதன் விக்ஷேப சக்தியால் இல்லாத ஜீவன் என்கிற எண்ணத்தினை உண்டு செய்கின்றது என்று கூறுவதால். அதற்கு இந்த உபதேசம் செய்யும் பரம்பரையானது இருத்தலென்பது தோஷமல்ல. மாறாக குணமாகின்றது. அதன் சக்தியை காண்பிக்க -48-

இப்படி கூறப்பட்ட அத்யாசத்தினை அதன் லக்ஷனையையும் காட்டி அதன் பிரிவையும் **ஞானாத்யாசம்** மற்றும் **அர்த்தாத்யாசம்** என்கிற இரண்டையும் எல்லோருடைய அனுபவத்திலும் ஏற்பதே என்று-

**अद्ध्यासोऽनधिगतवस्तुनि ह्यतस्मिंस्तद्बुद्धिस्स्फुटमनुभूयते प्रतीचि ।**
**अज्ञोऽहं गलितबलो नरो दरिद्रो जीवेयुर्मम तनयाः कथं बतेति ॥ ४९ ॥**

அத்யாசத்தின் லக்ஷணையானது **அதஸ்மின்தத் புத்தி** அதாவது எது எப்படி இல்லையோ அதனில் அதனை பார்ப்பது. இல்லாத ஒரு விஷயத்தினை ஒரு பொருளில் ஏற்றிப்பார்ப்பது. இந்த வகை அத்யாசத்தினை ஞானாத்யாசம் என்று கூறுவர். இது அவித்யா விருத்தியாக இருப்பது. இரண்டாவது. இல்லாத பொருளில் அதன் தர்மங்களை ஏற்றி பார்ப்பது அர்த்தாத்யாசம் என்று கூறப்படுகின்றது.

சிப்பியில் வெள்ளியின் தன்மையானது இல்லாத போதிலும் அது வெள்ளி என்கிற அத்யாசமானது அவித்யா விருத்தியான அதன் வெள்ளி தன்மையே அர்த்தாத்யாசம். ஞானாத்யாசமானது. இது என்று அங்கு ஏற்கும் வெள்ளியானது அந்தக்கரண விருத்தியாகவே இருக்கின்றது என்பதால் ஞானாத்யாசமும் நிரூபணமாகும்.

இந்த அத்யாசமானது எல்லோரும் அனுபவிப்பதே. சாக்ஷி

சைதன்யத்தினை அஹங்காரத்தில் ஏற்றிபார்ப்பதால் அதன் ஆனந்தம் முதலிய சுபாவம் அறியப்படுவதில்லை என்ற போதிலும் அதன் ஸ்புரணமானது மறைக்கப்படாததால் அது சிப்பியை போன்று தெரிகின்றது.

இந்த அத்யாசமானது நான் என்றும், எனது என்றும் இரண்டு வகையாக காணப்படுகின்றது. நான் என்பது இந்திரியம் மனது முதலியவைகளில் ஏற்றி பார்க்கப்படுவது. அறியாதவன் என்பது அவித்யா மற்றும் அதன் தர்மத்தில் அத்யாசம். பலமற்றவன் என்பது பிராணன் முதலியவற்றில் அத்யாசம். மனிதன் என்பது ஸ்தூலமான உடலில் உண்டாகும் அத்யாசம். இப்படி உடலில் ஏற்படும் அத்யாசமானது **அஹம்** (நான் ) என்றும், தரிதிரன் என்றும் , என்னுடைய பிள்ளைகள் என்று **மம** அத்யாசம். போன்றவற்றை தன்னில் ஏற்றிபார்ப்பதினால் அதனை குறித்த துன்பமே உண்டாகின்றது. இப்படி பலவகையான அத்யாசங்களும் துன்ப (துக்க ) சுவரூபங்களே ஆகும் . -49-

ஆனால், ஆத்மாவில் அத்யாசம் உண்டாவது சரி, ஆனால் அனாத்ம பொருட்களில் அது எப்படி ஏற்படும் என்றால், அதற்கு பிரமாணம், ஜடமான அநித்தியமான சுத்தமில்லாத துன்பமே உருவான உடல் முதலியவைகளில் நான் என்றும், அது சைதன்யம், நித்தியம் சுத்தமானது இன்பமயமானது என்றும் எண்ணுவதே என்பதினை காண்பிக்க-

**शुद्धो हृष्टस्स्थिरोऽहं बुध इति च तनावात्मधर्मान्युवाहं**
**स्थूलो गौरोऽभिरूपः पटुरिति च निजे देहधर्मान्मिमीते ।**
**अन्योऽन्याऽध्यस्त सत्यानृत वलितवपुर्लोहपिण्डप्रविष्टो**
**वह्निः कूटाऽभिघातानिव विविधभवाऽनर्थजातं प्रपन्नः ॥ ५० ॥**

ஆத்மாவின் நிஜசுவரூபமான சுத்தம் முதலியவைகளை உடலில் ஏற்றிப்பார்த்து நான் சுத்தமானவன், ஆனந்தமானவன், நித்தியமானவன் சைதன்யமானவன் என்று தவறாக அழிவடையும் ஜடத்தில் காண்பது மட்டுமல்லாமல் நான் நடுத்தர வயதுடையவன், யுவன், புத்திசாலி முதலிய தர்மங்களை அவைகள் இல்லாத ஆத்மாவில் ஏற்றிப்பார்பதும் இப்படி ஒன்றில்

அத்யாசிக்கபடும், சத்திய மித்தைகளோடு கலப்பு சொரூபமாகிய ஜீவன், எரியும் இரும்பு துண்டு பொய் கூறியவரை எரித்து, உண்மை கூறுபவரை ஒன்றும் செய்யாததுபோல, ஆத்மாவின் உண்மையை அறிபவரை இந்த அத்யாசமானது ஒன்றும் செய்யாது. அறியாதவரையே துன்பத்திற்குள்ளாக்குகின்றது. -50-

அத்யாசமானது ரூபமற்ற விஷயங்களில் இருத்தல் முடியாது. அதுமட்டுமல்லாமல் கூறப்பட்ட நான் இளைஞன் பருமனுள்ளவன் முதலியவையும் அந்த மாணவன் நெருப்பு, இவன் சிங்கக்குட்டி முதலிய வாக்கியத்தினை குறிப்பதுபோல உபசாரமாக கூறப்பட்டதால் முக்கியமான பொருளை குறிப்பது இல்லை என்பதால் துன்பமானது அத்யாசத்தின் காரணமாக இருத்தல் முடியாது என்று சந்தேகித்தால் அது சரியல்ல என்று கூற-

दृष्टः प्रत्यक्पराचोर्विषययोर्भास्तमोवद्विरोधे
ऽप्यध्यासोऽहंममेति स्फुटमिति सुधियां नास्त्यसंभावनाऽत्र ।
स्वप्नादौ गत्यभावाद्गगनमलिनिमाऽध्यासदृष्टेर्बुधानां
पश्वादीनां च साम्याद्व्यवहृतिरखिलाऽध्यासमूलेति सिद्धम् ॥ ५१ ॥

ஆத்மா மற்றும் அனாத்மா விஷயங்களில் பிரகாசிப்பதும் பிரகாசிக்கின்றதுமான இவைகளில் வெளிச்சமும் இருளும் போன்று விரோதமான சுபாவமானவைகளாக இருந்தாலும் நான் எனது என்கிற இரண்டுவகையான அத்யாசமும் எல்லோருடைய அனுபவத்தில் இருப்பதால் இது உண்டாவதில் எந்த தடையுமில்லை. நான் என்ற சொல்லானது முக்கியமல்லாத வேறு பொருள்படும்படியாக உபயோகிப்பதும் காணப்படுவதில்லை.

ரூபம் முதலிய சாதாரணமான தர்மங்களற்றதில் அத்யாசமானது உண்டாக முடியாது என்று கூறுவதும் சரியல்ல. காரணம் கனவிலும், கானல் நீரிலும் அது உண்டாவது பார்க்கபடுவதினால் அது மட்டுமல்லாமல் எந்த ரூபம் முதலிய குணங்களும் இல்லாத ஆகாயத்தில் அது . அழுக்கானது நீல நிறமுள்ளது முதலிய அத்யாசங்கள், காணப்படுவதால் . அதுமட்டுமல்லாமல் அப்படி இந்த அத்யாசமானது இல்லாதிருந்தால் வியவாகாரமானதும் உண்டாகாது போகும்.

இரண்டற்ற சங்கமற்ற, உதாசீனமான சைதன்யமானது பிரவிருத்தி செய்ய இயலாது என்பதால். ஆனால் இது பாமரஜனங்களுக்கு சரியகும் ஞானிகளுக்கல்ல என்றும் கூறமுடியாது. அங்கும் வியவகாரத்தினை வேண்டி **லேஷாவித்யா** என்று கூறப்படுகின்ற பிராரப்தகர்மத்தினால் உண்டாகும் சிறிய அவித்யாவானது பாக்கி இருக்கும் என்று ஏற்பதினால், லௌகீகம், மற்றும் சாஸ்திரீகம் இரண்டு வியவகாரமும் தோஷமற்றதாகும். இது பூர்வாசிரியர்களால் ஏற்க்கப்பட்டு நிரூபிக்கப்பட்டதாலும் -51-

விரக்தியை இங்கேயே அடையவேண்டும், அடையாவிட்டால் உண்டாகும் கஷ்டங்களை காண்பிக்க -

**धर्माद्देवत्वमेति व्रजति पुनरधः पातकैस्स्थावरादी**
**न्देहान्प्राप्या प्रणश्यन्क्वचिदपि लभते मानुषत्वं च ताभ्याम् ।**
**कर्मज्ञानोभयेन व्रजति विधिपदं मुच्यते कोऽपि तस्मिन्**
**रागी प्रत्येति भूयो जनिमिति विषमं बंभ्रमीतीह लोकः ॥ ५२ ॥**

பிதிக்கப்பட்ட கர்மத்தினை செய்வதாலும், நிஷேதிக்கப்படட கர்மத்தினை செய்மலிருப்பதாலும் உண்டாகும் புண்ணியத்தால் தேவர் முதலிய பதவியை அடைகின்றனர். புண்ணியமானது அழிந்ததும், அனுபவிப்பதாலேயே அழியும் தன்மையுள்ளதால் , பாவமானது பலனளிக்கும் காரணத்தினாலும் கீழ் உலகத்தினை அடைந்து அங்குள்ள துன்பத்தினை அனுபவிக்க நேரிடுகின்றது. இந்த உலகத்தில் பிறந்தாலும் மனிதப்பிறவு ட்டுமே கிடைக்கும் என்ற நியமம் இல்லாததாலும் சில கர்மபலன்களை அனுபவிக்க அதற்கு ஏற்ற சரீரமான புல், பூண்டு, பூச்சி முதலிய சரீரங்களும் அடைய நேரிடும். மீண்டும், மீண்டும் மரணத்தினை அடைந்து பலவகையான பிறவிகளை அடைந்து மிகவும் அரிதான இந்த மானுடப்பிறவியானது உண்டாகின்றது. அதிலும் அறிது, சாஸ்திர முறைப்படி வாழும் சாதுக்களின் சங்கமும் அவர்கள் உபதேசமும் கிடைப்பது.

இப்படி கர்மத்தினால் உண்டாகும் பலனானது நிரந்தரமற்றது. என்பதால், உபாசனைகளினால் உண்டாகும் பலன் இதனை காட்டிலும் உயர்ந்தது என்ற

எண்ணமும் வேண்டாம். அதனாலும் உபாசனைக்கேற்ப நல்ல பதவியை அடைந்து அந்த பிறவியில் இருக்குங்களால் விரக்தி அடைந்து பிரம்மனுடன் அவர்களும் மோக்ஷத்தினை அடைகின்றனர். வைராக்கியத்தினை அங்கும் அடையாதவர்கள் மீண்டும் முன்பு கூறியபடி பலவகை பிறப்புகளை அடைகின்றனர். அநாதி காலம் முதல் இப்படி பிறப்பிறப்பு என்னும் சக்கரத்தில் சிக்கி தவிக்கும் கொடுமையை என்ன சொல்வது. காரணம் . பதவியை அடைந்தாலும் பிரம்மலோகம் முதலிய அங்கும் வைராக்கியத்தினால் உண்டான ஞானத்தினாலேயே மோக்ஷமானது என்பதால். அதனை இங்கேயே அடைவது சுலபமானதும் சிறந்ததும் என்றாகின்றது. -52-

இந்த சம்சாரமானது துன்பம் மட்டுமே உள்ளதாக இல்லாமல் சிறிது இன்பமும் உடையதாக காணப்படுவதாலும், சுவர்கமும் போக பூமியாக கூறப்பட்டிருப்பதால் அது நிரந்தரமானது என்ற சந்தேகத்தினை நீக்க, அதிலும் உண்டாகும் இன்பத்திலும் துன்பமே உண்டாகின்றது என்பதினை.-

**दुःखं स्वर्हात्प्रपाते बहुविधनरके गर्भवासेऽति दुःखं**
**निस्स्वातन्त्र्याऽशनाया ग्रह गद रुधिरैश्शैशवे दुःखमेव ।**
**तारुन्येऽमर्षलोभ व्यसन परिभवोद्वेग दारिद्र्य दुःखं**
**वार्धक्ये शोकमोहेन्द्रियविलयगदैर्दुःखमनन्तेऽतिदुःखम् ॥ ५३ ॥**

சுவர்கத்திலும் ஏற்றதாழ்வு உண்டானதாலும் அந்த சுவர்கத்தின் அனுபவமானது முடிந்த பிறகு அங்கிருந்து மழையாக மாறி அதில் சேர்ந்து விழுவது துன்பம். அதிலும் பலவிதமான கீழ்லோகத்தில் போய் அனுபவிக்க நேரிடும் துன்பம். இல்லாவிட்டாலும் மழைநீரிலிருந்து பயிராகி அதனை உண்ட ஆண் அல்லது பெண்களின் உயிர்சக்தியாகி கர்பத்தினில் இருப்பது அங்குள்ள மலம் மற்றும் பல துன்ப நிலைகளில் உண்டாகும் துன்பம். பிறவியுற்றாலும் குழந்தையாக இருக்கும் போது தன்னுடைய விருப்பம்போல் ஒன்றும் செய்யமுடியாத நிலையில் உண்டாகும் தாகத்தினை கூட கூறி தீர்த்துக்கொள்ள முடியாத நிலை அதுமட்டுமல்லாமல் பால்ய வயதினில் உண்டாகும் வியாதிகளும், பயம் முதலியவற்றினால் உண்டாகும் துன்பம், இளமையினில் கோபம்,

பேராசைகளினால் துன்பம், குரு முதலியவர்களை அவமதிக்கும் செலால் ஏற்படும் பாபம், பணம் ஈட்ட துன்பம், ஈட்டிய பணத்தை செலவு செய்வதில் துன்பம். இப்படி ஒவ்வொரு வாழ்வின் நிலையிலும் துன்பம் எண்ணிலடங்காது இருப்பது காணப்படுகின்றது. -53-

இந்த பிறப்பிறப்பு என்னும் சக்கரத்தினை , பெருங்கடலை கடக்க சாஸ்திர மற்றும் ஆசாரியரின் வாக்கியத்தில் உண்டாகும் ஞானமே வழி என்பதை-

**इत्थं यः कर्मबद्धो भ्रमति परवशः प्राणभृज्जन्मसङ्घैः**
**दुःखस्याऽन्तं न वेत्ति स्मरति न च जनिव्रातमज्ञानयोगात् ।**
**तं सर्वाऽनर्थमूलप्रशमनविधिना स्वात्मराज्येऽभिषेक्तुं**
**तात्पर्येण प्रवृत्ताश्श्रुतिशिखरगिरस्सूत्रभाष्यादयश्च ॥ ५४ ॥**

ஆத்மாவானது அறியாமையால் உண்டான தவறான அத்யாசத்தினால் ஜீவன் என்று தன்னை பந்தத்தில் அகப்பட்டவனாக எண்ணி அநாதிகாலமாக அனாத்மாவானவற்றில் அடிமையாகி ஒரு நிலையற்றதான மேல் மற்றும் கீழ் லோக யாத்திரையினை செய்துக்கொண்டு இருக்கின்ற நிலையில் துன்பத்தினை போக்க வழியினை அறியாதும், முன் ஜன்மங்களில் அனுபவித்த துன்பங்களையும் நினைவு கொள்ளாமல் உழன்று பல ஜன்ம புண்ணியத்தினால் விவேக வைராக்கியத்தினை அடைந்து எல்லா துன்பத்திற்கும் காரணமான அறியாமையை அறிந்து அதனை தன்னுடைய ஆசாரியரின் வாக்குபடியும், வேதாந்த சாஸ்த்திரத்தின் அத்யயனத்தினாலும் , தன் உண்மை சுவரூபத்தில் நிலைபெறவேண்டி பிரகரண கிரந்தங்கள், பகவத்கீதை, உபநிஷத், பிரம்மசூத்திரம் இவைகளோடு ஸ்ரீ சங்கரசாரியாரின் பாஷ்யத்துடன் படிக்க பிரவிருத்தி உண்டாகின்றது. இப்படிப்பட்ட வேதாந்த ஞானத்தினாலேயே தன்னுடைய உண்மை நிலையை உணரமுடியும் என்பதால். இதனையே ஷ்ருதியும் **ஞானாதேவ து கைவல்யம்** என்று திடமாக கூறியுள்ளது. -54-

## अध्यारोप प्रकरणं सम्पूर्णम्

**- அத்யாரோப பிரகரணம் முற்றிற்று -**

# अथ अपवाद् प्रकरणम्

## அபவாத பிரகரணம்

अरुणाचलमिति अहं यः चिन्त्यति ।

तत्त्वं अंहय अरुणाचल ॥

வேதாந்த மகாவாக்கியமான **அஹம் பிரம்மாஸ்மி** என்பதை போல நான் அருணாசலன் என்று எவர் நினைக்கின்றாரோ அவருக்கு தத்துவத்தினை பிரகாசிப்பாய் அருணாசலா. **அன்ஹ** என்ற வேர் சொல்லுக்கு பிரகாசிப்பதில் என்று பொருளெடுத்தால் இவ்வாரும். செல்லுதலில் என்கிற பொருள் எடுத்தால் - அருணாசலம் என்று அகத்தினில் எவர் நினைக்கின்றாரோ அவருடைய அகத்தினை நீ அடைவாய் அருணாசலா இருட்டானது பிரகாசம் இருக்கும் இடத்தில் இருத்தல் இயலாது என்பது போல அருணாசலன் என்கிற ஞான சுவரூபத்தில் அறியாமை அழியும் . அருணாசலனை நினைப்பவன் ஞான சொரூபமே ஆவான் என்று பொருள்.

இங்கு **அத்யாரோப பிரகரணம்** கூறிமுடிந்தபின், தத் பதப்பொருளான அந்த மாயா கூடிய பிரம்மமே வேறற்ற நிமித்த உபாதான காரணமாக இருந்து உலகத்தினை உண்டாயிற்று என்பதனையும், த்வம் பதப் பொருளான ஆத்மாவோ இந்த பிராணன் இந்திரியங்கள் போன்றவற்றிலிருந்து வேறானதாகவும். இப்படிப்பட்ட உண்டாக்கும் தன்மை, மாறும் தன்மைகளற்ற பிரம்மமோ அவித்தியாவின் அத்யாசத்தினால் செய்தல் அனுபவித்தல் முதலியவை உடையதாகவும் இருப்பது காண்பிக்கப்பட்டது. இப்பொழுது இந்த **அபவாத பிரகரணத்தில்** அந்த அத்யாரோபத்தினை நீக்கி மஹாவாக்கியத்தின் பொருள் நிரூபிக்கப்படுகின்றது.

துஷ்டரை கண்டால் தூர விலகு என்பதை போல அநாவசியமாக அந்த சக்தியினை தீண்டி (அத்யாரோபம் என்னும்) அதனை (அபவாதம் மூலம்)

விலக்குவதினை காட்டிலும் நேரடியாக பிரம்மத்தினை கூறுவது உத்தமம் என்று கூறமுடியாது. காரணம் எல்லாமாகவே பிரம்மமானது இருப்பதாலும் கயிரில் பாம்பு ஏற்றிபார்க்கப்பட்டது போல இதனில் ஜகத்து ஏற்றி பார்க்கபட்டதனாலும். லக்ஷணங்கள் இல்லாத பிரம்மத்தினை நேரடியாக சுட்டிகாட்ட முடியாததாலும் ஏற்றி காண்பித்து அதனை நீக்குவது மூலம் இரண்டற்ற பிரம்மம் நிரூபிக்கப்படுகின்றது.

ஆனால் எந்த லக்ஷணமும் இல்லாத இதனை (பிரம்மத்தை) ஷ்ருதியும் எப்படி சுட்டிகாட்டமுடியும். கொம்பானது முயலின் லக்ஷணமாகாதது போல பிரசித்தமானதிலேயே லக்ஷணத்தின் மூலம் காண்பிக்க முடியும் என்பதாலும் என்று கூறுதல் முறையாகாது காரணம் லக்ஷணம் இல்லாததும் லக்ஷியத்தினை குறிப்பது முடியும் என்பது.-

**हेतुत्वं लक्षणं यद्गदितमिदमुपादान कर्तृत्व रूपं**
**ताटस्थ्यादास्पदं स्वं गमयति परमं ब्रह्म शाखेव् चन्द्रम् ।**
**एवं लक्ष्यं च सच्चित्सुखवपुरखिल द्वैतहीनं सुसूक्ष्मं**
**सत्य ज्ञानादि मन्त्रोदितमखिल मनो वागतीतं गुहास्थम् ॥ १ ॥**

பிரம்மமானது வெறும் நிமித்த காரணமோ அல்லது வெறும் உபாதான காரணமோ இல்லை. ஆனால் அபின்ன நிமித்த உபாதான காரணம். உபாதானமும் பிரம்மமே இந்த உலகத்தை உண்டாக்கும் கர்த்தாவாகவும். (செயலின் அறிவுடையவர்) பிரம்மே இருக்கின்றது.

**சத்யம் ஞானம் அனந்தம் பிரம்ம** என்பது போல சுவரூப லக்ஷணமோ அல்லது **லம்பகர்ணோ தேவதத்த** (பெரிய காதுடையவன் தேவதத்தன் ) என்பது போல தன்னோடு கூடிய லக்ஷணமோ இல்லை. ஆனால் கற்பிக்கப்பட்ட அதிஷ்டானமான நிராகரிக்கப்படமுடியாத சுத்த பிரம்மத்தினை குறிக்கின்றது. இதுவும் நேரடியான குறிப்பாக இல்லாமல் கூடஸ்த லக்ஷணையாக இருக்கின்றது. இது தளத்தில் உள்ள மரத்தினை சுட்டிக்காட்டி அதன் உச்சானி கொம்பினை தொட்டடுத்து இருக்கும் பிறையை (சந்திரனை) காட்டுவது போல நேரடி

சம்பந்தமற்ற கொம்பினால் சந்திரனை அறிவது போல பிரம்மம் காண்பிக்கப்படுகின்றது.

கற்பனை செய்யப்பட்ட சம்பந்தத்தினால் குறிப்பானது உள்ளதுபோல குறிக்கப்பட்டதும் உள்ளது. காரணம் இரண்டு என்பதே இல்லாத, தன்னை போலவோ, தன்னிலோ அல்லது வேறொன்றோ அதனுடன் மூன்று காலத்திலும் சம்பந்தம் இல்லாத காரணத்தினால், பஞ்ச மஹாபூதங்களை காட்டிலும் சூக்ஷ்மமான அதன் தன்மாத்திரைகளை காட்டிலும் சூக்ஷ்மமான அவ்வியக்தத்தினை காட்டிலும் சூக்ஷ்மமானது பிரம்மம், அது சத்தியம் ஞானம் அனந்தம் என்று குறிப்பிட பட்டதோ அந்த சுவரூபமாகவே இருக்கின்றது. அப்படிப்பட்ட இந்த பிரம்மமமானது வார்த்தைகளுக்கும் மனதிற்கும் எட்டாதது. ஐந்து கோசங்களின் குகையில் ஆனந்தகோசத்திற்கும் உள்ளில் தானே ஒளிர்கின்றதாக இருக்கின்றது. -1-

ஜகத்தினை மித்தியா என்று நிரூபிப்பதாலேயே லக்ஷியமான பிரம்மம் நிரூபணமாகும் என்பதால் காரண சுவரூபத்தினை விசாரிப்பதற்காக -

**कूटस्थं ब्रह्म विश्वं जनयति न विना मायया स च मिथ्या**
**तस्मिञ्छब्दप्रसिद्धेः परसम्धिगमात्तन्निवृत्तिश्रुतेश्च ।**
**सैवाऽविद्या मृषार्था अपि समधिगथाः कार्यदक्षाः प्रपञ्चः**
**तस्मान्मायूरपिञ्छच्छविरिव गहनो ब्रह्मसंविद्विवर्तः ॥ २ ॥**

மாற்றமில்லாத பிரம்மமானது, இந்த ஜகத் முழுவதினையும் சிருஷ்டிக்கின்றது. மாற்றமற்ற தன்மையே ஜகத் மித்யா என்பதற்கு காரணமாகின்றது. இதனால் மாயாவானது இல்லாமல் இது (ஜகத்) உண்டாக முடியாது என்பதும் திண்ணமாகின்றது. கயிரில் பாம்பானது இல்லாத போதிலும் உள்ளது போன்று தோன்றுவதால், அதுபோல ஜகத்தும் என்பதால் மித்யா என்பது நிரூபணமாகின்றது. தன்னிலிருந்து வேறானதாக இல்லாமல் தன் சுவரூபமாகவே ஜகத் இருப்பதால் அத்யாசத்தினாலேயே இரண்டாக தெரிகின்றது. இந்த **மாயா** மற்றும் **மித்யாவும்** வேறல்லாததது என்பது பிரசித்தமானதால்

கண்கட்டுவித்தைபோல இந்த மாயையானது எல்லா விதமான வியவகாரமும் உண்டு செய்கின்றது.

அதனால் இந்த மாயையானது ஒரு **பிராந்தி** (தப்பான அறிவு) என்று ஏற்க்க முடியாது. **மாயா து பிரகிருதிம் வித்யாத் மாயினம் து மஹேஷ்வரம்** இந்த பிரகிருதியை மாயையாகவும் இதனை உண்டாக்கியவர் மஹேஷ்வரர் என்று கூறப்பட்டதாலும் ஈஸ்வரனில் பிராந்தியானது இருத்தல் இல்லாத காரணத்தினால் அப்படிப்பட்ட இந்த மாயை ஞானத்தினாலேயே நீங்கும் என்பதாலும் அது மித்யா என்று நிச்சயமாகின்றது. ஆனால் ஜீவனில் உண்டாகும் அவித்தையானது வித்தையினால் நீங்கும் என்பது ஏற்க்கப்படலாம். ஆனால் ஈஸ்வரனை சார்ந்துள்ள மாயாவானது எப்படி நீங்கும் என்றால் அந்த மாயாவே அவித்தையானதால் இதில் எந்த விரோதமும் இல்லை.

ஆனால் இப்படி மித்யையான பொருட்களிலிருந்து காரியமானது நடக்க முடியாது. கானல் நீரில் குளிப்பது முடியாதது போல என்றால் இது சரியல்ல, காரணம், மித்யையாக இருந்தாலும் அது மாயாஜால செயல்களால் உண்டாகும் ஆயுதங்கள் போல அழிக்கும் திறமை உள்ளது. அது மட்டுமல்லாமல் கனவு நிலையிலும் அங்குள்ள பொருட்களின் அனுபவங்களும் அங்கு உண்டாகும். பசி, தாகம் ஆகியவை அங்கேயே உள்டாகும் . உணவு மற்றும் நீரினால் தீர்க்கப்படுகின்றது. இந்த காரணங்களால் மாயையானது இந்த ஜகத் என்பதும் பிரம்மத்தில் **விவர்த்தமாக** (வேறாக காணப்படுவதே) கயிரில் பாம்பு போன்று என்பதினால். இந்த மாயாவினை இப்படிப்பட்டது என்று நிச்சயிக்கவும் முடியாது. மயிர்பீலியானது எப்படி பச்சையாகவும், நீளமாகவும், இப்படி பல வர்ணங்களில் தெரிகின்றதோ அதுபோல சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் முதலிய பல காரணங்களாலும் இது இப்படி என்று குருடர்கள் கூறும் யானையை போல பலவிதமாக கூறுவதும் அதன் அறியமுடியாதன்மையை காண்பிக்கின்றது. இதுவே அதன் மித்யை தன்மையையும் நிரூபிக்கின்றது. -2-

இப்படி காரண சுவரூபமாக மித்யா தன்மையை நிரூபித்து **வாசாரம்பணம் விகாரம் நாமதேயம்** (வாக்கின் விகாரமே பெயர் முதலிய) முதலிய ஷ்ருதியின் தர்கத்தினை அனுசரித்து **சர்வம் கள்விதம் பிரம்ம** (இது எல்லாம் பிரம்மமே) என்ற வாக்கியங்களில் காண்பிக்கப்பட்ட காரிய சுவரூபமாக மித்யா தன்மையை

விவரிக்க..

यस्माद्विश्वं सदुत्थं सदुपभृतमहो लियते तत्र तस्मा
त्सन्मात्रं नान्यदस्मामृद इव घटिकोदं चनादिर्विकारः।
सद्भेदे सदसत्वं सदथ यदि तदा नास्ति भेदः कथञ्चि
द्भेदाऽभेदौ विरुद्धौ न हि भवति भिदाऽभिन्नवस्तुप्रतिष्ठा॥ ३॥

இந்த ஜகத்தானது இரண்டற்ற பிரம்மத்திலிருந்து உண்டானதும். அதனாலேயே பாலிக்கப்படுவதும். அதிலேயே லயம் அடைவதும் எதனாலோ. அதனாலேயே மூன்று காலத்திலும் பிரம்மனை தவிர வேறு ஜகத் என்பதும் இல்லை. எப்படி பானை. கபாலம் (கப்பரை) ஆகியவை மண்ணை தவிர வேரில்லையோ அதுபோல.

பிரம்மத்திலிருந்து ஜகத் வேறானது என்று கூறினாலும். வேறில்லை என்று கூறினாலும் அது மித்யா என்றேயாகும். எப்படி என்றால் பிரம்மத்திலிருந்து வேறானது ஜகத் என்றால். பிரம்மமானது சத் என்பதால் ஜகத் அசத் என்றாகும் அதனால் அது மித்யா என்பது முடிவாகும். அது வேறல்ல என்று கூறினால் அத்வைதமே வெல்லும். அது பிரம்மத்திலிருந்து வேறு.. வேறுல்ல என்பதால் ஜகத் மித்யை என்பதே முடிவாகும். இதனால் பேதமும் அபேதமும் ஆனது ஜகத் என்று கூறினால் இரு வேறு விரோத நிலையில் இருத்தல் முடியாது என்பதாலும் பேதமற்ற . பேததன்மையில்லாத பிரம்மத்தில் பேத தன்மையானது இருத்தல் என்பதும் முடியாது. -3-

பேதம் என்பது இருத்தல் முடியாது என்பதினை - (ஏழு சுலோகங்களில்)

भेदोऽभिन्ने प्रतितो भवति खलु मृषा चन्द्रनानात्मतावत्
भिनेऽभेदश्च तद्वत्प्रभवति हि ततो न स्वतो वस्तुभेदः।
धर्मैर्भेदः प्रसिद्धचेद्यदि भवति भिदा धर्मिणो हन्त तेषां

भेदेऽभेदेऽपि लोके न खलु परिचिता धर्मधर्मिव्यवस्था ॥ ४ ॥

வேறல்லாத பொருளில் பிரிவு உள்ளதுபோல தெரிவது மித்யா என்பது எல்லோரும் அறிந்ததே. எப்படியென்றால் சந்திரன் ஒன்று என்று அறிந்தாலும் நீர்தேக்கங்களில் கானும் பல சந்திரன்கள் போல.

ஆனால் தூரத்தில் இருக்கும் பல அல்லது இரு மரங்கள் நமக்கு ஒன்று போல தெரிவது போல ஆத்மாவும் இந்திரியம், பிராணன் இவைகளுடன் ஒன்று போல தெரிகின்றது என்று ஏன் ஏற்க்ககூடாது என்றால் அப்படி ஏற்றாலும் எந்த தவறும் வருவதில்லை ஒன்றான ஆத்மாவில் பலவாக தெரிவதே மித்யா என்று கூறியதால் அதுமட்டுமல்லாமல் வளையல், மோதிரம் முதலியவைகளில் தங்கத்தினை தவிர வேறொன்றின் இருப்பு அறியப்படாததாலும், பொய்யான பிரிவு பிரிவற்ற தன்மையை அழிக்கும், சக்தியற்றதால். ஆனால், சரி இதனால் தர்மியில் பிரிவில்லாததை காணும் போதும் தர்மத்தினால் பிரிவினை ஏற்க்கவேண்டும் என்றால் அந்த தர்மங்களை தர்மிகளில் பிரிவு உள்ளதாக இருந்தால் இப்படி ஏற்க்கலாம். ஆனால் அது அவ்வாறு இல்லை என்று நீங்களும் ஏற்பதனால்.

உலகத்தில் ஆடு, மாடு முதலியவைகளில் பிரிவும் சந்திரனில் பிரிவற்ற தன்மையும் காணும்போதும் அதன் தர்மம் மற்றும் தர்மியின் வியவகாரமானது. அதுபோல இருத்தல் தர்மமாகவும், தர்மியாகவும் விசாரம் செய்யுங்கால் பிரமாணமில்லாத நிலையை அடைவதால் தர்மம் -தர்மி என்கிறதும் மற்ற பிரிவை போல மித்யை என்றாகிறது. -4-

ஆடு, மாடு முதலிய தர்மிகளில் அதன் தர்மமான ஒரு குளம்புடையது, தாடையுடையது போன்றவைகளும் எப்படி பிரிவை உண்டாக்குகின்றது. தன்னில் ஒன்றில் இல்லாத தர்மத்தினை மற்றொன்றில் கொண்டு புதிதான ஒரு பிரிவை உண்டாக்குமோ என்று கேள்வி எழுகின்றது. இதில் முதல் பக்ஷத்தினை நிராகரிக்க-

यच्चाऽऽभिन्नं स्वतस्तन्न भवति परतो भेदभाङ्नान्यभेदा

दन्यो भिद्येत धर्माः कथमथ विविधा धर्म्यभेदादभिन्नाः ।

भेदो भिन्नाश्रयश्चेदधिकरणभिदा तेन चेदात्मनिष्ठा
नोचेदन्योन्यनिष्ठास्थितिहतिरथवा तद्भिदा दुर्निरूपा ॥ ५ ॥

தங்கம் முதலிய தர்மிகளில் பிரிவானது இருக்கமுடியாது அது பிரிவற்ற தன்மையாகவே இருப்பதால் இதனால் அது அதன் தர்மங்களான வளையல் முதலியவைகளால் பிரிவை அடையும். என்றால் அதுவும் சரியல்ல. காரணம், உற்பத்தியாகிய இந்த பிரிவானது பிரிவற்ற தன்மையை அழிக்குமானால் பல வளையல்கள் உண்டாகும் நிலையடையும். அப்படி அழிக்காது போனால் வளையல் முதலியவை உண்டாகாது போகும் நிலையாகும். வேறு மற்றதில் உள்ள பிரிவினால் வேறொன்று பிரிவையடையும் என்று ஏற்பதும் முறையல்ல. தண்டம், குண்டலம், இவைகளின் பிரிவால் (விசேஷணங்களின் பிரிவால்), விக்ஷேிக்கப்பட்டவர் வேறாவர் என்று ஏற்றால் பானை மற்றும் துணி இவைகளின் பிரிவால் தேவதத்தன் வேறாகின்றான் என்றாகும்.

தர்மியுடன் பிரிவற்றதாக உள்ள தர்மங்களிலும் பிரிவானது ஏற்க்கப்படமுடியாது. தர்மத்தினால் அதனின் பிரிவால் தர்மியில் பிரிவு என்றால் தர்மியின் பிரிவற்ற தன்மையால் தர்மங்ளிலும் அப்படியே பிரிவற்ற தன்மை உண்டாகும் என்பதால். தர்மங்ளில் உள்ள பிரிவினால் தர்மங்கள் பிரிவடைவதால் என்றும் கூறமுடியாது. அதன் பிரிவை நிரூபிக்க வேறொன்று என்று **அநவஸ்தா** தோஷமே உண்டாகும்.

இந்த பிரிவுகள் தன்னையே சார்ந்திருக்க முடியாது. பிரிவு பிரிவற்றதினை சார்ந்திருக்க முடியாததால். **வியாகாத்த** தோஷம் உண்டாகின்றது. இதனால் வேறொன்றை சார்ந்திருக்கின்றது என்றால் அது எப்படி வேறாகின்றது. நிரூபிக்கபோகும் பிரிவினாலா அல்லது வேறொரு பிரிவினாலா முதலாவது என்றால் தன்னை சார்ந்திருப்பதால் **ஆத்மாஸ்ரய** தோஷம் உண்டாகும். இதனால் வேறொன்று பிரிவினால் என்றால் அதனையும் நிரூபிக்க, நிரூபிக்கப்படும் பிரிவை சார்ந்திருப்பதால் **அந்நியோன்யாஸ்ரய** தோஷம் உண்டாகும். இதனால் அதனை நிரூபிக்க வேறொரு பிரிவை ஏற்றால் **சக்கரக** தோஷம், **அநவஸ்தா** தோஷம் ஆகியவை உண்டாகும்.

இதனால் இந்த பிரிவானது எதனை சார்ந்திருக்கும் என்பது நிரூபிக்கபடமுடியாததாகையால் பிரிவு என்பது மித்யா என்பது தெளிவாகின்றது. -5-

**भेदोयं भिन्नधर्मिप्रतिभटविषयज्ञानजज्ञानवेद्यो**
**धर्म्यादिर्भेदसिद्धिः पुनरपि च तथेत्यापतेच्चाऽनवस्था ।**
**भेदे धर्म्याद्यभेदे बत भवति मृषा भेदबुद्धिर्विभेदे**
**प्रादिःष्युः पूर्वदोषा नच गतिरपरा तेन भेदो मृषैव ॥ ६ ॥**

தர்மியினை சார்ந்திருக்கும் தர்மி ஞானமும், பிரதியோகியோடு சார்ந்திருக்கும் பிரதியோகி ஞானமும் (எதன் இன்மையோ அது) கூடியதாக பிரிவு ஞானம் இருப்பதால், பிரிவின் ஞானம் உண்டாக தர்மியின் பிரிதியோகி ஞானமானது அவசியமாகின்றது. இதனால் பிரிவை நிர்ணயிக்க தர்மி மற்றும் பிரதியோகி ஆகியவைகளின் ஞானமானது அவசியமாகின்றதால் முன்பு கூறப்படடது அநவஸ்தா தோஷம் உண்டாகும். அது மட்டுமல்லாமல் அந்த மூன்றாவது பேதமானதுடன் தர்மி மற்றும் பிரதியோகியானது பிரிவற்றதாக இருக்கின்றதா இல்லை பிரிவுடையதாகவா என்று கேள்வி மீண்டும் எழும். ஆத்மாஸ்ரய தோஷம் முதலியவைகளை போன்று முன்பு கூறிய தோஷங்கள் உண்டாகும் நிலைக்கு பயந்து பிரிவற்றது என்று ஏற்றால், பிரிவென்பதே நிரூபிக்கப்படமுடியாததாக மித்யையாக ஆகும். காரணம் பானை மற்றும் துணி இவைகளினை காட்டிலும் வேறான ஒன்று நிரூபிக்கப்படாததால். தாமியில் பிரிவானது இருக்கும் என்பது ஏற்க்கப்படாததாலும், தர்மி மற்றும் பிரிவில் ஒன்று மற்றொன்றிக்கு ஆதாரமாகவும் அதனை சார்ந்திருப்பதாகவும் இருக்க முடியாது ஆகின்றது என்பதால் துணி முதலியவைகளில் பானையும் பிரிவானது (வேறானது) என்று உண்டாகும் அறிவும் மித்யையாக போகும். பானையிலும் பானையின் இல்லாமையின் இல்லாமை என்பதிலும் துணி முதலியவைகளே ஆகும் நிலை உண்டாவதால் வியவகாரமே நடக்கமுடியாது போகும்.

இதனால் தர்மி மற்றும் பிரதியோகியுடன் மூன்றாவது பிரிவினை வேறானதாக ஏற்றால் அவைகளிலும் தர்மி மற்றும் பிரதியோகியால் பிரிவானது

இருத்தல் அவசியம் என்பதால் ஆத்மாஸ்ரய தோஷம் உண்டாகும். அதிகரணமாக ஏற்க்காமல் வேறாக ஏற்றால் அந்நியோன்யாஸ்ரய தோஷம். இதனை அறிய தர்மி அல்லது பிரதியோகியை அறிவது அவசியம். மற்ற முறையிலும் இப்படி வேறுவேறாக இதனை நிரூபித்தல் என்று ஏற்றால் அநவஸ்தா தோஷம் உண்டாகும்.

பானை முதலிய விஷயங்களின் பிரகாசமே (அறியப்படுவதே) பிரிவு உள்ளது என்பதற்கு பிரமாணம் என்றால். பானை பானைத்தன்மை உடையது. பானையல்லாத வேறொரு பொருளிலும் அதன் இல்லாமை இருப்பது அறியப்படுவதால் அதனில் அறியப்படும் பானையும் பிரமாணமாக கூடும். ஆனால் அந்த பானையானது பானைத்தன்மை இல்லாததானதால் அது பிரமாணமாக ஏற்க்க முடியாது என்றால். பிரிவானது தெரியும் மேலும் அதனை ஏற்காதபோது. இங்கும் பானையை அறியும் போது அதுபோலவே ஆகும் என்பதால் பிரிவு என்பது மித்யையே என்று நிரூபணமாகின்றது. இதனால் இதில் தோஷங்களும் தோஷங்கள் ஆகாமல் அணிகலனே ஆகின்றது. -6-

**द्रव्ये भेदस्य योगो न भवति निरूपाख्यस्य भावस्वरूपो**
**नाऽभावोऽन्यः समत्वादनुभयमिलनान्नापि तत्तत्स्वरूपम् ।**
**भावाऽभावाऽतिरिक्तं न च किमपि तयोरस्ति सम्बन्धरूपं**
**निस्सम्बन्धेऽपि शुक्तौ रजतमिव मृषा तेन भेदः प्रतीतः ॥ ७ ॥**

பேதம் (பிரிவு) இருக்கும் இடமாக ஏற்க்கப்படும் பூமி முதலியவைகளில் திரவியம் என்று ஏற்று. அதன் குணங்கள் என்று கூறப்பட்டவை விசாரித்தால் திரவியத்தினை தவிர வேறல்ல என்று நிரூபணமாவதால் வஸ்துவினை குறிக்க மட்டுமே திரவியம் என்று கூறப்பட்டது என்று அறியலாம். அப்படி இந்த பொருட்களுடனான சம்பந்தமானது இந்த பிரிவுடன் இருத்தலாகவா அல்லது இல்லாமையாகவா இருத்தலாக இருக்கமுடியாது. இந்த சம்பந்தம். காரண சம்பந்தம் என்பது சம்பந்திக்கும் இரு பொருட்களையும் சார்ந்திருக்கும் வேறு ஒன்றானதாக ஏற்கபடுகின்றதால். அது அதிகரணத்தினை போன்று இல்லாமையாக இருப்பதால் அதனுடன் வேறொரு சம்பந்தத்தினை கற்பனை செய்தினால் அநவஸ்தா

தோஷமே உண்டாகும். அப்படி இல்லாமையாக உள்ளதினை பாவரூபமாக ஏற்பது சரியானதில்லை. அது அத்யாசத்தினால் கற்பனை செய்யப்பட்டதானதால். பிரிவுடன் இல்லாத வேறொன்றாக ஏற்பதும் சரியல்ல. அது நிரூபிக்கப்பட்டதாக இல்லாததாலும் முன்பு கூறியதுபோல அதற்கும் அதன் அதிகரணத்திற்கும் உள்ள சம்பந்தமும் இருத்தல் முடியாது என்பதாலும்.

இதனால் அது சுவரூப சம்பந்தத்தினால் இருக்கின்றது என்று கூறினால் அதுவும் முடியாது காரணம். சுவரூப சம்பந்தம் என்றால் சுவரூபமே சம்பந்தம் என்றா இரண்டு சுவரூபங்களில் சம்பந்தம் என்றா எப்படி பொருள் எடுக்கப்படும். சுவரூபமே சம்பந்தம் என்றால் அந்தந்த அதிகரணத்தோடா. வேறாகவா இருவகையாகவுமா என்ற பக்ஷங்கள் தோன்றும். இவை மூன்றும் சரியல்ல. காரணம் இரண்டு சம்பந்திகளின் சம்பந்தமானது ஏற்படமுடியாது என்பதால் இரண்டாவது வகையும் முடியாது காரணம் பிரிவும் அதன் அதிகரணமும் இருத்தல் மற்றும் இல்லாமை இவைகளை தவிர வேறு சம்பந்தம் இருத்தல் முடியாததால்.

இப்படி கூறப்பட்ட காரணங்களால் சம்பந்தமற்ற நிலையில் தோன்றும் பிரிவானது மித்யையே. இது எப்படியென்றால். கயிறில் எப்படி எந்த சம்பந்தமுமில்லாத பாம்பு தோன்றுகின்றதோ அதனால் அந்த பாம்பு மித்யையாகுமோ அதுபோல பிரிவும் மித்யை என்றாகின்றது. இதனால் பிரிவுடையதாக தோன்றும் இந்த ஜகத் மித்யை என்பது நிரூபணமாகின்றது. -7-

ஆனால் பிரமாணத்தினால் உண்டாகும் ஞானமே சரியானது என்பதால். எத்தனை கோடி யுக்திகளாலும் அதனை நிராகரிக்க முடியாது. பலவகையான ஜீவன்களின் தோற்றம் பிரத்யக்ஷமாகவே அறியப்படுவதால் அதனை நிராகரித்தல் முடியாது என்றால் அதனை அந்த பிரமாணங்களை நிராகரிக்க-

संयोगादेरयोगान्न हि भवति भिदा गोचरश्चेन्द्रियाणां
व्याप्तिर्नासङ्गताया न भवति सदृशी वक्यतात्पर्यदूरा ।
मानाभावो न मानं न च पुनरपरं मानमस्यां तथापि
प्रत्यक्षा स्वाप्नमाया नगरमिव भवेत्साधु सैषा मृषैव ॥ ८ ॥

சம்யோகம் முதலியவகைளில், முதலியவை என்பதால் இங்கு நியாய வாதிகள் ஏற்கும் சம்யுக்தம் , சமவாயம் முதலியவைகள், கண்கள் முதலிய பிரமாணங்களால் காணமுடியாது என்று ஏற்க்கப்படுவதினால் பிரிவு **பிரத்யக்ஷத்தினால்** அறியப்படமுடியாததாகின்றது.

சரி, பிரத்யக்ஷம் முடியாததானால், அனுமானத்தினாலேயே இதனை நிரூபிப்போம் என்றால் அதுவும் இயலாது. அதிகரணத்துடனும், விசேஷணத்துடனும் சம்பந்தமற்றதாக இருப்பதினால் பிரிவினில் வியாப்தியானது எந்தவித பொருளுடனும் உண்டாகாததினால், அது மட்டுமல்லாது, **வியாப்தியும்** எங்கு புகையோ அங்கு நெருப்பு இருக்கின்றது என்பது போன்று **பிரதியோகி** மற்றும் **அனுயோகிகளின்** சம்பந்தமும் நிரூபிக்கப்பட முடியாததாகின்றதால் நிரூபிக்க முடியாது போகின்றது. இதனால் **அனுமானத்தினாலும்** நிரூபிக்கமுடியாது.

**உபமானத்தினாலும்** நிரூபிக்கமுடியாது. இதுபோன்று அது, என்று கூற பிரத்யக்ஷமாக ஒரு விஷயத்தினை அறிந்திருத்தல் அவசியம். பிரத்யக்ஷம் நிராகரிக்கப்பட்டதால் பிரிவானது நிரூபிக்கப்பட்டாததால் எதனுடன் எது வேறானதாக இருக்கும், இருக்கமுடியாது என்று பொருள்.

**சப்தத்தினாலும்** முடியாது. லௌகிக வாக்கியத்தினால் முடியாது காரணம் அதற்கு மூலமான பிரத்யக்ஷம் நிராகரிக்கப்படடதால், வைதிக வாக்கியத்தினால் என்றால் அதுவும் முடியாது. அதன் தாத்பர்யம் இரண்டற்றதை குறிப்பதிலேயே உள்ளதினால்.

ஆனால் பிரிவு என்பது ஏற்கபடாததினால் எல்லா பிரமாண மற்றும் பிரமேய வியவகாரமானது அழியும் நிலை உண்டாகும். இதனால் சாஸ்திர சிரவணத்தினை சிஷ்யரானவர் குருவிடத்தில் செய்யமுடியாது போகும் என்றால் அது சரியல்ல, காரணம் இந்த வியவகாரங்கள் எல்லாம் லௌகிகமான பிரிவினை வியவகாரமாக ஏற்பதினாலேயே செய்யமுடியும் என்பதால் இருத்தலே பொருளினை குறித்த அறிவை கொடுக்க பிரமாணமாக ஏற்கப்படுகின்றது. **இல்லாமையால்** அது நிரூபிக்கமுடியாததால். இல்லாமையால் முடியும் என்று

ஏற்கதுணிந்தால் இல்லாமையும் இல்லாததாகவே இருப்பதால் அதனையும் காணுதல் முடியும் அதே இல்லாமையால் அதனின் இல்லாமையும் வேறொன்றால் என்று அநவஸ்தா தோஷமே உண்டாகும். இதனால் இல்லாமையே நிரூபிக்கபட முடியாது போகும் போது அது வேறொன்றை நிரூபிக்கும் என்பது எப்பொழுதும் முடியாது. இந்த தோஷத்திற்கு பயந்து இல்லாமை பிரமாணமானது தன்னைத் தானே அல்லது வேறொன்றின் மூலமாகவோ நிரூபிக்கும் என்று ஏற்றால் அதனால் நிரூபிக்கப்படும் இல்லாமையும் அவ்வாறே ஏன் இருக்கக்கூடாது என்றாகும். சாக்ஷியால் அறியப்படும் என்றாலோ, பின்னர் அதனால் அறியப்படுவது மித்யையே என்றாகும்.

**அர்த்தாபத்தி** பிரமாணத்தினாலும் முடியாது. அதற்கு எதிர்மடையாக ஒரு வியாப்தி அவசியமாவதால் நிரூபிக்கப்படவேண்டிய ஒன்றே வேறானதாக நிச்சயிக்க முடியாதபொழுது அதன் எதிர்மடையானது நிரூபிக்கமுடியாததாகின்றதால் **சம்பவம், ஐதிஹ்யம்** முதலிய பிரமாணத்தினாலும் முடியாது. எல்லோரும் அதனை தனியாக ஏற்பதில்லை என்பதால்.

இதனால் பிரிவானது நிரூபிக்கப்படாது போவதினால், அது சாக்ஷியினால் அறியப்படுவது என்று ஏற்க்கப்படுவதால் எல்லோராலும் நேரிடையாக அனுபவிப்பது என்பதால். நாம் காணும் பிரிவானது மித்யையே என்றாகின்றது. எப்படி கனவில் காணப்படுவதும், மாயா ஜாலத்தினால் தோற்றுவிக்கப்பட்டவை முதலியவைகள் சாக்ஷியாலேயே மட்டும் அறியப்படுவதால் மித்யை என்றாகின்றதோ. இதனால் இந்த ஜகத்தானது மித்யை என்று நிரூபிக்கப்பட்டதாகின்றது. -8-

அன்யோன்யாபாவம் என்கிற ஒன்றும் மற்றொன்றிக்கும் உள்ள பிரிவானது நிராகரித்து வைசேஷிகர்கள் முதலியவர்கள் ஏற்க்கும் **த்வித்வம்** (இருமைதன்மை) **பிருதக்த்வம்** (வேறானதன்மை) முதலியவைகளை நிராகரிக்க -

**बाह्योऽर्थो बुद्धिमत्रान्न भवति स भवन्गोचरः स्यात्परेषा**
**मेकैकं न द्वयंचेदुभयमिति मृषा तद्विशिष्टप्रथा च।**

**द्वित्वादेस्सङ्करः स्यान्न खलु भवति ते प्रागभावाद्यवस्था**
**नापेक्षाबुद्धिक्लृप्तिः सकलमपि शनैर्योज्यमेतत्पृथक्त्वे ॥ ९॥**

வெளிவிஷயங்களானது அதனதன் இந்திரியங்களால் கிரகிக்கப்பட்டு அதனால் அடையப்படுவதாக இருப்பதால் அந்த ஞானமும் உண்மையாகாது. உண்டாகும் எல்லாம் மித்யா என்று கூறியதால். கனவில் பார்க்கப்படும் விஷயங்களை போன்று அதுமட்டுமல்ல இந்த த்வித்வம் முதலியவைகள் உங்களால் அறியப்படுவது போல மற்றவராலும் அறியப்படுவதாக இருப்பதில்லை. உண்மையானது எல்லோரும் அறியப்படுவதாக இருக்கும் காரணத்தினால் இது (த்வித்தவம் முதலியவை) மித்யை என்று நிரூபணமாகின்றது.

த்வித்வம் என்ற ஞானம், இரண்டு பானைகள் உள்ள இடத்தில் இது ஒன்று இது ஒன்று என்று ஏற்கப்படுவதாக கூறுவதாலும். அது மித்யை என்று நிச்சயமாகின்றது. இது ஒன்று, இது ஒன்று என்ற ஞானம் எப்பொழுதும் இரண்டு என்று ஞானத்தை கொடுக்க முடியாது. எப்படி இது நீல நிறமில்லை, இது நீல நிறமில்லை என்கிற ஞானமானது இது நீலநிறம் என்கிற ஞானத்தை கொடுக்காதோ அது போலவே. இதனாலும் ஒவ்வொன்றும் இரண்டாவது என்பது இல்லாததாலும், அப்படி உண்டாகும் அறிவு மித்யையே ஆகும். இரண்டில் உள்ளது இருமை என்றாலும். அது ஒவ்வொன்றிலும் இருப்பதாக ஏற்றால் ஆத்மாஸ்ரயதோஷமும் தனியாக வேறொன்றாக என்று ஏற்றால் அநவஸ்தா தோஷமும் உண்டாகும். இதனால் அந்த இருமை என்பதுடன் கூடியதாக ஒரு பொருள் பிரத்யக்ஷமாகாததினால் அது பிரமாணமற்றதாக ஆகின்றது. இரண்டில் இருமை, மூன்றில் மூன்மை என்பதும் எப்படி ஏற்க்கபடும். எனவே ஒவ்வொன்றிலும் ஒருமை என்பது இருக்கின்றது என்பது **லாகவம்**(சுலபம்). ஒவ்வொன்றிலும், இருமை, மூன்மையை ஏற்பது **கௌரவ** தோஷத்தினை உண்டாக்கும். பிராகபாவத்திற்கு பிரதியோகி இல்லை என்பதால் அதனை ஏற்க்காததால் உண்டாகும் பொருட்களில் அவைகள் (இருமை, மூன்மை) இருத்தல் இயலாது என்பது எல்லோரும் அறிந்த விஷயமாகின்றது.

இது ஒன்று, இது ஒன்று என்ற **அபேக்ஷாபுத்தியால்** இருமையையும் இதனை தவிர வேறொன்று என்பதால் மூன்மை முதலியவைகள் ஏற்பதும்

முடியாது. அபேக்ஷாபுத்தியானது இப்படித்தான் உண்டாகும் என்பது நியமம் இல்லாததால். அதாவது இது இருமை, இது ஒன்று, இது ஒன்று என்றோ, இது ஒன்று, இது ஒன்று . இது ஒன்று என்றோ மூன்மை முதலியவை உண்டாக முடியும் என்பதால் இருமை முதலியவற்றினை ஏற்பதற்கு பிரமாணமோ பிரயோஜமோ இல்லாத காரணத்தினால் எண்ணிக்கைக்கு கொடுக்கப்பட்ட இதே காரணத்தினால் **பிருகக்த்வம்** (வேறான தன்மை) முதலியவையும் நிராகரிக்கப்பட்டது. -9-

அன்யோன்யாபாவமும், இருமை, வேற்றுமை பிரிவுகளை நிராகரித்தபின் பிராபாகரர்கள் ஏற்கும் அதிகரண சுவரூபமான பேதத்தினையும் நிராகரிக்க -

**कार्यं नाऽन्यन्निदानात्पृथगनधिगमान्न ह्युपादानहेत्वो**
**र्वैलक्षण्यं तथात्वे न भवति समवायाद्यवस्थाऽनुपेतात् ।**
**नोचेत्स्वर्णादिकार्ये द्विगुणगुरुतया मूल्यवृद्धिप्रसङ्गो**
**ऽवस्थाभेदाद्विभेदे स्थितिगतिभिदया भेदिनः स्युर्नराश्च ॥ १० ॥**

காரணத்தினை காரியத்திலிருந்து பிரித்தறிய இயலாத காரணத்தினாலும் இது பானை இது மண் என்று வேறுவேறாக காண்பிக்க இயலாததினாலும் பிரிவு என்பது நிரூபிக்கமுடியாததாகின்றது. ஆனால் நீர் மற்றும் பாலானது பிரித்தறிய முடிந்த போதிலும் அதனதன் தன்மை கொண்டு அறியப்படுவது போல வேறுவேறாக அறியலாம் என்றால், அது சரியல்ல. காரியமானது உபாதான காரணத்திற்கு வேறானதாக இருந்தால் **உபாதானம்** மற்றும் **நிமித்த** காரணம் என்பது இரண்டு வகை இருத்தல் முடியாது போகும். உபாதான காரணம் என்பது தன்னிலேயே (தாதாத்மியம்) உள்ளதாக காரியத்தினை உண்டாக்குவது. நிமித்தம் என்றால் தன்னை விடவும் வேறானதாக காரியத்தினை உண்டாக்குவது. பிரம்ம சூத்திரத்திலும் பாதராயனர் கூறியது போல **<u>சமவாய அப்யுபகமாத்ச சாம்யாதனவஸ்திதே</u>** என்று சமவாயம் நிராகரிக்கப்பட்டதால் அயுத சித்தியை நியமிக்க சமவாயம் ஏற்படுகின்றது என்று கூறுதல் முடியாது அயுதசித்தி என்பது ஏற்புடையதல்லா சேர்க்கை மாடு மற்றும் ஆடு போன்ற வெவ்வேறானது சேருதல் போன்றது (ஒன்றாக குறிப்பிடுதல் போன்றது). அதுமட்டுமல்லாமல் இப்படியொரு சமவாயத்தினை ஏற்றால் நூலிலிருந்து பானை, மண்ணிலிருந்து துணி

முதலியவைகளாக முறையற்று ஏற்படும். காரணம் எல்லா திரவிய , குண , கர்ம மற்றும் ஜாதியிலும் மற்றவை சமவேதமாக இருப்பதனால். இதனால், காரியத்திற்கு வேறு உபாதான காரணத்தினை ஏற்றாலோ, தங்கத்தினால் வளையல், மோதிரம் முதலியவை வேறு திரவியமானதினால் காரணத்தின் எடையுடன் வேறு எடை கூடுவதால். நாம் இட்ட தங்கத்திற்கு இரட்டிப்பான எடையுள்ளதாக பொருள் உண்டாகும் நிலை ஏற்படும். காரணத்தின் எடையுடன் காரியத்தின் எடையும் சேர்த்து இரட்டிப்பு எடை உண்டாவதில்லை என்றால். காரியமானது இந்திரியத்தினால் அறியப்படமுடியாத நிலையில் உண்டாகும் கலப்பினை நிரூபித்தல் இயலாது என்பதால் அது இயலாது. காரியத்தின் பிரிவற்ற தன்மை நிரூபணமாகின்றது.

வளையல் மோதிரமான காரியமானது வேறல்லாததாக இருந்தாலும், அவைகளின் வளையல் முதலிய மாற்றத்தினால் அவைகளும் வேறுவேறானது என்று ஏற்க்கப்படவேண்டும். இப்படி அதனதன் அவஸ்த்தையில் உள்ள பிரிவினால் வேறுபடுவதுபோல நிற்றல், கிடத்தல் முதலிய அவஸ்தைகளால் தேவதத்தன் முதலிய மனிதர்களும் வேறுவேறானவர்கள் என்று நிரூபணமாகும் என்றால் அது சரியல்ல. அப்படி ஏற்றால் படுத்தால் அந்த அவஸ்தையில் எந்த செயலும் உண்டாவதில்லை என்பதால் மரணம் அடைந்த நிலை ஏற்படுவதால், மீண்டும எழும் அவனுக்கு ஜாதகர்ம முதலிய சுத்தம் செய்யும் கர்மங்கள் செய்யப்படுதல் என்ற அவசியமான நிலையுண்டாகும். ஆனால் படுத்த நிலையில் அவர்கள் மரணத்தை அடைந்தவர்களாகமாட்டார்கள். விழித்ததும் தன்னை இன்னார் என்று அறிந்து கொள்ளும் அறிவானது உள்ளதால் என்றால் அது சரியே. **பிரகிருதத்திலும்**(இங்கும்) அதேபோல இருப்பதால் அவஸ்தை மாற்றத்தினை கொண்டு பிரிவானது நிரூபித்தல் முடியாது என்றாகின்றது. அந்த காணப்படும் பிரிவும் மித்யை என்றும் நிரூபணமாகின்றது. இதனால் எல்லாவற்றிக்கும் உபாதானமாக இருக்கும் சத் மட்டுமே உள்ளது என்பதும் நிரூபணமாகின்றது. -10-

இரண்டற்ற நிலை நிரூபிக்கப்பட்டதால் காரிய-காரணமான பாவங்கள் எப்படி நிர்வகிகப்படுகின்றன என்றால் அது மாயையால் உண்டாகும் அவஸ்தையினால் நிர்வகிக்கப்படுகின்றது. அதற்கு எந்த உண்மையான காரணமும் இல்லை என்பதினை-

**पिण्डाऽवस्थाघटत्वे मनसि विमृशतो हेतुकार्यत्वधीः स्या**

**न्मृन्मात्रं यद्वदेकं स्फुटमभिमृशतो नैव हेतुर्नकार्यम् ।**

**तद्वन्मायिप्रपञ्चौ मनसि कलयतो ब्रह्म विश्वस्य हेतुः**

**सन्मात्रन्त्वेकरूपं पटुपरिमृशतो नैव मायी न विश्वम् ॥ ११ ॥**

களிமண் பிண்டமாக இருக்கும் நிலையும் அது பானையாக மாறும் நிலையும் கொண்டு , முன்பு உள்ள களிமண் நிலை காரணம் என்றும் பின்பு உள்ள பானை நிலை காரியம் என்றும் இந்த மாற்றங்கள் இல்லாத போதிலும் மாற்றமற்ற புருஷனுக்கு இந்த மாற்றம் புத்தியில் தோன்றுகின்றது. இப்படி இரண்டு நிலையிலும் மண்ணே இருக்கின்றது என்று விசாரித்துக் கொண்ட, மாயையின் திரை நீக்கிய புருஷனுக்கோ பிண்டம் மற்றும் பானை நிலையகள் உண்மையில் களிமண்ணே என்று மாயாவின் காரியமானது நீங்குங்கால் காரணமோ, காரியமோ இல்லாது போகும்.

இதுபோலவே , மாயாவினால் சூழப்பட்ட இந்த பிரபஞ்சம் அதற்கு முன்னர் **சதேவ சௌம்ய இதம் அக்ர ஆசீத்** என்றும் தன்னாம ரூபாப்யைவ வியாகிரியதே என்பதால் காரணம் மற்றும் காரியம் இரண்டும் சத் என்பது ஷ்ருதியால் நிரூபிக்கப்படுகின்றது. இந்த த்வைத வாசனையை மனதிலிருந்து நீக்கவே ஷ்ருதியானது **ததேதத் பிரம்ம அபூர்வம் அனபரம்** என்று புருஷனுக்கு இந்த பிரம்மமே பிரபஞ்சத்தின் உபாதான காரணம் என்று நிரூபிக்கின்றது.

உண்மையில் புருஷனாவர் எப்பொழுதும் சத்தே இரண்டற்றதாக இருப்பது என்று விசாரித்தறிந்து இந்த மாயாவினை நீக்கியவராகின்றாரோ அப்பொழுது மாயாவானதும் காரணமாக இல்லை, அதன் காரியமான இந்த ஜகத்தும் ஒருபோதும் இல்லை என்று உணர்ந்தறிகின்றார். -11-

இப்படி பிரம்மமே, சத்தே உண்மையாக இருந்தால், இரண்டற்றதாக இருந்தால், இந்த ஜகத்தானது உண்மையாக எப்படி பிரகாசிக்கின்றது, என்றால், உடல் முதலியவற்றில் எப்படி ஏற்றிப்பார்பதினால் ஆத்மா என்று அறிவு உண்டாகின்றதோ, அப்படி சத்தில் ஏற்றிப்பார்க்கப்படுவதால் ஜகத்தும் சத்தாக

பிரகாசிக்கின்றது என்பது.

सन्कुम्भः सत्कुसूलं सदखिलमिति यद्भवति यच्च श्रुतं प्राक्
तत्सत्यं व्याप्य विश्वं घतपिठरमुखं मृत्तिकेवाऽवभाति ।
तस्मिन्रज्जाविवऽहिर्निखिलमपि जगत्कल्पितं तत्स्वभावा
त्तन्मात्रं तत्पृथक्त्वे ह्यसदिदमखिलं स्यात्तदेव ह्यभेदे ॥ १२ ॥

பானை இருக்கின்றது நெற்கதிர் இருக்கின்றது . ஜகத் இருக்கின்றது என்று எதுவெல்லாம் இருக்கின்றது என்று பிரகாசிக்கின்றதா. எது அந்த வகை பொருட்களாக உண்டாவதற்கு முன்பு **ஆத்மா வா இதமேக ஏவாக்ர ஆசீத்** என்று ஷ்ருதிகளாலும் எந்த இருத்தல் குறிப்பிடப்பட்டதோ அதுவே மண் அதன் காரியம் பானை முதலிய இந்த ஜகத்தினை வியாபித்து எல்லாவற்றினையும் பிரகாசிக்கின்றது.

அப்படியென்றால் மண் போன்றே விகாரம் உடையதாக எப்படி ஆகாது போகும் என்றால். அந்த சத்ரூபமான பிரம்மத்தில் இந்த ஜகத் முழுவதும் அத்யாசிக்கப்பட்டதால். கயிரில் தோன்றும் பாம்பு போல அதன் வளைவுகள் கயிரில் உள்ளதாக இருந்தாலும் பாம்பிலும் காணப்படுவதுபோல பிரம்மத்தின் காரியமான (**விவர்த்தமான**) ஜகத்திலும் அனுவிருத்தியாகின்றது.

இதன் பிரம்மத்திலிருந்து வேறானதாக இருந்தால் ஜகத் அசத்தாகும். அதோடு ஒன்றானாலோ அதுவும் சத்தானதால் ஜகத்தும் பிரம்மமே என்பது நிரூபணமாகும் என்பதால் இரு நிலையிலும் பிரம்மமே இரண்டற்ற சத்வஸ்து என்பது நிரூபணமாகின்றது .-12-

ஆனால். பிரம்மத்தின் இருத்தலே ஜகத்தின் இருத்தல். தானாகவே அதன் இருப்பு இல்லை என்பதால் கடையில் இருக்கும் வெள்ளி மற்றும் சிப்பியில் தோன்றும் வெள்ளி இவற்றில் இரண்டும் மித்யாவானதால் எதனால் ஒன்றில் வியவகாரமும் மறறொன்றில் அதன் இல்லாமையும் என்றால் அதனை நிரூபிக்க-

**एकैव ब्रह्मसत्ता व्यवहृतिविषये शुक्तिरूप्यादिके च**
**ख्यात्याऽद्ये सत्यमेतज्जगदिति धियमाभ्रमबोधाद्विधत्ते ।**
**यावत्स्फूर्ति द्वितीये प्रथितमिव पटस्फाटिके रक्तरूपं**
**माञ्जिष्ठं साधु रक्तः पट इति न मृषा स्फाटिके तन्मृषेति ॥ १३ ॥**

பிரம்மத்தினை தவிர வியவகார யோக்கியமான கடையில் உள்ள வெள்ளி மற்றும் அதுபோன்ற யோக்கியமற்ற சிப்பியில் தோன்றும் வெள்ளி ஆகிய இரண்டிலும் அதனதன் நிலையில் அறியப்படும் சமயத்தில் உண்டாகும் அறிவு ஒன்றாகவே வெள்ளி என்றாகின்றது. இருந்தாலும் வியவகார யோக்கியமான இந்த ஜகத்தில் பிரம்ம சாக்ஷாத்காரம் வரையில் உண்டாகும் தோற்றமானது உண்மை என்றே தோன்றுகின்றது. அது பிரம்ம சாக்ஷாத்காரம் ஒன்றினாலேயே நீக்கப்படும் யோக்கியம் உள்ளதாக இருப்பதால் சிப்பியில் தோன்றும் வெள்ளியே சிப்பியின் உண்மை சுவரூபத்தினை அறியும் வரை உண்மையாகவே தோன்றுகின்றது.

சாயம் கொண்டு சிகப்பாக்கப்பட்ட துணியும் அந்த துணியின் அடுத்து வைக்கப்பட்ட ஸ்படிகத்தில் உள்ள சிகப்பிலும் எப்படியோ அப்படி. அதாவது துணியானது சாயத்தினால் நிறம் மாற்றப்பட்டபின் சிகப்பு துணி என்ற வியவகாரம் உண்டாகின்றது. அதுபோல ஸ்படிகத்தில் தோன்றும் சிகப்போ (பொய்தோற்றமோ) சிகப்பு நிறத்தை அதன் அருகிலிருந்து நீக்கினால் மீண்டும் நிறமற்றதான ஸ்படிகமாக மாறுவதால்.

அதாவது . **மூல அஞ்ஞான** காரியமான. சுத்த சைதன்யத்தில் அத்யாசம் செய்யப்பட்ட வியவகாரிக ஜகத்தானது அந்த சுத்த சைதன்யத்தை (பிரம்மத்தை) அறிவதாலேயே (சாக்ஷாத்காரத்தினாலேயே) நீங்கும். ஆனால் சிப்பியில் தோன்றும் வெள்ளியோ. அந்த சிப்பியுடன் கூடிய சைதன்யத்தில் அத்யாசிக்கப்பட்டதால் அதன் மூடலினை நீக்குவதாலேயே நீங்குகின்றது அதாவது சிப்பி முதலிய பொருட்களின் சாக்ஷாத்காரத்தினாலேயே நீங்கும் -13-

ஆனால் சிப்பியில் இது என்கிற சாமான்ய அம்சமும் சிப்பி என்கிற விசேஷ அம்சமும் உள்ளது. அதன் விசேஷ அம்சத்தினையே வெள்ளியினால்

ஆரோபிக்கப்பட்டது என்று உள்ளதால். பிரம்மத்திலும் ஜகத் அத்யாசிக்கப்பட்டது என்று ஏற்பதனால் அங்கும் சாமான்ய மற்றும் விசேஷ அம்சங்கள் ஏற்க்கப்படவேண்டியிருக்கும். இதனால் அம்சமுள்ளதாக பிரம்மம் ஆவதால் அவயவமற்றது என்று கூறும் ஷ்ருதியுடன் விரோதமாகின்றது அதுமட்டுமல்லாமல் அநித்தியமாகும் நிலையும் உண்டு. இதற்கு பயந்து அம்சம் இல்லாததது என்று கூறமுடியாது காரணம் ஜகத் அத்யாசமானது உண்டாக முடியாது. அதுமட்டுமில்லாமல் சத் மட்டுமே (இருத்தல்) சுவபாவமுடையதாக என்று ஏற்றால் ஆனந்தமற்றதால் அதனை ஒருவரும் அடைய விருப்பம் கொள்ளமாட்டார்கள். இதனால் ஆனந்தமும் உள்ளது என்று ஏற்றால் ஒரு ரஸமுடையதாக பிரம்மம் இருத்தல் முடியாது. அவை சத் , ஆனந்தம் வேறுவேறல்லாதது என்றும் கூறுதல் முடியாது. இதனால் , சத்யம், ஞானம் , அனந்தம் முதலியவை ஒரு பொருளை கூறும் பல சொற்களாக ஆகிவிடும் அது மட்டுமல்லாமல் சத்தே , சித்தும் , அனந்தமாக இருப்பதால் துக்கமானது தீண்டுதல் முறையல்ல. பானை இருக்கின்றது என்கிற ஞானமுண்டாவதாலேயே அதிலுள்ள இருத்தல் சாக்ஷாத்கரிக்கப்பட்டதால் தத்துவ சாக்ஷாத்காரமாகின்றதால் ஜகத்தும் நீங்கும் என்கிற நிலையும் உண்டாகும் என்றால், அதனை நிராகரிக்க-

**सच्चित्सौख्यैकरस्येऽप्यनृतजडमहादुःखमोहाऽन्यभावा**
**त्सत्यज्ञानादिवाक्यव्यवहृतिविषये कल्पिते रूपभेदे ।**
**शुक्तीदंतेव सत्ता स्फुरति समरसा कल्पितेनाऽनुविद्धा**
**शुक्तित्वादीवमायाऽऽवरणपरिभवाच्चित्सुखत्वेनभातः ॥ १४ ॥**

சத்யம், ஞானம்(சித்) மற்றும் ஆனந்தம் அம்சங்கங்கள் இல்லாத இரண்டற்ற ஆத்மாவில் . இவைகள் பொய், அறியாமை, மற்றும் துன்பத்திலிருந்து நீக்கி காட்ட சிஷ்யனுக்கு புரியும் பொருட்டு கற்பனை செய்யப்பட்டு கற்பிக்கப்படுகின்றது. இதனால் இரண்டற்ற பிரிவற்ற ஆத்மாவில் பொய்யானதிலிருந்து நீக்கிககாட்ட சத்தியம் என்றும் தன்னை ஒளிர்விக்க வேறொன்று அவசியமற்றது என்பதை சித் என்பதினாலும், எப்பொழுதும் தானே ஒளிர்வதாக இருப்பதால் துன்பத்திலிருந்து வேறாக்கிகாட்ட ஆனந்தம் என்றும் கூறப்பட்டது.

சத்தானது கற்பனை செய்யப்பட்ட ஜகத்ரூபதத்தினால் தர்மம் கூடிய அத்யாசத்தினால் கூடியதாக, தர்மியுடன் தாதாத்மியம் அத்யாசம் கொண்டதாக பானை, துணி மற்றும் ஜகத் என்று ஒரேவகையாக பானை இருக்கின்றது, துணி இருக்கின்றது ஜகத் இருக்கின்றது என்று இருத்தல் சுபாவமாக தோன்றுகின்றது. எப்படி இது என்கிற சிப்பியில் தோன்றிய வெள்ளியும் இது என்றே தோன்கின்றதோ அதுபோல.

சிப்பியானது அதில் வெள்ளியானது பொய்யாக தோன்றும் நிலையில் அஞ்ஞானத்தினால் மூடப்பட்டதாக இருக்கும் நிலையில் எப்படி அறியப்படுவது இல்லையோ அப்படியே மாயையின் ஆவரண சக்தியினால் மூடப்பட்டதாக இருப்பதால் சைதன்யத்தின் ஆனந்த அம்சமானது அனுபவபடுவதில்லை, பிரம்ம சாக்ஷாத்காரம் அடையும் வரையில். -14-

ஷ்ருதி சம்மதமான தர்க்கத்தினால் இரண்டற்ற பிரம்மம் நிரூபிக்கப்பட்டாலும் நேரடியாக ஷ்ருதி வாக்கியத்தாத்பர்யத்தில் அதனை விளக்க விருப்பம் கொண்டு கூடஸ்த லக்ஷணத்தினால் சிருஷ்டியை விளக்கும் வாக்கியம். உதாரணத்துடன் விளக்க -

**पृष्टे कोऽस्मिन्समाजे नरपतिरिति यो मत्तमातङ्गपृष्ठे**
**मुक्ताजालान्तराले शशिधवललसच्छत्रमूले स्फुरन्सः ।**
**इत्युक्तः पुंविशेषं सपदि परिचिनोत्येष राजेति सर्व**
**मुक्त्वैकं येन पश्यन्नमुमपरविधं शैष राजेति वेत्ति ॥ १५ ॥**

சேனைகளின் கூட்டத்தில் ராஜாவினை பிரித்தறிய இயலாத ஒருவர் மற்றவரை இந்த கூட்டத்தில் யார் ராஜா? என்று கேட்கும் போது ராஜாவினை இவர் என்று அறிந்தவர் விளக்குகின்றார். எவர் நன்றாக வளர்ந்த யானையின் மீது, அந்த யானையை மற்றவற்றிலிருந்து விளக்கிக்காட்ட அந்த யானையும் சதுரமான தொட்டி போன்ற அமைப்பு கொண்ட முத்துக்களால் அலங்கரிக்கப்பட்ட, அதில் வீற்றிருக்கின்றாரோ, அது இளவரசருக்கும் பொருந்தும் என்பதால் அதனை விலக்க பூர்ணசந்திரனை ஒத்த வெண்மையான கொடியின் கீழ் அதன் நிழலில்

பலவகை ஆயுதங்களோடு வீற்றிருக்கும் அவரே ராஜா என்று கூறியவுடன் அதனை கேட்டவர் உடனேயே அந்த லக்ஷணங்கள் கூடிய அந்த புருஷரே ராஜா என்பதினை பிரித்தறிகின்றாரோ. அது எப்படி என்றால்வேறொரு இடத்தில் வேறு நிலையில் அந்த புருஷனே இவர். அவரே இந்த ராஜா என்று அறிவு உண்டாகின்றது. -15-

திருஷ்டாந்தத்தினை தார்ஷ்டாந்தத்தில் காண்பிக்க-

**वर्णिता विविदिषदि यन्त्रणात्पुंविशेषमिव लक्षणोक्तयः ।**

**विश्वसर्गविषयाऽऽगमाः परं लक्षयन्ति निरवद्यचिद्घनम् ॥ १६ ॥**

அம்பாரி முதலியவற்றை குறிப்பிட்டு ராஜாவை குறிக்கும் வாக்கியத்தினை போல பலவகையான வாக்கியத்தால் மற்றவைகள் நீக்கி அந்த பிரம்மத்தை **யதோ வா இமானி பூதானி** முதலிய வாக்கயித்தால் சிருஷ்டியை விளக்கி **தத் யதா சைந்தவகில்ய** முதலிய வாக்கியத்தினால் மாயை முதலிய தோஷங்களற்ற பிரம்மத்தினை விளக்குகின்றதோ. அப்படி அந்த பிரம்ம ஸ்வரூபமாகவே எல்லாம் இருப்பதனால் அதனை தவிர வேறொன்றும் இல்லாததால் ஜகத் மித்யா என்று நிரூபணமடைகின்றது. இப்படி ஒரு வாக்கியத்தின் தாத்பர்யத்தினை பிரம்மத்தில் இருப்பதனை காண்பிக்க. **உபக்கிரம்**, **உபசம்ஸாரம்** முதலிய ஆறு லிங்கங்களையும் கொண்டு நிச்சயிக்கப்படுகின்றது. -16-

ஒவ்வொரு பதமும் அன்வயமாகி அதன் பொருளை குறிக்குமா அல்லது வாக்கியம் பிரம்மத்தை குறிக்குமா என்றால் பதம் என்று ஏற்பதினால் பல தோஷங்கள் உள்ளதினை ஏற்று முழு வாக்கியமே பிரம்மத்தினை லக்ஷனையாக குறிக்கின்றது என்பதினை-

**तत्त्वमर्थवदत्र यद्यपि नाऽन्वयानुपपत्तिधी**

**र्नाप्यभिन्नपदार्थकत्वमथः पदेषु न लक्षणा ।**

**भेदसङ्गतिकानि तानि समेत्य सत्यचिदद्वयं**

**तत्पराणि हि लक्षयेयुरुपक्रमाद्यनुसारतः ॥ १७ ॥**

தத் என்ற சர்வஞ்ஞதன்மையுள்ளதினை குறிக்கும் சொல்லும், த்வம் என்ற அல்பஞ்ஞத்தன்மையை குறிக்கும் சொல்லும் விரோதமான வஸ்துவை குறிக்கும், ஈஸ்வரன் மற்றும் ஜீவனை குறிப்பதாக இருந்தாலும், ஒன்றையொன்று அன்வயம் செய்ய எந்த பிரச்சனையும் இல்லை என்றோ பிரகிருஷ்டமான பிரகாசம் உடையது சந்திரம் என்ற வாக்கியத்தினை போலவோ ஒவ்வொரு சொல்லும் அதே வேற்றுமையில் இருந்தாலும் பிரிவற்றதினை குறிக்கும் சாமர்த்தியமும் இல்லை என்பதால் ஒவ்வொரு பதத்திலும் லக்ஷணையை ஏற்கவில்லை. ஒவ்வொன்றும் வேறுவேறு பொருளை குறிப்பதாக இருந்தால் பிரிவற்ற பொருளில் தாத்பர்யம் இருத்தல் முடியாது. ஒரே பொருளை என்றால் பல சொற்களின் அதனதன் வெவ்வேறு பொருளில் சக்தியை ஏற்பது சரியில்லாமல் போகும் போன்ற தோஷத்தினை ஆரோபிக்கும் நிலை இருப்பதால். பின்னர் எப்படி வாக்கியமானது அகண்டார்த்தத்தினை குறிக்கும் என்றால் சிருஷ்டி வாக்கியம் முதலியவை அதிலிருக்கும் எதிர்பார்பினை இந்த சிருஷ்டி செய்யும் அபின்னநிமித்தஉபாதான காரணமான பிரம்மத்தினை நிரூபிப்பதினால், சர்வம் கல்விதம் பிரம்ம முதலிய வாக்கியத்தினால் குறிப்பிடப்பட்டதுபோல அதே போல் சத்யம், ஞானம், ஆனந்தம் முதலியவைகளால் இரணடற்ற பிரம்மத்தினை லக்ஷணையால் குறிக்கின்றது. அதனை எப்படி செய்கின்றது என்றால் முன்பே கூறியது போல உபகிரம உபசம்ஹாரம் முதலிய ஆறு லிங்கங்கள் கூடிய வாக்கியத்தினைக்கொண்டே நிச்சயிக்கப்படுகின்றது. -17-

ஆனால், விசேஷங்களற்ற பிரம்மத்தினையே ஷ்ருதியானது போதிக்கின்றது என்றால் ஆங்காங்கே சிருஷ்டியை விளக்கும் வாக்கியத்திற்கு என்ன அவசியம், என்றால் அதனை விளக்க-

**अक्षजादिबहिःप्रमाणा समेधितद्वयविभ्रमे**

**जाग्रति श्रुतिरद्वयप्रतिबोधने सहसाऽक्षमा ।**

**व्यावहारिकवस्तुजातमिदं मृषेति विवक्षया**

प्रक्रियां रचयांबभूव विसृष्टिसंहृतिलक्षणाम् ॥ १८ ॥

இந்திரியத்தினால் உண்டாகும் பிரத்யக்ஷம் முதலிய பிரமாணங்கள் வெளி விஷயத்தினை பிரகாசிக்கும் தன்மையுள்ளவற்றால் அனாதிகாலமாக திருடமாகியிருக்கும் இந்த த்வைத விஷயங்கள் உள்ள ஜீவனுக்கு பரமார்த்த சத்தியமான இரண்டற்ற பிரம்மத்தினை போதிக்க விருப்பம் கொண்டு ஷ்ருதியானது நேரடியாக உபதேசித்தால் அதனை கிரகிக்கும் சாமர்த்தியம் அற்றவனாக ஜீவன் இருப்பதால். ஜகத்தானது வெளி விஷய பிரமாணத்தினால் மிகவும் வலுவாக பதிந்திருப்பதால் அதனை மித்யை என்றும் பிரமத்தினை தவிர வேறொன்றும் இல்லை என்றும் போதிக்க சிருஷ்டி முதலிய கற்பனைகளை செய்து விவரிக்கின்றது. அதனை பற்றி போதிக்கும் தாத்பர்யத்தினால் இல்லை. ஆனால் அதனை மித்யை என்று காட்டவே. காரணமானது காரியத்திலிருந்து வேறானது இல்லை என்கிற நியாயத்தினால் பிரம்மத்தை அபின்ன நிமித்த உபாதான காரணமாக காட்டுவதின் மூலம் இந்த ஜகத்தானது மித்யை என்று காட்டுகின்றது. சிருஷ்டியை நிரூபிக்கும் முறையாகயில்லை . -18-

**அதாதே பிரம்ம ஜிஞ்ஞாசா** என்று கூறிய பின் அந்த பிரம்மத்தினை குறித்த சந்தேகத்தினை. என்ன சுவரூபம் என்ற சந்தேகத்தினை நீக்க **ஜன்மாத்யஸ்ய யத** என்று கூறியுள்ளதால் அந்த பிரம்மத்தினை ஜகத் உண்டாக்கும் காரணமுள்ள ஸ்வரூபம் என்று ஏன் ஏற்ககூடாது என்று மந்த புத்தியுள்ளவர்கள் சந்தேதிக்கக்கூடும் அதனை நிராகரிக்க-

ब्रह्म सच्चिदानन्दमेमशेषवाङ्मनसाऽतिगं
पञ्चकोशगुहान्तरं च निगद्य शश्वदलौकिकम् ।
तद्विसृज्य विवेश सत्यमसत्यमित्युभयं स्वतः
सत्यमित्यभिधायिनी श्रुतिरद्वयं स्फुटमभ्यधात् ॥ १९ ॥

ஷ்ருதியானது எந்தவித விசேஷணமும் இல்லாத பிரம்மத்தினை குறிப்பாக உணர்த்த விரும்புவதாகவே **சத்யம் ஞானம் அனந்தம்** என்று அதன் லக்ஷணத்தினை **உபகிரமமாக** கூறுகின்றது. முடிவாக **யஸ்சாயம் புருஷே** என்று

**உபஸம்ஹாரத்தில் ஸ ஏக** என்பதின் மூலம் அது இரண்டற்றதாக இருப்பதினையும் மனதிற்கு எட்டாததது என்பதினையும் கூறுகின்றது.

மீண்டும், மீண்டும் அந்த பிரம்மமானது ஐந்து கோசங்களிலிருந்தும் வேறாக அதனினும் சூக்ஷூமமானது என்றும் தானே ஒளிர்கின்றது என்றும் **அப்யாசம்** மூலம் கூறுகின்றது. ஆனந்த மயத்தினையும் தாண்டி உள்ளது என்பதால் அது (ஆனந்தமயகோசம்) பிரம்மம் இல்லை என்றும் அறியப்படுகின்றது. பிரத்யக்ஷம் முதலிய பிரமாணங்களால் அறியப்படாததாக இருப்பதாலும், உபநிஷத் வாக்கியத்தினாலேயே அறியப்படுவதாக இருப்பதாலும், அந்த பிரம்மத்தை அறிந்தவர் பிரம்மமாகவே ஆகின்றார் என்று **பலன்** கூறப்படடதாலும் **சத்யம் சானுருதம் சத்யமபவத்** (உண்மையும் பொய்யும் சேர்ந்து உண்மையாக தோன்றியது) என்ற வாக்கியத்தினால் ஜகத் மித்யாத்துவத்தினையும் அதில் வியவகாரிகத்துவத்தினையும் மட்டும் நிரூபிப்பதாக இருப்பதால் ஜகத் சிருஷ்டியயை விளக்குவது அதில் உண்மை என்ற அறிவை நிச்சயிபதற்கு இல்லை. இதனால் பிரம்மமானது தானே சத்தியமாகவும், ஜகத்தினை போல அதிஷ்டான சத்தினை எதிர்நோக்கியிருப்பது இல்லை என்றும் தெளிவாகின்றது.

இதனால் தைத்திரிய பிரம்மவள்ளியும் இப்படிப்பட்ட லிங்கங்கள் கொண்டு இரண்டற்ற பிரம்மத்தினை நிரூபிப்பதாலேயே, ஜகத்தின் சத்தியத்துவத்தினை நிரூபிக்க அல்ல என்று தெளிவாகின்றது. -19-

மீண்டும் **யதோ வா இமானி பூதானி** முதலிய வாக்கியத்தின் தாத்பர்யம் உண்மையில் பிரம்மத்தினை இரண்டற்றதாக நிரூபிக்கவே என்பதினை -

ब्रह्मवित्परमेति तत्खलु सच्चिदद्वयलक्षणं
वेदनं च गुहान्तरं निजस्वरूपतदाऽऽप्तये ।
इत्युदीयं सदद्वयत्वसमर्थनाय समाददे
विश्वसृष्टिमिमां श्रुतिर्न हि तत्समर्थनमन्यथा ॥ २० ॥

**பிரஹத்வாத், பிருன்ஹத்வாத் பிரம்ம** என்பதுபடி எது பெரிதானதோ அது

பிரம்மம் என்ற விளக்கத்தால் அடையப்பட்ட பிரம்மத்தினை அடைவதின் பலன் என்ன என்பது **பிரம்மவிதாப்னோதிபரம்** என்கிற வாக்கியத்தினால் ஷ்ருதி கூறுகின்றது.

அது எப்படிப்பட்டது என்ற கேள்விக்கு **சத்யம் ஞானம் அனந்தம் பிரம்ம** என்று லக்ஷணம் கூறுகின்றது. தேகத்தினாலோ, காலத்தினாலோ, வஸ்துவினாலோ அது பிரிக்கப்படாததாக, பொய்யிலிருந்து வேறானதாக அறியாமையிலிருந்து வேறானதாக இருக்கின்றது என்று கூறுகின்றது.

அதனை எப்படி அறிவது அல்லது அடைவது, இங்கு அறிதலே அடைதல் என்பதால் புத்தியில் புத்தியின் குகையில் அறிபவராகவே இருக்கும் ஒவ்வொரு அறிவிலும் நான் என்றிருக்கும் அதனை அந்த இதயகுகையிலுள்ள ஆகாசத்திலும் இருப்பதாக அறியவேண்டும். எல்லா இடத்திலும் வியாபித்து இருப்பதினால், பிரம்மத்தினை அது ஆகாயம் என்று கூறுவது முடியாது காரணம் **தஸ்மாத் ஏதஸ்மாத் வா ஆத்மன, ஆகாஷ சம்பூத** என்கிற ஷ்ருதி வாக்கியத்தில் இந்த ஆகாயமானது அந்த பிரம்மத்திலிருந்து உண்டானது என்று கூறியதால் இப்படி ஐந்து பூதங்களும் பிரம்மத்திலிருந்து வந்ததாக கூறியதால் அதிலேயே இருத்தலும், அதிலேயே அடங்குவதும் குறிப்பாக உணர்த்தப்படுகின்றது. இதனால் முக்காலத்திலும் பிரம்மமே அபின்ன நிமித்த உபதான காரணமாக இருப்பதால் பிரம்மத்தை தவிர ஜீவனோ, ஜகத்தோ இல்லை என்பது சிருஷ்டியின் தாத்பர்யம் அதன் (ஜீவ, ஜகத்) மித்யா தன்மையை நிரூபிக்கவே அதில் சத்தியத்தை நிரூபிக்க அல்ல. இதனால் தைத்திரிய ஷ்ருதி பிரம்மத்தினை இரணடற்றதாக நிரூபிப்பதிலேயே தாத்பர்யம் உள்ளது என்பது நிரூபணமாகின்றது. -20-

யஜுர் வேத உபநிஷத் வாக்கியத்தால் சிருஷ்டியின் தாத்பர்யத்தை விளக்கிய பின் அதனையே ரிக்வேத வாக்கியம் கொண்டு நிரூபிக்க-

**एक एव पुरा बभूव न चापरं स किलाऽखिलं**
**वीक्ष्य विश्वमिदं ससर्ज तनुं प्रविश्य निरीक्षते।**
**स्वप्नमावसथत्रयं सविचरतः प्रतिबुद्धवान्**

स्वाऽऽत्मनैव समस्तकाममवाप्नुवन्नमृतोऽभवत् ॥ २१ ॥

சிருஷ்டிக்கு முன்பு இது என்று சுட்டிக்காட்ட வேறு இரண்டாவது இல்லாது ஆத்மா மட்டுமே இருந்தது என்று **ஆத்மா வா இதமேவாக்ர ஆசீத் நான்யத் கிஞ்சன மிஷத்** என்று ஆரம்பிக்கின்றது.

அப்படியானால் இந்த ஜகத்தானது அசத்திலிருந்து உண்டாகியதா என்றால், இல்லை ஆத்மாவிலிருந்து ஆத்மாரூபமாகவே இதன் இருத்தல் என்பது ஷ்ருதியின் தாத்பர்யம். இதுவும் அங்கு அதே இடத்தில் கூறப்பட்டுள்ளது. **ஸ ஈக்ஷத** என்ற வாக்கியத்தினால் மாயாவிருத்தியினால் ஆத்மாவானது கண்டு இந்த ஜகத்தினை உண்டாக்கியது. அதில் நானா வகை ஜீவனை உண்டாக்கி அதில் தானே ஜீவ பாவத்தினை அடைந்து பிரம்மரந்திரத்தின் மூலமாக பிரவேசிக்கின்றது. அப்படி பிரவேசித்த ஆத்மாவானது மித்யையால் விழிப்பு, கனவு , மற்றும் தூக்க நிலைகளை பல காலமாக மீண்டும் மீண்டும் அனுபவக்கின்றது சம்சார சக்கரம் அனாதிகாலமாக இருப்பதால் பலகாலமாக என்று கூறப்பட்டது.

இப்படி ஜீவ பாவத்தினை அடைந்த நிலையில் தன்மை அறியவேண்டி உண்டாகின்ற ஆசையால், சம்சார கடலை கடக்கும் ஆசைக்கொண்டு, குருவினை அடைந்து அவர் உபதேசப்படி, சாஸ்த்திரத்தினை, கேட்டல், சிந்தித்தல், தெளிதல் முதலியவற்றை முறையாக செய்து அறியாமையை போக்கி தன்னுடைய நிஜ சுவரூபத்தினை அறிந்ததாலேயே அதனை (தன்னையே) அடைந்து, அதாவது எப்படி கழுத்தில் உள்ள மாலையானதினை பல இடத்தும் தேடி வேறு ஒருவரின் வாக்கியத்தால் அது கழுத்தில் உள்ளது என்பதனை அறிவதாலேயே அதனை அடைந்ததாகின்றதோ அதுபோல, ஆத்மாவினை அடைந்ததாலேயே எல்லா வித ஆசைகளையும் அடைந்தவனாக, ஆத்மாவிற்க்காகவே அதன்மேல் உள்ள ஆசையாலேயே மற்றவற்றிலும் ஆசையானது உண்டாகின்றது என்பதால், ஆத்மா பிறப்பிறப்பற்றது என்பதினை அறிவதால் பிறப்பிறப்பில்லா நிலையை அடைகின்றான். இதனையே **பிரம்ம வித் பிரம்மைவ பவதி** முதிலிய ஷ்ருதிகளும் கூறுகின்றது. -21-

மீண்டும் சுக்ல யஜுர்வேத பிருகதாரண்யக உபநிஷத்திலும் இதுவே

கூறப்பட்டுள்ளது என்பதினை -

**स्थूलसूक्ष्मविभागि मूर्तममूर्तमित्यखिलं जगत्**

**ब्रह्मणो द्विविधं हि रूपमिति प्रकल्प्य विभागतः।**

**आदिशन्त्यथ नेति नेति निषिध्य रूपमशेषतः**

**काण्व वाजसनेयक श्रुतिरप्यशेषयदद्वयम्॥ २२॥**

ஸ்தூலமான நிலம், நீர் மற்றும் நெருப்பும், சூக்ஷ்மமான வாயு மற்றும் ஆகாசம் இவை மூர்த்தமாகவும், அமூர்த்தமாகவும் பிரம்மத்தின் இருரூபங்களாக தோன்றுகின்றது என்று கூறி அத்யாத்மமாகவும், அதிதைவதமாகவும் சிருஷ்டியயை **அதாத ஆதேஷோ நேதி நேதி** என்ற வாக்கியத்தின் மூலம் ஸ்தூல மற்றும் சூக்ஷ்ம சிருஷ்டி இரண்டையும் நிராகரித்து அதற்கு அதிஷ்டானமான பிரம்மத்தினை கான்வ மற்றும் மாத்யந்தினிக ஷாக்கையை சேர்ந்த ஷ்ருதியானது சிருஷ்டியை நிராகரிப்பதன் மூலம் . அதில் அதன் தாத்பர்யம் ஜகத் மித்யா என்பதனையும், இரண்டற்ற பிரம்மத்தினை குறிப்பதாகவே இருக்கின்றது.

ஆனால் **நேதி நேதி** என்று எல்லாவற்றினையும் நிஷேதிப்பதால் பிரம்மமும் நிராகரிக்கப்பட்டது என்று கூறுதல் சரியல்ல. காரணம் அதிஷ்டானமற்ற நிஷேதம் இருத்தல் முடியாது என்பதால் மட்டுமல்லாமல் **பிரம்ம தே ப்ரவாணி** (உனக்கு பிரம்மத்தினை கூறுகின்றேன்) என்று பிரத்திஞ்ஞை செய்ததினாலும் என்க . -22-

இதுபோலவே சாம வேதத்தின் சாந்தோக்கிய உபநிஷத்திலும் சிருஷ்டி வாக்கியத்தின் பொருள் அறியப்படவேண்டும் என்பதினை -

**यत्प्रभोधवशादशेषमिदं जगद्विदितं भवे**

**तद्विवक्तुमुपक्रमोऽत्र सदेव सोम्यगिरा ततः।**

**सृष्टिनिरीक्षणपूर्विका जगतस्तदैक्यविवक्षया**

मृत्तिकादिनिदर्शनानि तथाहि सङ्गतिमाप्नुयुः ॥ २३ ॥

**சர்வம் கல்விதம் பிரம்ம** என்று எல்லாமே பிரம்மம் என்று ஆரம்பிக்கும் ஆறாம் அத்யாயமான சாந்தோக்கிய உபநிஷத்தில் எல்லாம் படித்து விட்டோம் என்கிற கர்வத்துடன் வரும் **ஸ்வேதகேதுவினை**, ஆத்மாவினை அறியாமல் அறிந்த மற்ற எதுவும் பயனற்றவை என்பதினை அறிந்த அவனது தந்தை அறியவேண்டியதினை அறிந்தாயா, எதனை அறிந்தால் எல்லாமே அறிந்ததாகின்றதோ என்று வினவிய போது அப்படிப்பட்ட ஒரு விஷயத்தினை அறியாத மகன் தன்னடக்கத்தோடு அதனை வினவ **சதேவ சௌம்ய இதமக்ர ஆசீத் ஏகமேவாத்விதீயம்** என்று கூறி தந்தை ஆரம்பிக்கின்றார். எதனை அறிவதால் இந்த ஜகத்தின் எல்லா விஷயமும் அதன் மூல பூத தத்துவமாக அறியமுடியுமோ அதனை விளக்க அதற்காகவே சிருஷ்ட்டியையும், இரண்டற்றதாக கூற விரும்புவதாகவே **ஸ ஐக்ஷத** (அது பார்த்தது) போன்ற வாக்கியத்தினால் ஷ்ருதி கூறுகின்றது. எப்படி மண் என்கிற தத்துவமே பானை தட்டு முதலிய மாற்றமாக உண்டாகி இருக்கின்ற போதிலும் மண்ணே உண்மை. பெயர் மற்றும் ரூபமானது ஏற்றிப்பார்க்கப்படும் ஒன்றானதால் அதுபோல அதிஷ்டானமான பிரம்மமே உண்மை. அதனை தவிர வேறு ஜகத் என்பது இல்லை. அப்படி ஜகத் உண்மையானதாக இருந்தால் அதனை எத்தனை கோடி ஜன்மங்கள் எடுத்தாலும் அதனை முழுமையாக அறிய இயலாது என்பதால் இந்த ஷ்ருதியிலும் சிருஷ்டி விளக்கப்பட்டது. இரண்டற்ற பிரம்மத்தினை எல்லாவற்றின் தத்துவமாக விளக்கவே என்பது தெளிவாகின்றது. -23-

மீண்டும், **தத்வமஸி** என்று ஒன்பது முறை கூறப்பட்டதாலும் **அப்யாசம்** என்கிற லிங்கத்தினாலும் சிருஷ்டியில் தாத்பர்யம் இல்லை என்பதினை-

सत्प्रसूतमिदं सति स्थितमस्तमेति सति स्वतः
सत्तया परिहीणमित्यखिलं सदेव पृथङ्मृषा ।
कल्पितं हि पृथङ्नसन्मृगतृष्णिकोदकवन्मरो
स्तत्सदद्वयमेव वस्त्विति सृष्टिवाक्यसमीहितम् ॥ २४ ॥

**சதேவ ஸௌம்ய** மற்றும் **ஸ ஐக்ஷத** மூலமும் அந்த சத்ரூபமான பிரம்மத்திலிருந்தே ஜகத் உண்டாகியது என்பதும் அதனில் அதுவே பிரவேசித்தது என்பதால் அதிலேயே இருக்கின்றது என்பதும் அதிலேயே லயம் அடைகின்றது என்பதும் கூறி முக்காலத்திலும் சத்தினை (பிரம்மத்தினை) தவிர ஜகத் என்பது இல்லை என்று கூறி **வாசாரம்பணம்** என்ற வாக்கயித்தினால் அந்த சத்தினை தவிர வேறாக தோன்றும் ஜகத் என்பது வெறும் மித்யையே , கற்பனை செய்யப்பட்டதே என்று நிரூபிக்கின்றது. இது எப்படியென்றால், மருபூமியில் தோன்றும் தண்ணீரில் பிரதிபலிப்பானது எப்படி பொய்யோ அப்படிப்பட்டது. இதனால் சாந்தோக்கிய உபநிஷத்திலும் இரண்டற்ற பிரம்மத்தினை நிலைநாட்டவே சிருஷ்டியின் மித்யையை நிரூபிக்கவே அப்படிப்பட்ட சிருஷ்டி வாக்கியங்கள் கூறப்பட்டன. அதை உண்மையென்று உணர்த்த அல்ல. இரண்டற்ற பிரம்மத்தினை உணர்த்தவே என்பது நிலையாகின்றது. -24-

இதுபோலவே அதர்வணவேத முண்டக உபநிஷத்திலும் சிருஷ்டியானது பிரம்மத்தினை இரண்டற்றதாக நிரூபிக்கவே என்று-

विद्यया परयाऽधिगम्यमुदीर्य धर्मविवर्जितं
सूक्ष्ममक्षरतस्ततः प्रभवत्यशेषं जगन्मृषा ।
तद्धि सत्यमिति स्फुटं परिशेष्य वेदनमात्रत
स्तत्स्वयं भवतीति नित्यमवाप्तमाह तुरीयगीः ॥ २५ ॥

**கஸ்மின்னு பகவோ** (எதனை அறிந்தால் பகவானே, எல்லாம் அறிந்ததாக ஆகின்றது) என்று சிஷ்யனின் கேள்விக்கு **த்வே வித்யா** (இரண்டு வித்யைகள் அறியப்பட வேண்டியது) என்று கூறி ரிக் முதலிய வேதங்களை **அபராவித்யா** என்று கூறி **பரா யயா தத்க்ஷரமதகம்யதே** பராவித்யையானது எதுவென்றால், எதனால் அந்த அழியாத பிரம்மத்தினை விளக்குகின்றதோ, அது என்று கூறி அந்த அழிவற்ற இரண்டற்ற பிரம்மத்திலிருந்து இந்த சிருஷ்டியானது உண்டாயிற்று **விவர்த்தமாக** என்று கூறுவதன் மூலம் ஜகத் மித்யா என்பது நிரூபணமாகின்றது. அந்த பிரம்மத்தினை கர்மத்தினால் அதன் பலனாக அடையமுடியாது என்று கூறுவதால் அதுவே அழிவற்ற **பரமார்த்தசத்யம்** என்று

விளங்குகின்றது. இதனை நிலைநிறுத்தவே **ஏதஸ்மாத் ஜாயதே** என்ற சிருஷ்டி வாக்கியம் கூறப்பட்டது. **பிரம்ம வேத பிரம்மைவ பவதி** முதலிய வாக்கியத்தால் அதனை அறிந்த அதே நேரத்திலேயே அதனை அடைந்ததாகின்றது என்பதால் த்வைதம் என்பது உண்மையில் அறியாமையினால் அடையப்பட்டது போலிருக்கும் அதனை அறிவினால் அறிந்தால் அடையப்பட்டதாகின்றது. எது எப்போதும் அடையப்பட்டதாகவே இருப்பதால், சுவரூபம் என்பதால் -25-

மாண்டுக்ய உபநிஷத்திலும் இதுவே கூறப்பட்டுள்ளது என்று காண்பிக்க -

**भूत भावि भवज्जगत्परं च सत्प्रणवात्मकं**
**पादशः प्रविभज्य निह्नुत वाच्य वाचक भेदकम् ।**
**पूर्व पूर्वम्थोत्तरत्र  विलाप्य तुर्यमलक्षणं**
**स्वात्मरूपमथर्वणश्रुतिरभ्यधाच्छिवमद्वयम् ॥ २६ ॥**

**ஓமித்யேதத்க்ஷரமிதம் சர்வம்** என்று எல்லாவற்றினையும் ஓம்காரம் என்று கூறி ஆரம்பிக்கும் ஷ்ருதியானது, கடந்தகால, நிகழ்கால மற்றும் எதிர்கால ஜகத் என்று எல்லா நிலையிலும் ஓங்காரமான அந்த பிரம்மமாகவே இருக்கின்றது என்று, கற்பனை செய்யப்படட காரிய-காரண ரூபமான எல்லாம் பிரம்மமே என்று கூறி **அயமாத்மா பிரம்ம** என்கிற மஹாவாக்கியத்தால் பிரத்யகாத்மாவிற்கும் பிரம்மத்திற்கும் உள்ள இரண்டற்ற வேறல்லாத தன்மையை நிரூபிக்கின்றது. முதல் பாதமான **அ**காரத்தோடு வைஷ்வாநரனை, இரண்டாம் **உ**காரத்தோடு ஹிரண்யகர்பனுடனும் அதனை மூன்றாம் பாதமான **ம**காரத்தோடு பிராஞ்ஞனிலும் மேலும் இதனை பாதிமாத்திரையான துரியத்தில் லயம் செய்வதினால் அதன் இன்மையை நிச்சயிப்பதினால், நான்காம் பாதமான இரண்டற்ற, லயமடையும் தன்மையல்லாத, தானே ஒளிர்கின்ற அந்த பிரம்மத்தினை நிரூபிப்பதாகவே, மற்ற ஷ்ருதிகளின் தாத்பர்யத்தையே மாண்டுக்யமும் நிரூபிப்பதாக உள்ளது என்பது தெளிவாகின்றது. -26-

தடஸ்த லக்ஷணத்தினால் இப்படி எல்லா வேதத்தாலும் அதன் சாக்கையிலும் கூறப்பட்டதுபோல பிரம்மத்தை போதிக்கவே என்றும் ஜகத் மித்யை

என்றும் விளங்குவதால், தடஸ்த லக்ஷணத்தின் பலமாக ஸ்வரூப லக்ஷணத்தினை விளக்க-

**इत्थमेव ततस्ततः श्रुतसृष्टिवाक्यकदम्बकं**
**प्रक्रियाद्यभिशीलनेन सदद्वयेन समानयेत् ।**
**युक्तिभिः श्रुतिभिश्च सैष तटस्थलक्षणसङ्ग्रह**
**स्तत्फले खलु लक्ष्यसत्त्वपरिच्छिदात्रयवारणे ॥ २७ ॥**

இப்படியாக இதுபோலவே ஒவ்வொரு வேதத்திலும் அதன் உபநிஷத் வாக்கியத்திலும் சிருஷ்டி வாக்கியத்தின் தாத்பர்யத்தினை ஆசார்ய பரம்பரையாக கூறப்பட்ட பொருளை ஷ்ருதி சம்மதமான யுக்தி கொண்டும் நிச்சயித்து இரண்டற்ற பிரம்மத்திலேயே அதன் தாத்பர்யம் என்பதை அறியவேண்டும். இப்படி இதுபோல விளக்கபட்ட தடஸ்த லக்ஷணத்தின் பலமான ஸ்வரூப லக்ஷணத்தினை விளக்க அதன் இரண்டுவகை பிரயோஜனத்தினையும், பிரம்மம் என்கிற லக்ஷ்யம் மற்றும் சத்துவம் (இருத்தல்) என்கிற பரமார்த்த உண்மை. இதனை மூன்று வகையான வரைவுகளிலிருந்தும் விலக்கிகாட்டவே மேலே கிரந்தமானது துவங்குகின்றது. -27-

தடஸ்த லக்ஷணத்தினால் நிரூபிக்கப்பட்ட பிரம்மத்தின் சொரூபலக்ஷத்தினை -

**सच्चिदद्वयसौख्यरूपममुष्य वास्तवलक्षणं**
**नाऽनृतेऽस्फुरणेऽसुखे पुरुषार्थतेति तदात्मता ।**
**वारणीयविधाप्रकल्पितभेदलब्धपदैः पदै**
**र्नैकरस्यहतिस्तथैव हि साधु पूर्वमवादिषम् ॥ २८ ॥**

**<u>பிரம்மவிதாப்னோதி பரம்</u>** முதலான வாக்கியத்தினால் **<u>சத்யம் ஞானம் அனந்தம் பிரம்ம</u>** என்று அடையப்படும் பிரம்மத்தின் ஸ்வரூபலக்ஷணையானது

குறிப்பிடபடுகின்றது. இல்லாததினை **வியாவிருத்தி** (நீக்குதல்) மூலமாக பிரம்மத்தினை குறிப்பதால் சத்யம் பிரம்ம, ஞானம் பிரம்ம, ஆனந்தம் பிரம்ம முதலியதாக எல்லா சொற்களும் அந்த பிரம்மத்தினையே குறிப்பதால் வாக்கயிமானது அகண்டார்த்தத்தினை குறிப்பதாக உள்ளது. பிரம்மம் சத்யம் முதலிய தர்மங்கள் உடையது என்று கூறமுடியாது, நிர்குணம் என்று கூறப்பட்டதால், சத்யம் முதலியவை பொய் முதலியவைகளிலிருந்து வேறுபடுத்திக்காட்டவே அவ்வாறு கூறப்பட்டுள்ளது. பொய் முதலியவைகளில் ஒருவருக்கும் ஆசைதோன்ற வாய்ப்பில்லை என்பதால் அதனின் அபாவமானது அதிஷ்டானத்திலேயே (பிரம்மத்திலேயே) சுவரூபமாக இருப்பதால் எந்த தோஷமும் இல்லை. பிரம்மம் ஏக ரஸமானது என்பது முன்பே விளக்கப்பட்டதால். எதுவெல்லாம் பிரபஞ்சத்தில் (ஜகத்தில்) பிரசித்தமான அசத் முதலியவற்றினை விலக்கவேண்டுமோ அவைகளெல்லாம் நீக்குவதான வியாவிருத்தி லக்ஷணம் பிரம்மத்திற்கு செய்யப்பட்ட போதிலும், இதனால் தோன்றும் பிரிவானதும், உண்மையில் பிரம்மம் ஏகரஸம் என்பதல் முன்பு விளக்கப்படடபடி அதன் லக்ஷணத்தில் எந்த குறையும் இல்லை என்பது நிரூபணமாகின்றது. -28-

தடஸ்த லக்ஷணத்தினால் நிச்சயிக்கப்பட்டாலும் ஒரு தூணை ஆட்டம் இல்லாமல் திருடமாக நடவேண்டி அதனை தானே ஆட்டிப்பார்ப்பதுபோல, சத்தியம் முதலிய மூன்றினையும் ஷ்ருதி மற்றும் லௌகிக காரணங்கள் கொடுத்து நிச்சயிக்க-

**सत्यत्वं तस्य सौक्ष्म्यान्नभस इव जगन्नीलिमाधारभावा**
**दव्यावृत्तेरवृत्तेरखिलदृशितया सर्वबाधाऽवधित्वात्।**
**निस्सङ्गत्वाऽविरोधात्सकलगततयाऽऽत्मत्वतः साक्षिभावा**
**दन्यद्रष्टुर्निषेधात्स्फुटवचनशतैः स्वानुभूत्या च सिद्धम्॥ २९॥**

பிரம்மத்தில் சத்திய தர்மமானது சூக்ஷ்மமாக இருக்கின்றதால் எந்த இந்திரியத்தினாலும் அறியப்படமுடியாததாக இருக்கின்றது என்பதால் அது நிச்சயிக்க முடியும். எப்படியென்றால், பஞ்சபூத சிருஷ்டியானது அடங்கும்பொழுது எதில் அடங்குமோ என்று எதிர்மடையாக சென்று

நோக்குவதினால் அது பிரம்மத்திலேயே அடங்குகின்றது என்பதால், எப்படி ஆகாயமானது தூரத்தில் காணப்படும் நீலம் முதலியவற்றால் நிரூபணமானாலும் அருகில் நீலம் முதலியவை இல்லாதபோது அதன் இருப்பு நிச்சயமாகின்றதோ அப்படி ஜகத் கொண்டும் அதன் இல்லாமைகொண்டும் பிரம்மமானது சித்தமாகின்றது ஆனால். வேதாந்த சித்தாந்தத்தில் சிப்பியில் காணப்படும் வெள்ளி எப்படி பொய்யோ அப்படியே சிப்பியும் மித்யா என்று ஏற்பதால். மித்யையில் தோன்றும் வெள்ளி போன்று, ஜகத்தும் மித்யையில் தோன்றியது என்று ஏற்று அதிஷ்டாணம் இல்லாத சூன்யம் அதன் தோற்றத்திற்கு காரணம் என்று கூறினால் அது சரியல்ல. இது இல்லை, இது இல்லை என்று நிராகரிக்கும் போது அது அதன் அதிஷ்டாணத்திலேயே முடிகின்றது என்ற நியதியாலும், சிப்பியில் வியவகாரிக சத்யத்துவம் ஏற்றக்பட்டதாலும், பிரம்மத்தினை தவிர வேறு அதிஷ்டானம் ஏற்க்கப்படமுடியாது என்பதாலும்,. காரணம் **<u>நான்யதோஸ்தி திரஷ்டா</u>** என்பது முதலிய வாக்கியங்களில் வேறு **திரஷ்டா**(பார்பவர்) இருப்பது என்பது நிராகரிக்கப்படடதால். எல்லாவற்றினையும் பிரகாசிக்கும் சத்ரூபமாக பிரம்மம் இருப்பதால், பிரம்மத்திற்கு வேறு ஆதாரம் கற்பனை செய்யப்பட்டால், அதற்கும் வேறு ஆதாரம் என்று அநவஸ்தா தோஷம் உண்டாகும்.

**<u>சர்வம் கல்விதம் பிரம்ம, நேஹ நாநாஸ்தி கிஞ்சன</u>** முதலிய வாக்கியத்தால் எல்லா நிராகரணமும் முடியும் இடமாக பிரம்மத்தை குறித்து கூறப்பட்டதாலும் அதுவே சத்தியம் என்பது நிரூபணமாகும். காரணம் பிரம்மமானது சங்கமற்றது என்றும் விரோதமற்றது என்றும் கூறப்பட்டதால். இல்லாமை என்பதே நிராகரிப்பு என்பதால் கூறப்பட்டுள்ளது. எல்லா இடத்திலும் வியாபித்து இருக்கும் பிரம்மமானது அவ்வாறு இருத்தல் முடியாது என்பதாலும் அதன் சத்யத்வம் நிச்சயமாகின்றது. எல்லாவற்றினையும் நிராகரிக்கும் தன்னை எது கொண்டு நிராகரிக்கமுடியும். முடியாது என்பது பொருள். இப்படி எல்லாவற்றிக்கும் சாக்ஷியான பிரம்மத்தில் சத்யத்துவம் நிராகரிக்கப்பட்டால் ஜகத்தும் இருளடையும், (சாக்ஷி பிரகாசம் இல்லாததால் பிரகாசமற்று போகும்) இப்படிப்பட்ட யுக்திகளால் மட்டும் பிரம்மத்தில் சத்திய நிச்சயிக்கப்படவில்லை. மேலும் **<u>தத் சத்யம் ஸ ஆத்மா</u>** முதலிய பல வாக்கியத்தினாலும் ஒவ்வொருவருடைய அனுபவமும் இதனை நிச்சயிப்பதால் பிரம்மத்தில் சத்தியதன்மை நிச்சயமாகின்றது. இப்படி கூறப்பட்ட காரணங்களும் ஒருவருக்கு பிரம்மத்தில் சத்திய தன்மையை உறைப்பிக்கவில்லை என்றால், ஷ்ருதியானது **<u>அசன்னேவ ஸ பவதி அசத் பிரம்மேதி வேத சேத்</u>**

(அசத்தாகவே ஆகின்றான் பிரம்மம் அசத் என்பவன்) என்று கூறுகின்றது. -29-

அடுத்து பிரம்மத்தின் சித் ரூபத்தினை நிச்சயிக்க-

**आत्मत्वादीक्षितृत्वादखिलवशितया शास्त्रयोनित्ववादात्**
**कामाऽभिध्योपदेशाच्छशितपनमुखद्योतिभारूपतोक्तेः ।**
**साक्षादेवाऽपरोक्षादसुकृतसुकृताऽऽध्यक्ष्यसाक्षित्ववादात्**
**सर्वज्ञ ज्ञादिशब्दात्स्फुटवचनशतैश्चापि सच्चित्स्वभावम् ॥ ३० ॥**

பிரம்மம் இருத்தல் மட்டுமல்லாது சித் (சைதன்ய) சுவபாவம் உடையது என்பது காரணங்கள் கொண்டு நிரூபிக்கப்படுகின்றது. ஷ்ருதியானது பிரம்மத்தை பல இடங்களில் ஆத்மா என்றும் ஜடத்தினை அநாத்மா என்றும் கூறியிருப்பதனாலும், ஆனால், இந்திரியம் ஆத்மா என்பது போல, இந்திரியங்களுக்கு ஆத்மா என்று கௌணமாக குறிப்பிடப்படுவதுபோல பிரம்மத்திற்கும், என்று கூறுதல் சரியல்ல. **தத் ஐக்ஷத** முதலிய ஷ்ருதிகளில் அந்த பிரம்மத்தினை சாக்ஷியாகும் தன்மை கூறப்பட்டிருப்பதால், ஜடத்தினால் அது முடியாது என்பதனாலும், பிரம்மம் சைதன்யம் என்று நிரூபணமாகின்றது. **சர்வஸ்ய வஷீ சர்வஸ்ய ஈஷான** முதலிய வாக்கியத்தினால் பிரம்மமானது இந்த சிருஷ்டி முழுவதனையும் தன்னுடைய ஆளுமையில் வைத்திருப்பதால் என்க.

வேதத்தினை தவிர வேறு பிரமாணங்களால் அறியப்படமுடியாதது என்று **நாவேதவின் மனுதே தம் பிரூஹந்தம்** என்று ஷ்ருதி வாக்கியம் கூறி இருப்பதாலும் அது (பிரம்மம்) சைதன்யம் என்று நிரூபணமாகின்றது **ஸோ காமயத பஹுஸ்யாம் பிரஜாயேய** முதலிய வாக்கியத்தால் சிருஷ்டி சங்கல்பத்தினை செய்தது என்பதாலும் அப்படிப்பட்ட பூர்ணமான காமத்தினை உடையது என்பதாலும் அதன் சித் சுபாவம் அறியப்படுகின்றது.

தான் சுவயம் பிரகாசமாக இருந்து மற்றவைகளை பிரகாசித்து அதுமட்டுமல்லாமல் மற்றவைகளை (சூரியன், சந்திரன்) பிரகாசிக்க செய்யும் தன்மையுடையது என்று கூறப்பட்டதாலும், பிரம்மத்தின் சித் சுபாவம்

விளங்குகின்றது. **யத் சாக்ஷாத் அபரோக்ஷாத் பிரம்ம** என்கிற வாக்கியத்தால் வேறு ஒன்றினால் பிரகாசிக்க செய்யப்படும் தன்மை நிராகரிக்கப்பட்டதால், சைதன்யத்தினை தவிர மற்ற விஷயங்கள் அங்ஙனம் இல்லாததாலும் என்க.

புண்ணிய பாப கர்மத்திற்கு அதன் பக்குவ அவஸ்தையில் பலனை கொடுக்கும் தன்மையுள்ளதாக ஷ்ருதியில் கூறப்படடதாலும், ஜடத்தினால் அது இயலாது என்பதாலும், பிரம்மம் சித்ரூபம் என்பது நிச்சயமாகின்றது.

**ய சர்வஞ சர்வவித்** முதலிய வாக்கியத்தால் ஷ்ருதியானது பிரம்மமத்தில் சர்வஞ்த்வம் முதலிய சித்ரூப தன்மையை கூறியிருப்பதாலும், இதுமட்டுமல்லாமல் நேரடியாகவும் **சத்யம் ஞானம் அநந்தம் பிரம்ம** பிரஞ்ஞானம் பிரம்ம முதலிய பல வாக்கியங்களால் பிரம்மம் சித் சுவரூபமானது என்றும், பூர்வாச்சாரியர்களின் வாக்கியத்தாலும் தன்னுடைய அனுபவத்தாலும் பிரம்மம் சித் ரூபமானது என்பது நிரூபணமாகும். – 30 -

சத் மற்றும் சித் சுவபாவத்தினை ஏக ரஸமாக நிரூபித்தபின் ஆனந்த சுவபாவத்தினை நிச்சயிக்க

सौख्योत्कर्षाऽवधित्वान्निखिलसुखकणाऽम्भोनिधित्वश्रुतिभ्यो
मुक्तप्राप्यत्ववादान्निरवधिपरमाऽऽनन्दभूमात्मकत्वात् ।
सर्वप्रत्यक्त्ववादान्निधि निलय वधू सम्यवादात्सुषुप्ता
वानन्दे ब्रह्मतोक्तेरपि च रसतया तत्सदाऽऽनन्दरूपम् ॥ ३१ ॥

வளர்ச்சியுள்ள ஒவ்வொன்றிலும் அதன் முடிவு ஏதாவது ஒன்றில் காணப்படுவது நிச்சயம் . பிரகாசத்தின் **உத்கிருஷ்டம்** சூரியனில், திடமானதில் பிருத்வி, அதுபோல சித்தின் முழுவளர்ச்சி அடைந்த இடமாக பிரம்மம் உள்ளது என்று தைத்திரிய உபநிஷத்தில் ஆனந்தத்தினை பற்றிய விசாரத்தில் தெளிவாக சித்தம் செய்யப்பட்டுள்ளது. **பிரம்மன ஆனந்த** என்று அதன் தர்மமாக ஆனந்தத்தினை ஏற்கமுடியாது முன்பு கூறியதுபோல நிர்தர்மகமான பிரம்மத்தில் எந்த தர்மமும் இருத்தல் முடியாது. ராகுவின் தலை என்ற இடத்தில்

கூறப்பட்டதுபோல ஏற்க்கவேண்டும். ராகு என்பது தலை மட்டும் உள்ள அசுரபாகம் என்றாலும் அப்படி கூறப்படுவது உள்ளதுபோல.

இந்த உலகத்தில் எல்லா விஷயசுகமும் அந்த பிரம்ம சுகத்தின் அம்சமே என்பதால், அது நம்மால் அறியப்படுவதாக உள்ளதாலும் பிரம்மம் ஆனந்த ரூபம் என்பது நிச்சயமாகின்றது. நெருப்பும் பொறிகளும் போல பிரம்ம சுகமும், விஷய சுகமும் என்க.

**பிரம்மவித் பிரம்மைவ பவதி** என்று புருஷனால் அடையப்படவேண்டியதாக அந்த பிரம்மமே கூறப்பட்டதாலும் விஷய இன்பத்தில் ஆசையற்ற விரக்தர்களான முமுக்ஷுவிற்கு அளவற்ற இன்பமுள்ள பிரம்மத்தில் ஆசை உண்டாக முடியாது என்று கூறுதல் தவறு. காரணம் அளவற்ற இன்பத்தில் ஆசையுள்ளவருக்கே அனவான இன்பமான விஷய இன்பத்தில் பற்றற்ற தன்மை உண்டாக முடியும் என்பதால்.

**யோ வை பூமா தத் சுகம், நால்பே சுகமஸ்தி** என்பது முதலான வாக்கியத்தால் பிரம்மமானது அளவற்ற இன்பமானது என்று நிரூபணம். ஒவ்வொருவருடைய ஆத்மாவாகவும் அந்த பிரம்மமே இருப்பதாக **யத் சாக்ஷாத் அபரோக்ஷாத் பிரம்ம, ய ஆத்மா சர்வாந்தர சர்வியாபி சர்வ பூதான்ராத்மா** முதலிய ஷ்ருதிகளாலும் இது தெளிவாகின்றது. பிருகதாரண்யக ஷ்ருதியிலும் **ந கஞ்சன காமம் காமயதே ந கஞ்சன ஸ்வப்னம் பஷ்யதி** முதலிய வாக்கியத்தில் தூக்கமும் அந்த பிரம்ம ஆனந்தத்தினாலேயே ஜீவனானது அனுபவிக்கின்றது என்பது நிரூபிக்கப்பட்டதாலும் என்க.

தைத்திரிய ஷ்ருதியிலும் எந்த ரஸத்தினை அடைவதால் முமுக்ஷுவானவர் ஆனந்தத்தை அடைகின்றாரோ அது பிரம்மத்தின் ஆனந்த ரஸமே என்று நிச்சயிகத்திருப்பதால். **ரஸோ வைஸ ரஸஹ்யேவாயம் லப்த்வா ஆனந்தீபவதி** என்று கூறியிருப்பதாலும்.

**ஆனந்த பிரம்ம யோனி, விஞ்ஞானமானந்தம் பிரம்ம, ஆனந்தோ பிரம்மேதி வியஜானாத்** முதலிய பல வாக்கியங்களும் பிரம்மத்தில் ஆனந்த சுவரூபத்தை நிரூபிக்கின்றது. -31-

முதல் பாகத்தில் தத் பதார்த்த்தின் சுவரூபலக்ஷத்தினை சார்வாகர் முதலிய மதங்களில் ஏற்க்கப்படும் தத்ததுவத்தினை நிராகரிப்பது மூலம் நிலைநிருத்தி தேகம், இந்திரியம் முதலியவை ஆத்மா இல்லை என்று காண்பிக்கப்பட்டது. இனி த்வம் பதார்த்ததையும் அதுபோல காண்பிக்க–

**सच्चित्सौख्यैकरस्यं निगदितमिह यद्ब्रह्मणो लक्षणं त**

**त्प्रत्यक्तत्वेऽपि जैवे सममखिलदृशस्तस्य बाधाद्ययोगात्।**

**मुख्यप्रेमाऽऽस्पदत्वादुपधिविभिदया वस्तुभेदाद्यसिद्धे**

**र्ब्रह्मांऽशत्वप्रवादात्तनुकरणदृशः स्वप्रकाशत्वतश्च ॥ ३२ ॥**

சத்திய, ஞான மற்றும் ஆனந்த ஏகரஸமானதாக பிரம்மத்தின் விளக்கிய நிலையில் , தத், த்வம் பதார்த்தத்தின் விசாரனை செய்கையில் ஐந்து கோசத்தினையும் நீக்கி சுவயம் பிரகாசமான பிரம்மத்தினை ஆத்மாவாக நிரூபித்தபின், அந்த நிலை சாக்ஷிக்கும் பொதுவான நிலை என்பதால், இந்த ஜகத் முழுவதையும் பார்க்கும் தன்மையுள்ளதாக இருப்பதினால், அப்படிப்பட்ட மாற்றமற்ற தன்மையுள்ள சாக்ஷியினை நிராகரித்தல் என்பது இயலாத காரணத்தினால், எல்லாவற்றினையும் காட்டிலும் மிகவும் விரும்பப்படுவதாக இருப்பதானாலும், மற்றவற்றினை விரும்புவதும் தனக்காகவே என்பதாலும் இதிலேயே அளவற்ற ஆனந்தம் உள்ளதாக வேதமும் நிச்சயிப்பதனால், மித்யையான ஜகத்தில் காணப்படும் தேசத்தினாலும், காலத்தினாலும், வஸ்துவினாலும் உண்டாகும் பிரிவுகள் இல்லாததினாலும், ஆனால் ஜகத்தினால் இல்லாமல் போகட்டும் ஜீவன் பிரம்மதின் அம்சம் என்பதால் அதிலும் பிரிவு உண்டாகும் என்று கூறினால், அது தவறு, எப்படி நெருப்பில் தோன்றும் பொறிகளானது நெருப்பேயன்றி வேறில்லையோ, எப்படி தண்ணீரில் தோன்றும் நீர் குமிழியானது நீரேயன்றி வேறில்லையோ, எப்படி குடத்திலிலுள்ள ஆகாயமானது மகா ஆகாயத்தினை விட வேறில்லையோ, அப்படியே ஜீவ பிரம்மம்.

ஆனால், ஈஸ்வரன் எப்போதும் சர்வஞ்ஞத்தவம் உடையவரானதால் அவர்

ஞானரூபமானவர் என்று கூறுவதில் தவறில்லை. ஆனால் ஜீவனுக்கு ஞானமானது இந்திரியத்தினை சார்ந்திருப்பதனால், ஜீவன் நித்திய ஞான ரூபம் என்று கூறுதல் இயலாது, என்றால் அது சரியல்ல. காரணம் வெளி விஷயத்தினை பிரகாசிக்க இந்திரியங்களின் அவசியம் ஏற்கப்பட்டாலும். இந்திரியம் முதலியவற்றினை பிரகாசிக்கும் ஆத்மாவானது சுவயம் ஜ்யோதி என்று கூறப்பட்டதாலும் .-32-

மேற்கூறப்பட்ட காரணத்தினால் பிரம்மத்தினை போலவே சமானமான சுவரூபலக்ஷணத்தினை பிரத்யக் ஆத்மாவிலும் காண்பிக்க-

**स्वाप्नार्थैर्बाध्यमानैरयमपि सह यद्बाध्यमानो न दृष्टो**

**बाधद्रष्टा स्वयं सन्कथमिव कलयेदात्मबाधं दृगात्मा ।**

**दृग्भेदे यन्नमानं यदपि न च समा दृग्दृशोर्गोचरो वा**

**यच्चाऽसौ निर्विकारस्तदयमनवधिः प्रत्यगात्मा सदात्मा ॥ ३३ ॥**

எப்படி தூக்கத்திலிருந்து விழித்ததும் அங்கு கனவில் தோன்றிய பொருட்களுடன் அதன் சாக்ஷி அழிவதில்லையோ, விழித்தெழுந்ததும் கனவு நிலையில் அதனை கண்டவன் நானே இந்த விழிப்பு நிலையையும் காண்கின்றேன் என்றே அறிவு உண்டாகின்றது. மற்றவற்றினை நிராகரிக்கும் சாக்ஷியான ஆத்மாவானது எப்படி தன்னை நிராகரிப்பதினையும் அறிய முடியும். பார்ப்பவரின் அழிவோ அல்லது பலவானதாகவோ உண்டாக பிரமாணம் இல்லாததாலும், **நான்யதோஸ்தி திரஷ்டா** முதலிய வாக்கியத்தினால் அது நிராகரிக்கப்பட்டதாலும் அநவஸ்தை தோஷம் உண்டாகும் என்பதாலும்.

ஆனால், முதலாவது இரண்டாவதினையும், இரண்டாவது முதலாவதையும் பிரகாசிக்கட்டும் இரு தீபத்தினை போல என்றால் , இல்லை , ஒரு சாக்ஷி மற்றொன்றின் விஷயமாவது முடியாது என்பதால்.

அனால் சாக்ஷியின் நிராகரணமானது இல்லாது போனாலும், **பால்யம்** , **யௌவனம்** முதலிய மாற்றங்கள் அடைவதால் அது பானையை போல வரையறுக்கப்பட்டது என்று கூறினால் அதுவும் முறையல்ல . காரணம் பால்யம்

முதலிய மாற்றங்கள் மித்யையானதாலும் ஆத்மாவிற்கு அந்தவித மாற்றங்கள் இல்லாததாலும் **<u>ந ஜாயதே ம்ரியதே வா</u>** முதலிய வாக்கியமும் இதனையே நிரூபிக்கின்றது. இந்த காரணத்தினால் பிரத்யக் ஆத்மாவானது வரையறுக்கப்படாதது என்று எல்லோருடைய அனுபவமாக இருப்பதினால் அது சத்திய சுவரூபமானது என்று நிரூபணமாகின்றது. -33-

மூன்று அவஸ்தைகளிலும் சாக்ஷியாக பிரத்யகாத்மாவை நிரூபித்தபின். அதில் சித்ரூபத்தினையும் நிரூபிக்க-

**यद्बाल्यादिष्ववस्थास्वहमहमिति भात्येकरूपो विभिन्ना**

**स्वध्यक्षंजागृदर्थानिव निजमहस यच्च सुप्तोऽपि वेत्ति ।**

**यच्चऽहङ्कारमोषेऽप्यपरिमुषितचित्सुप्तिसौख्यादिसाक्षी**

**द्रष्टुर्दृष्टेरलोपे श्रुतिरपि तदसौ प्रत्यगात्मा दृगात्मा ॥ ३४ ॥**

பிரத்யாத்மா அபரோக்ஷ ஞான சுவரூபமானது. எப்படி பால்யம் முதலிய வயது நிலைகளில் உண்டாகும் பலதரப்பட்ட அனுபவங்களையும் அனுபவிக்கும் அந்த அனுபவிப்பவரான நான் நான் என்கிற ஒரே ரூபமாக எல்லாவற்றிலும் இருப்பதால் (நான் அனுபவிக்கின்றேன் என்று) ஆத்மாவானது சித் சுவரூபம். ஆனால் இந்திரியத்தினாலேயே இந்த ஒவ்வொரு அனுபவமும் உணடாகவதால், ஆத்மாவினுடைய சித்ரூபத்தினால் அல்ல என்றாகும் என்றால். அது தவறு. எப்படி தூக்க நிலையில் எல்லா இந்திரிய கூட்டமும் அடங்கியிருக்கும் நிலையில் அங்கு உண்டாகும் கனவினை தானே ஒளிர்கின்ற ஆத்மாவினால் பிரத்யக்ஷமாகவே விழிப்பு நிலையில் காணப்படும் பொருட்களை போன்ற அறிவதால் இந்திரியங்களுக்கு அதீனமானது இல்லை என்பதும், இந்திரியங்களினால் அபரோக்ஷ அனுபவத்தினை உண்டாக்குதல் முடியாது என்பதாலும் ஆத்மாவே அபரோக்ஷமான சித் சுவரூபம் என்பது நிரூபணமாகின்றது. ஆனால் பால்ய முதலிய நிலைகளிலும், கனவிலும் அஹாங்காரம் உள்ளதால் அஹங்காரனத்தினாலேயே இந்த அனுபவம் உண்டாகின்றது என்றால், இல்லை, எதனால் அஹங்காரமானது லயமடைந்த நிலையிலும் அழிவற்றதாக அந்த ஆத்மாவே தூக்கத்தில் உண்டாகும் ஆனந்தத்தினையும் அங்குள்ள

அஞ்ஞானத்தினையும் சாக்ஷியாக காண்கின்றது என்பதால் ஆத்மா சித்சுவரூபமானது என்றாகின்றது. இதனால் மூன்று நிலைகளான விழிப்பு கனவு மற்றும் உறக்கம் ஆகியவற்றை காண்பதாக சித்சுவரூபமான சாக்ஷி ஆத்மாவாகவே இருக்கின்றது. அப்படி மூன்று நிலைகளையும் காண்கின்ற ஆத்மா அழிவற்றது என்பதற்கு நான் சுகமாக தூங்கினேன் என்ற சுகத்தினை அனுபவித்த ஞானமும் பிரமாணம் ஆகின்றதால், பிரத்யகாத்மா சித்சுவரூபமானது என்பது சந்தேகமில்லாமல் நிரூபணமாகின்றது. - 34 -

ஆத்மா எல்லோருக்கும் அதிக விருப்பமுள்ளதாக இருப்பதால் ஆனந்த ரூபமாவதும் என்பதை-

**यच्चऽऽत्मान्यद्ध्रुवाणं प्रियमिति तव तद्रोत्स्यतीति ब्रवीति**
**प्राज्ञेनैक्यं सुषुप्तौ निगदति च यदाऽऽनन्दसंविन्मयेन ।**
**इच्छा यत्स्वाऽनुकूले त्रिजगति विदिता स्वप्रतीपे जिहासा**
**यच्च स्यां सर्वदेति स्पृहयति तदसौ प्रत्यगात्मा सुखात्मा ॥ ३५ ॥**

**தத்தேதத் பிரேய** என்ற ஷ்ருதியும் ஆத்மாவானது புத்திரனை காட்டிலும், மற்ற எல்லாவற்றையும் காட்டிலும் மிகவும் விருப்பமுள்ளதாக இருப்பதால் ஆத்மாவே மிகவும் விரும்பதக்கது. ஆத்மாவை காட்டிலும் பிரியமுள்ளதாக மற்ற விஷயங்களும் இருப்பதனாலேயே அதனில் விருப்பம் உண்டாகி செயலில் ஈடுபடுவது காணப்படுகின்றது என்றால், ஆத்மாவை தவிர பிரியமான வஸ்துவானது அழிவடையும் தன்மையுடையதாகின்றதால் அழிவற்ற ஆத்மாவின் மேலுள்ள பிரியத்தினாலேயே மற்றவற்றில் பிரியம் உண்டாகின்றது என்று ஷ்ருதியும் கூறுவதாலும், நம் அனுபவமாக இருப்பதனாலும்.

தூக்க நிலையிலும் பரமானந்த, நிகரற்ற ஆனந்தமயமான ஈஸ்வரனுடன் எந்த பிரிவும் இன்றி கலந்திருப்பதால் எல்லா வகையான துன்பமும் இல்லாத நிலை உண்டாவதாலும் ஷ்ருதியும் இதனையே கூறுவதாலும், நான் எப்பொழுதும் இருத்தல் வேண்டும் என்று எல்லோரும் விரும்புவதாலும், சாதாரண ஜீவனும் தனக்கு பிரியமான விஷயத்தினை அடையவிரும்புவதும், பிரியமற்றதினை நீக்க

விரும்புவதும் காணப்படுகின்றது என்பதாலும், ஆத்மா சுகரூபமானது என்பது நிரூபணமாகின்றது. -35-

**इत्थं मीमांस्यमाने श्रुतिगुरुवचनैर्युक्तिभिश्चाऽनुभूत्या**
**शश्वजीवेशतत्वे निपुणमधिगते वस्तुतो लक्षणैक्ये ।**
**निष्प्रत्यूहं निजार्थं समधिगमयितुं तत्वमस्यादिवाक्या**
**न्याद्यन्ताऽवेक्षणाद्यैरधिगतहृदयान्यञ्जसैव क्षमन्ते ॥ ३६ ॥**

இப்படி கூறப்பட்ட முறையில் ஆச்சாரியார் மற்றும் ஷ்ருதி வாக்கியத்தினாலும், அதனை அனுசரித்த யுக்தியாலும், தன்னுடைய அனுபவத்தினை கொண்டும், இடைவிடாது விசாரம் செய்து பிரத்யகாத்மா (ஜீவன்) மற்றும் பிரம்மத்திற்கும் எந்த பிரிவும் இல்லை என்று சந்தேகமில்லாமல் நிச்சயமாகும் வரையில் , முன்பு கூறப்பட்ட ஆறு லிங்கங்களும் கொண்டு தத்துவமஸி முதலிய வாக்கியங்கள், உடனேயே தன்னுடைய உண்மை சுவரூபத்தை போதிக்க, அபரோக்ஷ ஞானத்தினை உண்டாக்க சக்தியுள்ளதாக இருக்கின்றது என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை. -36-

கூறப்பட்ட தத், த்வம் பதங்களின் பொருளை கொடுக்க கூடிய வாக்கியங்களில் அதன் பொருளை அறிய எதனை ஏற்று எதனை நிராகரித்து அதன் உபயோகம் மற்றும் உபயோகமற்ற தன்மைகளை தீர்மானிக்கும் முறையை **தத், த்வம்** மற்றும் **அசி** பதத்தின் பொருளை-

**प्राक्सर्गाद्यत्सदासीदसृजदथ च यत्तेज आदि प्रविष्टं**
**जीवस्तस्मिन्यदासिद्यदखिलमनृतं नामरूपं वितेने ।**
**तत्स्तच्छब्दवेद्यं त्वमिति निगदितह् श्वेतकेत्वाऽऽख्यजीवो**
**वाक्यार्थं नित्यसिद्धं गमयदसिपदं वर्तमानं ब्रवीति ॥ ३७ ॥**

சிருஷ்டிக்கு முன் சத்தே இருந்தது, பிறகு அது ஆகாயம் முதலிய

சிருஷ்டியை படைத்தது. பிறகு ஹிரண்யகர்ப்ப என்ற உடலை படைத்து அதில் பிரவேசித்து ஜீவன் என்றானது. இப்படி பொய்யான பெயர் முதலியவைகளாக இருக்கும் உலகத்தினை படைத்து அதனை விஸ்தரித்தது அப்படிப்பட்ட சத்வஸ்துவே தத் என்கிற சொல்லினால் குறிப்பிடப்பட்டது. த்வம் என்பதால் தேஹம் முதலிய கூடிய சுவேதகேது என்ற ஜீவனை மூன்று அவஸ்தைகளையும் சாக்ஷியாக காண்கின்ற பிரத்யகாத்மா குறிப்பிடப்படுகின்றது. அஸி பதமானது நிகழ் காலத்தை குறிக்கும் சொல்லாக இருப்பதால் த்வம் என்ற சொல்லினால் குறிக்கப்படட பொருளுடன் தத் பதத்துடன் சேர்கின்றதாக எப்பொழுதும் உள்ள பொருளை உணர்த்துகின்றது . -37-

பொருள் எடுக்க வேண்டிய முறையை கூறி, அதனை எப்படி தப்பாக புரிந்ததுகொள்ளகூடாது என்பதினை-

**बाधाऽध्यासविशेषणैक्यविषयं नाम्नोश्चतुर्धर्मा मतं**

**सामानाधिकरण्यमाद्यमिह न व्यर्थोद्यमा स्याच्छ्रुतिः ।**

**ध्यानाद्यश्रवणादनित्यफलतादोषाच्च नाऽध्यासधीः**

**तदात्म्यं न विरुद्धयोरिति बलाद्वस्त्वैक्यपक्षस्थितिः ॥ ३८ ॥**

பெயர் மற்றும் பொருள் பிரிவற்றதாகவே அன்வயம், (சம்பந்தம்) செய்யப்பட வேண்டும் என்பதால், வேறு வேறு பிரவிருத்தி நிமித்தமாக இருக்கும் போது ஒரு பொருளினை அந்த சொற்களானது குறிப்பதாக இருப்பதே **சாமானாதிகரண்யம்**. அது நான்கு வகையாக அறியப்படுகின்றது.

முன்பு உண்டாகும் மித்யா எண்ணத்தினை பின்பு உண்டாகும் சரியான அறிவினால் விளக்குவது **பாதம்** எனப்படும் முதல் வகை. பொய்யான ஒன்றில் மெய் என்கிற அறிவு இரண்டாம் வகையான **அத்யாசம்** எனப்படும். ஒரு சொல்லில் உண்டாகும் அறிவானது வேறு சொல்லுடன் அங்கு குறிப்பிடாத பொருளை விளக்குவததின் மூலம் தன்னுடைய **விசேஷத்தினை** குறிக்கின்றது மூன்றாவது வகை. பதங்கள் தங்களில் உள்ள விரோதமான பொருளினை விளக்குவதால் தன்னுடைய லக்ஷியத்தினை குறிக்கின்றதோ அது **விஷயம்**

என்கிற நாலாவது வகையை சேரும்.

இங்கு குறிப்பிட்ட நான்கு வகைகளிலும் முதல் வகையான பாதம் மூலமாக சாமானதிகரண்யம் தத்துவமஸி முதலிய வாக்கியத்தில் இருத்தல் முடியாது. அப்படியானால் மோக்ஷத்தினை உபதேசிக்கும் ஷ்ருதியானது புருஷார்த்தமில்லாத ஒரு சொல்லை குறிப்பதாக ஆகும். ஜீவனை பாதித்து பிரம்மத்தையும், பிரம்மத்தினை பாதித்து ஜீவனையும் நிரூபிப்பது என்பதால் என்க.

இரண்டாவது வகையான அத்யாஸத்தினாலும் இயலாது. **மனோ பிரம்மேத்யுபாஸீத, ஆதித்யோ பிரம்மேத்யுபாஸீத** முதலிய வாக்கியத்தினைப்போல் உபாசனையுனால் தியானம் முதலியவை விதிக்கப்படுவதால், அப்படி தியானம் முதலியவை ஏற்றால் இங்கும் கேட்கப்படும் பொருளினை விடுத்து, இல்லாத பொருளினை ஏற்க்கும் நிலைமை உண்டாகும். மேலும் அநித்தியமான பலனை தருவதாக தத்துவமஸி முதலிய வாக்கியங்களும் ஆகும்.

மூன்றாவதான விசேஷமும் ஏற்க்கமுடியாது காரணம், தத் என்பதில் அசம்சாரியும், த்வம் என்பதால் சம்சாரியும் குறிக்கப்படுவதால் விரோதமான இரு பொருட்களை குறிக்கும் ஒன்றில் தாதாத்ம்யம் உண்டாக முடியாது.

இதனால் மற்ற மூன்றும் நிராகரிக்கப்பட்டதால், மீதமுள்ள நான்காம் பக்ஷமே ஏற்கப்படுவதாகின்றது. இரண்டற்ற ஏகரஸமான வஸ்துவினை மட்டும் நிரூபிப்பதாக உள்ள சாமானாதிகரண்யம் இங்கு நிச்சயிக்கப்படுகின்றது. -38-

அகண்ட ரஸமானது மஹாவாக்கியத்தின் தாத்பர்யம் என்று கூறினாலும், அது எப்படி என்ற சந்தேகம் உண்டாகும். லக்ஷணையால் என்று ஏற்றாலும், **ஜஹத் லக்ஷணையா, அஜஹத் லக்ஷணையா** இல்லை **ஜஹதஜஹத் லக்ஷணையா** (விட்ட, விடாத, விட்டும்விடாத) என்று மீண்டும் கேள்வி இதில் ஜஹதஜஹத் லக்ஷணை ஏற்கபடும் இது தத் பதத்தினையா, த்வம் பதத்தினையா இல்லை இரண்டையுமா என்பதினை -

अभिधेयमत्र पदयोरसङ्गतं न विरुद्धधर्मियुगमैक्यमेति यत्।
उपयोग मूलघटनाद्ययोगतो न परस्परार्थघटितेऽपि लक्षणा ॥ ३९ ॥

கூறப்பட்ட முறையில் தத் மற்றும் த்வம் பதத்தின் அன்வயமானது தத் என்கிற எல்லாவற்றிற்கும் கர்த்தாவான பிரம்மத்திற்கும், த்வம் என்பதால் கூறப்பட்ட ஜீவனுக்கும் முறையாகாது. எப்படி, எதனால் என்றால் ஜீவன் ஈஸ்வரனில் எப்பொழுதும் இல்லாதவனாகவும், ஈஸ்வரன் ஜீவனில் எப்பொழுதும் இல்லாதவனாகவும் இருப்பதினால் அப்படிப்பட்ட சம்பந்தமில்லாத இருவஸ்து எப்பொழுதும் பிரிவற்ற தன்மையை அடைவதில்லை. முன்பு கூறப்பட்டது போல **சர்வஞ்ஞத்வம் கிஞ்ஞித்வம்** முதலிய விரோதமான தர்மங்களையுடையதால் நேரடியாகவோ, அல்லது பரம்பரையாகவோ புருஷார்த்தமான மோக்ஷத்தினை கொடுப்பது என்கிற உபயோகத்திற்குள்ள உபகிரமம் முதலிய லிங்கங்கள் அனுகூலமாக இல்லாததால். இங்கு இரண்டு பதங்களுக்கும் தங்கள் தங்கள் பொருளை குறிக்கும் சொல்லாக இருப்பதால். ஒரு பதம் மற்றொரு பதத்தினுடன் கூடியதாக பொருள் கொடுப்பது முடியாது என்பதால் அஜஹத் லக்ஷணை இயலாது. -39-

அஜஹத் லக்ஷணையால் முடியாவிட்டால் ஜஹத் லக்ஷணையால் ஏதாவது ஒரு பதத்தினாலேயோ அல்லது இரண்டினோடும் ஆகட்டும் என்றால் -

न च गाङ्गतीरमिव वाच्यसङ्गि वा प्रथितं तृतीयमिह योग्यमन्वये ।
पदयोर्नचैकतर भगलक्षणाऽध्यवसानलिङ्गमुपपद्यतेऽपि वा ॥ ४० ॥

ஜஹத் லக்ஷணையால் கூறப்படும் கங்கையில் குதிரை என்ற இடத்தில் இரண்டு சொற்களின் பொருளையும் விட்டு மூன்றாவதான கரையினை நாம் ஏற்பது போல இங்கு தத் மற்றும் த்வம் இரண்டின் பொருளினை விடுத்து மூன்றாவது ஒன்றினை கிரகிக்கலாம் என்றால் அது சரியல்ல. மூன்றாவது பிரசித்தம் இல்லையென்பதால்.

சரி, சொற்பொருளினை விட்டு பாகத்தயாக லக்ஷணையினை ஏற்பதற்கும்

இங்கு எந்தவித லிங்கமும் இல்லாததால் மட்டுமல்லாது அது இயலாததினாலும். தத் பதத்தினை மட்டும் ஏற்றால் சைதன்யம் விடப்பட்டதால் ஜகத்தானது அசேதனத்திலிருந்து உண்டானதாகும். இதனால் ஜட அம்சத்தினைவிட்டால், சுத்தமான அது உபாதியினால் தூஷிக்கப்பட்ட ஜீவனுடன் ஒன்றாவது இயலாது போகும். சைதன்ய அம்சத்தில் மட்டும் அபேதமான அன்வயம் (சம்பந்தம்) உண்டாகும் என்றும் கூற முடியாது. பதத்தின் ஒரு பாகத்தில் மட்டும் ஒரு பதமானது அன்வயம் ஆவது இயலாது என்பதால் என்க. -40-

இதனால் **முக்த திவசமோ பவேத்** முதலிய வாக்கியத்தால் முக்தி நிலையில் பிரம்மத்தினை போன்ற ஒரு நிலை உண்டாகும் என்பதால் தத் பதமானது அங்கு முக்கியமற்றது. இதனால் பிரம்மத்திற்கு நீ இருக்கின்றாய் என்று மஹாவாக்கயித்தின் பொருளை ஏற்றால் புருஷார்த்தம் உண்டாகும் என்றால் அதனை நிராகரிக்க-

**नतु मानसिद्धमपरं परोपमं निजरूपमस्य नच भाविनोऽस्तिता।**
**श्रुतहानिरश्रुतगतिश्च नोचितेत्युचिता द्वयोरपि हि भागलक्षणा॥ ४१॥**

ஜீவனானவன் ஜகத் காரணமான ஈஷ்வரனைபோல பிரம்மத்திலிருந்து வேறானதாக எந்த ஒரு ஷ்ருதியும் நிரூபிக்கப்படாததால் பிரமாணம் இல்லை கூறப்பட்ட அன்வய முறை. **நேஹ நாநாஸ்தி** என்று கூறுவது மட்டுமல்லாமல் **ஸ மிருத்யோ மிருத்யும் ஆப்னோதி ய நாநேவ பஷ்யதி** என்பது முதலிய பல வாக்கயிங்களாலும் அது நிராகரிக்கப்பட்டதால்.

சரி, முக்தி காலத்தில் அப்படி இரண்டற்ற நிலை உண்டாவதாக என்று கூறுதல் முறையல்ல. உபதேச காலத்தில் அந்த நிலையில்லாததால் அஸி என்று கூறப்படுவது முறையாகாது போகும்.

அதுமட்டுமல்லாமல் கூறப்பட்ட முக்கிய பொருளினை விடுத்து , முக்கியமற்ற பொருளை கற்பனை செய்வது என்ற நிலை உண்டாகும். இதுபோல செய்வது பிரமாணமற்றது என்றும் கூறப்பட்டுள்ளது. அப்படி கற்பனை செய்வதினை ஏற்றாலும் மூன்றாவது நிலை த்வம் பதத்தோடு அன்வயம்

ஆவதில்லாமல் போவதாலும். அதனுடைய முக்கிய பொருளுடன் பிரிவற்ற நிலையை அடைவது முடியாது என்றும் ஆகும். இதனால் பாகதியாக லக்ஷணையால் அன்வயம் செய்ய முடியாது என்றாகின்றது. பாதசாமான்யாதிகரண்யத்தினாலும் சாம்சாரிக ரூபத்தில் மித்யாதன்மை உண்டாகும். இதனால் இரண்டு பதத்திலும் உள்ள பொருளில் பாகதியாகம் செய்யும் லக்ஷணையே சரியானது என்றாகின்றது. அதுவே ஏற்கப்படுகின்றது. அதாவது இரண்டு பதத்திலும் உள்ள விரோதமான அம்சத்தினை விடுவதாலும், விரோதமற்ற அம்சத்தினை ஏற்பதினாலும் ஜஹதஜஹத் லக்ஷணை எனப்படும் பாகத்தியாக லக்ஷணையே சரியாகும். -41-

விலக்கப்படும் அம்சத்தினையும், ஏற்கப்படும் அம்சத்தினையும் இரண்டு பொருளினாலும் காண்பித்து விளக்க-

**अपहाय धर्मनिचयं विरोधिनं तनुबुद्धिसाक्षि सदनन्तचिद्घनम् ।**
**उपलक्ष्य सोऽयमिति वाक्यवत्ततो घटयेदखण्डविषये पदद्वयम् ॥ ४२ ॥**

அபேதம் மற்றும் தாத்பர்ய விரோதமான, காரண-காரிய உபாதிகளினை இரண்டு பதங்களிலிருந்தும் முன்பு கூறப்பட்ட முறையில் மித்யை என்று நிச்சயித்து நீக்கி, மேலும் ஸ்தூல உபாதிகளை நீக்கி, மிகவும் சூக்குமமான புத்தியில் தூக்கம் மற்றும் அஞ்ஞானத்தினை சாக்ஷிக்கும் நித்தியமான அபரோக்ஷமான சித்தை த்வம் பதத்தினாலும், ஜகத் முழுவதையும் நீக்கி அது அடங்கும் ஆனந்த ஏகரஸத்தினை தத் பதத்தினாலும் லக்ஷணையால் நிச்சயித்து பிறகு, ஸோயம் தேவதத்த முதலிய வாக்கயித்தில் விரோதமான தேச காலத்தினை விடுத்து அது குறிக்கும் ஒரு மனிதனை அவனே இவன் முதலிய இரண்டு வாக்கியத்தால் குறிக்கும் ஒரே தேவதத்தன் போல பிரிவற்ற இரண்டற்ற ஆனந்த போதமான ஆத்மாவில் அது , நீ என்கிற இரண்டு வார்த்தைகளையும் ஒன்றாக்கி அறிதல் வேண்டும். இப்படிப்பட்ட முறையில் மஹாவாக்கியத்தின் பொருளை உணர்வதால் மட்டுமே அஞ்ஞானமானது நீக்கவல்லது. அஞ்ஞானத்தினை நீக்கி அகண்ட ஆத்ம ஏகரஸபோதத்தை உண்டு செய்கின்றது. -42-

ஆனால், இரு பதங்களும் ஒரே பொருளை குறிப்பதால் ஒரு பதம்

உபயோகமற்றதாக போகும் என்பதால் ஒரு சொல் வாக்கியமாகாது என்பதால் அதனை புரியவைக்க மற்றொன்று என்று ஏற்றால் அது ஏற்புடையதாகாததாகும். காரணம் அஸி என்ற பதம் மட்டுமே அந்த செயலை செய்ய தகுதியுடையதாக இருப்பதால், என்பதோடு மட்டுமல்லாமல் ஆறு லிங்கங்கள் கொண்டு தாத்பர்யம் கொண்டு நிர்ணயிக்கும்போது ஒரே சொல்லான போதிலும் அது சுத்தமான பிரம்மத்தினையே குறிப்பதாகும் என்றால், இரண்டு சொற்களின் அவசியத்தினை, பிரயோஜனத்தினை விளக்க –

**परोक्षाऽनवाप्तत्वबुद्धिं परस्मिन्नपूर्णत्व दुःखित्व मोहे प्रतीचि ।**
**निहन्तुं निजाऽलौकिकं चाऽऽत्मतत्त्वं पदे वक्तुमन्योऽन्यतः साऽभिलाषे ॥ ४३ ॥**

பிரம்மமானது பிரத்யக்ஷம் ஆகும் தன்மையில்லாததால் அது அடையப்படுவது இயலாது என்று சாஸ்த்திரத்தினை கேட்பவருக்கு பிராந்தி ஞானமானது உண்டாகின்றது. அதுமட்டுமல்லாமல் பிரத்யக் ஆத்மாவிலும் பூர்ணமல்லாத தன்மை வரையறுக்கப்பட்டது என்றும், பிறப்பிறப்பு என்ற துன்பத்தினை அடைவது என்றும், அஞ்ஞானமானது தோன்றுகின்றது. இதுபோன்ற தவறான பிரமையை சிறிதும் மீதியில்லாமல் நீக்கவும், இது என்ற எல்லாவற்றினையும் நீக்குங்கால் நீக்கமற நிறைந்திருக்கும் நம்முடைய இயல்பானதாகவே இருப்பதான ஆத்மாவினை சந்தேகமில்லாமல் நேரடியாக போதிக்க தத், த்வம் ஆகிய இருபதங்களும் அவசியமாகின்றது. ஒன்று மற்றொன்றை அபேக்ஷிக்காது தத்துவத்தினை விளக்க இயலாது என்பதால்.

த்வம் பதம் இல்லாமல் தத் மட்டும் கொண்டு வாக்கியமானது உண்டாக்கினால் பிரம்மம் இருக்கின்றது என்று மட்டுமே போதிக்க முடியும் அது சத்யம் ஞானம் அனந்தம் பிரம்ம ஆகிய வாக்கியங்களினால் நிரூபிக்கப்பட்டுவிட்டதால் மகாவாக்கியமானது உபயோகமற்றதாகும் நிலையுண்டாகின்றது.

சரி, இதனால் தத் பதமில்லாமல் த்வம் மட்டும் உபயோகப்படுத்தப்பட்டால் நீ இருக்கின்றாய் என்பதாக மட்டும் ஜீவனின் இருத்தல் மட்டும் நிரூபணமாகின்றது. அதன் வரையற்ற ஆனந்தம் முதலியவைகள் இல்லை,

இதனால் சம்சாரம் என்கிற பிரமையானது நீங்குவது இயலாது போகின்றது.

இதனால் எதரிப்பார்பானது நீங்க இந்த இருபதங்களும் உபயோகபடுத்தபடவேண்டியதாக உள்ளது. -43-

பிரிவற்ற வஸ்துவினை குறிக்க இருபதமும் அவசியம் என்று கூறப்பட்டது. பிரிவற்றது பொருளிலா அல்லது வாக்கியத்தின் பிரிவற்ற தன்மையிலா என்றால் இந்த இரண்டு சந்தேகத்தினையும் நீக்க -

**असंसर्गिसत्यार्थता स्यात्पदानामनन्यार्थतावाऽप्यखण्डार्थताऽत्र ।**
**प्रसिद्धा ह्यसौ चन्द्रमात्रप्रबोधात् प्रकृष्टप्रकाशः शशीत्यादिवाक्ये ॥ ४४ ॥**

அகண்டமும் அதன் அர்த்தமும் என்பதின் தன்மையான அகண்டார்த்ததா என்பது எந்த சம்பந்தமுமில்லா நிராகரிக்கப்பட முடியாத வஸ்து ஸ்வரூபம் சத்யம் என்பது பிரம்ம ஞானத்தினை வேறொன்றாலும் நிராகரிக்கப்படமுடியாது என்பது குறிப்பிடப்பட்டது. வேறு ஒரு வஸ்துவுடன் சேராது இருக்கும் வஸ்துவும் அகண்டம் என்பதால் ஏற்றிப்பார்க்கப்பட்ட சிப்பியில் காணப்படும் வெள்ளியில் அகண்டதன்மை உள்ளது என்று எற்றால் அதுவும் தவறில்லை. வேறொன்றுடன் சேராத வஸ்துவே சூன்யமற்றதாக உள்ளது. பிரசித்தமானதில்லை என்றால், அப்படிப்பட்ட அகண்டத்தன்மை பிரகிருஷ்ட பிரகாச சந்திர என்கிற சந்திரனின் ஸ்வரூபத்தினை விளக்கும் வாக்கியத்தில் அது பிரசித்தமே. ஆனால், பிரகிருஷ்டமான பிரகாசம் என்பது கூடியதே சந்திரன் என்றே சந்திரனின் ஸ்வரூபம் குறிப்பிடப்பட்டது என்றால், சந்திரன் அறிய விரும்பியவருக்கு அந்த வாக்கியமானது சந்திரனை மட்டுமே குறிப்பதால் அகண்டதன்மையானது சாப்தபிரமாவினை தவிர வேறு பிரமாணத்தினாலும் அறியப்படமுடியாது என்றும் லக்ஷணம் கூறலாம்.

பிரகிருஷ்ட பிரகாஷ சந்திர என்பது போல அவனே இந்த தேவதத்தன், பானை ஆகயாம் மஹாகாயம் முதலியவற்றிலும் அகண்டத்தன்மை பிரசித்தம் என்றறிய வேண்டும். -44-

பிரகிருஷ்ட பிரகாஷ சந்திர என்கிற வாக்கயித்தில் சாத்தியம், சாதனை வேறுவேறாக இருக்கின்றது என்கிற தோஷம் உண்டாகும் என்றால் அதனை நிராகரித்து வாக்கியபொருள் எடுக்கும் முறையை விளக்க -

**प्रकर्षप्रकाशत्वचन्द्रत्वयोगव्यवच्छेदभेदादयो नैव पृष्टाः।**

**न वा शाब्दधीरस्त्यजिज्ञासितेऽर्थे ततो वाक्यतश्चन्द्रमात्रप्रबोदः॥ ४५॥**

வேறு பிரமாணத்தினால் அறியப்படட விஷயத்தினை, உதாரணத்தில், சந்திரன் என்பது உண்டு என்றறிந்து அதனை அறிய வானத்தில் உள்ள நட்சத்திர கூட்டத்தின் இடையில் எது சந்திரன் என்கிற சந்தேகம் எழும்போது வேறொருவர் மிகவும் பிரகாசமாகவுள்ளது நிலவு என்று சந்தேகத்தினை தெளிவிக்கின்றார் என்று அறியவேண்டும் அப்பொழுது சந்தேகமுள்ளவர், மிகவும் என்பதின் பொருளும் பிரகாசமாக உள்ளது என்கிற தன்மையுடையதும் சந்திரதன்மையுடையதுமான குணங்களை அது கூடிய குணியில் சம்பந்தப்படுத்தியோ அல்லது ஒவ்வொரு குணத்தையும் அது இல்லாததிலிருந்து விளக்கியோ சந்திரனை பிரித்தறிவது போல.

சந்திரன் என்கிற சொல்லின் சக்தியினால் அதன் பொருளானது தீர்மாணிக்கப்படுங்கால் அது எது என்கிற கேள்விக்கே இடமில்லாது போகும். அறியாத நிலையிலேயே கேள்வியானது கேட்கப்படுகின்றது என்ற நிலையுள்ளதால், கேள்வி ஞானத்தினால் அபரோக்ஷமாக அறிவு உண்டானாலும், அது எது என்கிற கேள்விக்கு சுட்டிகாட்டுவதின் மூலமே நிச்சயம் உண்டாகும் என்பதால் மற்றவற்றினை அந்த சந்திரனிலிருந்து பிரித்தறிய ஆவல் இல்லாததால் வாக்கயிமானது இப்படி உபயோகப்படுத்த அவசியமில்லாமல் போகின்றது.

ஆனால் சந்திரனின் சுவரூபமோ பிரத்யக்ஷமாக அறியப்பட்டிருப்பதால் இந்த கேள்வி அவசியமற்றதாக போகும் என்றால், இதில் உண்மை இருக்கிறது என்ற போதிலும் இதுவே சந்திரன் என்கிற நிச்சயமான அறிவு உண்டாகாததால் கேள்வியானது தோன்ற வாய்ப்புள்ளது.

பிரத்யக்ஷ பிரமாணத்தினை போல ஷாப்த பிரமாணத்தினாலும்

எதிர்பார்ப்பு இல்லாத பொருளில் அறிவு உண்டாவதில் எந்த தோஷமும் இல்லாததால் அப்படி ஏற்க்கலாம் என்றால் அது கூடாது காரணம், ஷப்தத்தினால் நாம் அறிய ஆசைப்படும் விஷயத்தினை போதிப்பதே சுவபாவமாக இருப்பதாக காணப்படுவதால்.

ஒரு பொய்யானது பிரமையானதாக அறிவை உண்டாக்கும்போது, அது பாதிக்கப்பட்டு பிரமாணமற்றதாக ஆகும்போது அதற்கு லக்ஷணையால் வேறு பொருள் ஏற்கப்படுகின்றது என்பதே வேதாந்த சித்தாந்தம். இதனால் பிரகிருஷ்ட பிரகாஷத்தினையுடையது சந்திரன் என்கிற வாக்கியமானது சந்திரனின் சுவரூபத்தை விளக்குவதாகவே இருக்கின்றது. என்று முடிவாகின்றது. இதனால் சாத்ய சாதன வைகல்ய (வேறுவேறாக இருக்கின்றது) தோஷம் உண்டாகின்றதில்லை என்பது நிரூபணமாகின்றது. -45-

மஹாவாக்கியத்தில் அகண்டத்தன்மை நிரூபித்தபின், நான்கு வேதத்திலும் உள்ள மஹாவாக்கியத்தின் தாத்பர்யத்தினை காண்பிக்க முதலில் ரிக்வேதத்தின் **பிரஞ்ஞானம் பிரம்ம** என்பதில்

**यः प्राग्विसृज्य भुवनं तनुमाविवेश यः पञ्चभूत सुर मानुष तिर्यगाऽऽत्मा।**

**येनाऽवलोकयति वक्त्यभिमन्यते च प्रज्ञानमात्र विभवोऽहमसौ पराऽऽत्मा॥ ४६॥**

எந்த பரமாத்மாவானவர் சிருஷ்டியின் போது இந்த உலகத்தினை அதிலுள்ள பலவகை விசேஷம் கூடியதாக சிருஷ்டித்து கர்மஞானம் கூடியதான இந்த புருஷனையும் பிரம்மபதத்தின் பொருளான காரண உபாதி சைதன்யமே பிரஞ்ஞான பதத்தின் காரிய உபாதியில் பிரவேசித்து அகண்டமான ஒரே ரஸமான இரு பதத்தின் வாச்சியார்த்தமும் காண்பிக்க வேண்டி, அந்த பரமாத்மாவே தன்னில் நிலைபெற்றிருக்கும் ஐந்து பூதத்தினையும் கொண்டு தேவ, மனுஷ்ய, மிருகம் மற்றும் சிருஷ்டியின் ஆத்மாவானது **ஏஷ பிரம்ம ஏஷ இந்திர** முதலிய வாக்கயித்தால் எந்தவித வரையறையுமற்ற பரமாத்மாவே பிரத்யக் ஆத்மாவும் இருக்கின்றது என்று பிரம்ம பதத்தின் லக்ஷியார்த்தம் விளக்கப்பட்டது. இந்த ஆத்மாவே கண்கள் முதலிய இந்திரியத்தினால் எல்லா விஷயத்தினையும் பிரத்யக்ஷம் செய்கின்றது என்பதால் விஷயத்தினை பிரகாசிப்பது ஆத்மாவே

என்பது தெளிவாகின்றது. இதன் இருத்தல் மாத்திரத்தினாலேயே எல்லாம் நடக்கின்றது என்று அந்த பிரகாசம் செய்யும் விருத்தியின் நிமித்ததன்மை ஆத்மாவில் தெளிவாகின்றது.

அந்த ஆத்மா என்று வேறுபடுத்தி கூறியதால் கர்ம மற்றும ஞான இந்திரியங்களிலிருந்து வேறான. எல்லாமும் எதில் இருக்கின்றதோ அப்படிப்பட்ட அந்த பிரஞ்ஞான பதத்தின் லக்ஷியார்த்தம் கூறப்பட்டது. அப்படிப்பட்ட அழிவற்ற பரமானந்த சுவரூபமான எல்லாவற்றினையும் நிர்வகிக்கின்றதனால் ஐஸ்வரியம் உள்ளது என்பதால் **பிரஞ்ஞானம் பிரம்ம** என்கிற மஹாவாக்கியமானது அகண்ட ஏகரஸமான வஸ்துவினையே குறிக்கின்றது என்பது **கோ அயமாத்மா** என்பதினால் விளக்கப்பட்ட அஹங்கார சாக்ஷியான பிரத்யகாத்மாவே. **ஆத்மா வா இதம்** என்பதால் குறிப்பிடப்பட்ட வரையில்லாத பிரம்மமே ஆகும் என்பது நிரூபணமாகின்றது. -46-

**அஹம் பிரம்மாஸ்மி** என்கிற யஜுர்வேத கான்வ மற்றும் மாத்யமிக சாகையின் பிருகதாரண்ய உபநிஷத்தில் வரும் மஹாவாக்கயித்தினை விவரிக்க -

**यद्याकृतं जगदभूत्तमसाऽऽनखाग्राद्यच्च प्रविष्टतनु कृत्स्नमकृत्स्नमासीत् ।**
**प्रेयस्तदेव परमं परमार्थतोऽहं ब्रह्मास्मि तद्विदितवद्धि तदेव सर्वम् ॥ ४७ ॥**

இந்த பிரம்மமானது பிரளயகாலத்தில் அவ்யாகிருதமாக . பெயர் மற்றும் உருவம் இல்லாததாக ஜகத்தின் விதைப்போல இரண்டற்றதாக இருந்தது. ஒவ்வொரு ஜீவனின் கர்மத்தின் பலனினால் அதற்கேற்ப பெயர் மற்றும் உருவமுடைய ஜகத் உண்டானது. இதுவே ஜகத்தின் ஜன்ம காரணமான பிரம்மம் என்னும் சொல்லினால் குறிப்பிடப்பட்டது.

இந்த பிரம்மமே நான்கு வகை சரீரத்தினையும் சிருஷ்டித்து. வரையற்றதாக ஆனந்த ரூபமாக இருந்தபோதிலும் . அதனில் வரைவுற்ற துன்பரூபமாக உள்ளதுபோல் ஆனது. இப்படி ஜீவத்தன்மை அடைந்த பிரம்மமே அஹம்பதத்தின் வாச்சியார்த்தம் ஆகும். இதனையே **ஸ ஏஷ இஹ பிரவிஷ்ட** என்ற ஷ்ருதி வாக்கயிமும் விளக்குகின்றது.

ஆனால், இப்படி பிரம்மமானது விகாரத்தினை அடைந்தது என்றால் பிரம்மமானது அநித்யதன்மையுடையதாக வேண்டும். அதன் விகாரமற்ற என்கிற நிலையும் இல்லாது போகும் என்றால், **ஆவரணம்** மற்றும் **விக்ஷேபம்** என்று சக்திகளுடைய அஞ்ஞானத்தினாலேயே பிரம்மத்தில் ஜகத் மற்றும் ஜீவத்தன்மையானது கற்பனை செய்யப்படுகின்றது என்பதால் எந்தவித தோஷமும் இல்லை. மூல அஞ்ஞானத்தினால் உடலை அடைந்த ஆத்மாவினை, உபாதிகள் இல்லாத அதனை ஒருவரும் பாதிப்பதில்லை. இது எதனால் என்றால் அது உடலினால் வரையறுக்கப்பட்டதாக இருந்தாலும் வரையறைகளையே ஆத்மா என்று எண்ணுவதால், இதனாலேயே பசி தாகம் முதலியவற்றையும் ஆத்மாவுடையது என்று எண்ணுகின்றான். இப்படி ஜீவத்தன்மையை அடைந்தது போல ஜகத்தன்மையும் அடைந்து வரையறுக்கப்பட்டதாக இருக்கின்றது. மேற்கொண்டு ஷ்ருதியும் இதனாலேயே வரையறுக்கப்பட்ட பிராணன் முதலியவற்றினை ஆத்மா அல்ல என்று நிராகரித்து. எதனால் எல்லாவற்றின் ஞானமும் உண்டாகும் ஆத்மாவே அறியப்படவேண்டியது என்பது மட்டுமல்லாமல் பூரணத்தன்மையும் அடையப்படுகின்றது என்று உதாரணத்தோடு விளக்குகின்றது. அது எப்படியென்றால், இந்த பலவாக தோன்றும் எல்லாம் அஞ்ஞானத்தின் காரணமாக உண்டானதால் ஞானத்தினால் மட்டுமே நிராகரணம் அடைகின்றது. ஆனால் துன்பமுள்ளதாகவே எல்லோருடைய அனுபவமாக இருப்பதால் இந்த பிரத்யகாத்மாவில் எப்படி ஆசையுண்டாகும் என்றால், மேலே குறிப்பிட்டபடி பரமாத்மாவிலிருந்து பிரத்யகாத்மா இரண்டற்றதாக இருப்பதால், அது பரமானந்த சுவரூபமாகவே இருப்பதால், ஆத்மாவினில் மற்ற வஸ்துக்களினை காட்டிலும் அதிகமான ஆசையுண்டாகின்றது. இதனால் அஹம் என்பதால் ஆத்மாவே குறிப்பிடப்பட்டது என்பது தெளிவாகின்றது. அஹம் என்பது பிரம்மம் என்கிற பொருளில் நிறைவை அடைவதினை காண்பித்து, பிரம்மம் என்ற சொல்லும் அஹம் என்ற பொருளில் நிறைவடைவதினை குறித்த சந்தேகம் உண்டாகும் நிலையில் அதனை நீக்க, மேலும் பரமார்த்தத்தில் எல்லாமும் நிராகரித்து விளக்கப்பட்ட நிலையில் பிரம்மம் தத்துவமும் பிரத்யகாத்மாவாகவே இருப்பதால் இரண்டிற்கும் பிரிவற்றதன்மை விளங்குகின்றது.

பிரம்மமே தன்னை சாக்ஷாத்கரித்ததுபோல , சம்சாரத்தினை கடந்தது

போலாகி பூர்ணமாகவே இருக்கின்றது. சம்சாரம் என்று வேறெதுவும் இல்லை என்பது ஷ்ருதியின் தாத்பர்யமாக இருப்பதால். அது உபாசனையினால் அடையப்படுவது என்று ஏற்கமுடியாததாகின்றது. அப்படியானால் பிரம்மமானது அநித்யதன்மை அடைந்ததாக ஆகின்றதால். தன்னை சம்சாரியாக எண்ணி, பிரம்மத்தினை அடைய அதிகாரி தான் என்று என்னும் ஒருவர்தான் பிரம்மமாகவே ஆகவேண்டும் என்று ஆசைப்பட்டு விசாரித்தறிந்தால் பிரம்மமாகவே ஆகின்றார். ஆசைப்படாதவர் பிரம்மாக ஆவதில்லை -47-

தைத்திரிய ஷ்ருதியிலும் கூறப்பட்ட பிரத்யகாத்மா மற்றும் பிரம்மத்தின் பிரிவற்ற தன்மையே நிரூபிக்கப்பட்டது என்பதினை -

**यश्चाऽयमत्र पुरुषे प्रथते गुहान्तर्यश्चाऽप्रमेयसुखभूः सवितुश्च बिम्बे ।**
**एकः स इत्यभिदधुः स्फुटमैक्यमेके तद्वेदनाच्च विलयं जगतश्च तत्र ॥ ४८ ॥**

**ஸ யஸ்சாயம் புருஷே** என்கிற மஹாவாக்கியத்தில் கூறப்பட்ட முதல் யத் என்கிற சொல்லினால் இந்த ஞானத்திற்கு அதிகாரியான புருஷனே, பஞ்சகோசத்தினில் அடையப்பட்டதாக இருக்கும் பிரத்யகாத்மாகவாக அறியப்படுபவரான சாக்ஷியாக தானே பிரகாசிக்கும் பிரத்யகாத்மாவே குறிப்பிடப்பட்டது. இரண்டாவது யத் என்ற சொல்லினால் **சோ அகாமயத** என்பது முதலிய வாக்கியத்தினால் ஜகத் காரணமாக நிரூபிக்கப்பட்ட வரையறுக்கப்படாத ஆனந்த ரஸமான , எல்லாவகை ஆனந்தத்தையும் விட மேன்மையான ஆனந்தம் உள்ளதாக, ஜகத்தை நிர்வகிக்கும் பிரம்மமே குறிப்பிடப்பட்டது என்பது நிரூபணமாகின்றது.

இந்த இரண்டு யத் சொற்களினாலும் பிரத்யக் மற்றும் பிரம்மதில் எந்த வேறுபாடும் இல்லை என்பதினையே ஸ ஏக என்பதால் குறிப்பிடப்பட்டது ஞானத்தின் பலனை விளக்கும் இடத்திலும் இதுவே கூறப்பட்டுள்ளது. இப்படி கூறப்படட முறையில் எவர் அந்த ஆத்மாவினை ஒன்றாக அறிகின்றாரோ அவர் அன்னமயம் முதலிய எல்லாமும் அந்த பிரத்யகாத்மாவினிலேயே உத்பத்தி, ஸ்திதி மற்றும் லயம் அடைவதாலும் இதனால் அதனைத்தவிர வேறெதுவும் உண்மையில்லை, மித்யாவே என்பதால் அந்த அளவிற்கடங்காத பிரம்மத்தினை

அடைகின்றார். பயமற்ற நிலையையும் அடைகின்றார் என்று கூறப்பட்டுள்ளதால். இரண்டற்ற நிலை நிரூபிக்கப்பட்டது. -48-

சாந்தோக்ய உபநிஷத்தில் **தத்வமஸி** என்கிற மஹாவாக்கியம் ஒன்பது முறை இந்த பிரிவற்ற நிலையையே பலவழியாக உபதேசிக்கின்றது. அதனை நிரூபிக்க-

**आसीत्सदेव हि भवाननृतं विधाय तेजोमुखं तदभिमत्य बभूव जीवः।**
**देहान्तशुङ्गमवधूय विलोकय स्वं सद्ब्रह्म तत्त्वमसि बोधसुखाऽद्वितीयम्॥ ४९॥**

**ஸதேவ சௌம்ய** என்பது முதல் **ஸதாயதான சத்ப்ரதிஷ்டா** என்பது வரையுள்ள முதல் உபதேசம் விளக்கப்படுகின்றது. உற்பத்திக்கு முன்பதாக உபாதிகளற்ற நிலையில் அந்த சத்தே இரண்டற்றதாக இருந்தது. அதிலிருந்து பெயர் மற்றும் உருவமான இந்த சிருஷ்டியானது தோன்றியது இது பொய் தோற்றம். காரியம் மற்றும் காரணத்தின் சேர்க்கையை ஒப்புக்கொண்டு ஏற்றிப்பார்த்தல் என்கிற தோஷத்தினால் ஜீவனானது மித்யாவான சிருஷ்டியினால் உண்டான ஜீவத்தன்மையும் மித்யையே என்பதால் தூக்கத்தில் இந்த சிருஷ்டி லயமடையும் போது தன்னுடைய உண்மை சுவரூபத்தினை உணருகின்றான். இப்படி தவறாக அடையப்பட்ட ஜீவத்தன்மையானது முழுமையாக நீங்க என்ன வழியென்றால். காரியத்தினை அதனதன் காரணத்தில் லயம் செய்யும் விசாரத்தினால் அன்னமானது நீரிலும். அந்த நீரானதினை நெருப்பிலும். அந்த நெருப்பினை சத்திலும் லயம் செய்து சிருஷ்டியினை மித்யாவாக நிராகரித்து. உண்மையான பிரத்யாகாத்மாவினை பார்ப்பதினால். இப்படி பார்ப்பதற்கு தத்வமஸி என்கிற வாக்கியமே வழியாக இருக்கின்றது. நீ அந்த இரண்டற்ற சத்தாகவே இருக்கின்றாய் என்று -49-

**தத்வமஸி** யின் இரண்டாவது உபதேசத்தினை -

**सम्पद्य यत्रमधुनीव रसाः सुषुप्तौ सौख्यैकरस्यमधिगम्य जना न विद्युः।**

**यत्प्रच्युताः पुनरमी बहुदुःखभाजः सद्ब्रह्म तत्त्वमसि नाऽसि कदापि दुःखी ॥ ५० ॥**

எப்படி தேனீயானது பல மலர்களில் இருந்து எடுத்த மகரந்தத்தினை தேனாக ஆக்கி, ஒரே சுவையுள்ளதாக அதனை உண்டாக்குகின்றதோ, அப்படி ஜீவனும் தூக்கத்தில் ஆனந்த ஏகரஸமாகவே இருந்தாலும் அவித்யா மூடலினால் அதனை அறிவதில்லை. இப்படி அறியாததனால், அறியாமையிலுள்ள காரணத்தினால் அந்த பரமானந்தத்தினை அடையாமல் பலவகையான உடல்களை எடுத்து அதில் உண்டாகும் பல வகையான இன்ப துன்பங்களை, பிறப்பிறப்புகளை அனுபவிக்கின்றது. அந்த அறியாமையானது பல கோடி பிறவிகளாலும் அழியாது மேலும் மேலும் திடமாகவே ஆகும். இதனை அழிக்க ஞானத்தினாலேயே மட்டுமே முடியும் என்பதால், அதனால் பரமானந்த ஏகரஸமான சத் பிரம்மமே நீ என்றறிந்து, துன்பம் முதலியவை அறியாமையால் உண்டானது என்று நிச்சயித்து அந்த அறியாமையை நீக்கியபின் எப்பொழுதும் நீ நித்திய சுக சுவரூபமாய், துன்பமற்றவனாய் ஆவாய் என்றறிவாயக என்று கூறுகின்றது. -50-

**தத்துவமஸி** யின் மூன்றாவது உபதேசத்தினை -

**अब्धिर्यथा जलधरैरपनीय नीतो नद्यादिभावमुदधित्वमतिं जहौ स्वाम् ।**
**एवं भवानुपधिभिः खलु विस्मृतः स्वं सद्ब्रह्म तत्त्वमसि संस्मर पूर्णभावम् ॥ ५१ ॥**

எப்படி கடலானது எப்பொழுதும் பூர்ணமானதாகவே இருந்தபோதிலும் , சூரியனால் குடிக்கப்பட்டு மேத்தன்மையை அடைந்து பிறவிகளின் கர்மபலனாக மழையாக பொழிந்து அந்த நீரும் நதிகளை அடைந்து மீண்டும் அது கடலையே அடைவது போல, சிலகாலம் அது நதி என்றே வியவகாரம் செய்யப்பட்டாலும் மீண்டும் கடல் என்று கூறப்படுதல் ஆகின்றது. இதுபோல, நீ சத்தாகவே எப்பொழுதும் இருந்தபோதிலும், அவித்தையின் காரணத்தினால் உன்னுடைய உண்மை சுவரூபத்தினை அறியாதவனாக ஆகின்றாய். இதனாலேயே ஷ்ருதியானது தத்வமஸி என்று உபதேசித்து, உன்னுடைய உண்மையான சுவரூபத்தினை நினைவூட்டுகின்றது. அதன்படி விசாரித்து உண்மை சுவரூபத்தை நினைவு கொள்வாயாக. ஆனால், நதியானது கடலில் கலந்தாலும் நதி என்ற நிலை

அழிவதில்லை, என்றால், இங்கு உதாரணம் தன்னுடைய உண்மை நிலையை நினைவூட்டுவதில் மட்டுமே உபயோகப்படுத்தப்பட்டது. எல்லா நிலைகளிலும் உதாரணமும், உதாகரிக்கப்பட்டதும் ஒன்றானால் அவை வெவ்வேறாக இருத்தல் முடியாது என்பதால் என்க. மேலும் நதியின் கடல் தன்மையை நினைவூட்டுவதே இங்கு தாத்பர்யம் என்பதாலும் -51-

**தத்துவமஸி** யின் நான்காவது உபதேசத்தினை -

**जीवप्रहीण तरु शोषविशेष लिङ्गादात्मा परोऽस्ति तनुतः सच नित्य एकः।**
**विद्धयैतदात्म्यमखिलं वितथद्वितीयं सद्ब्रह्म तत्त्वमसि मुञ्च विभेदमोहम्॥ ५२॥**

நீரில் உண்டாகும் நுரைகளானது நீரைகாட்டிலும் வேறானதாக இல்லாததுபோல, நான் என்கிற புத்தியுள்ள ஜீவனும் தேகம் முதலியவற்றிலிருந்து வோறனதாக இருத்தல் முடியாது என்றால் எப்படி ஒரு மரத்தின் ஒரு கிளையானது அழிந்துபோனாலும் மரம் அழிவதில்லையோ அப்படியே ஜீவனும். முழுமரமும் அழிந்த நிலையிலும் ஜீவனானது அழிவதில்லை என்கிற காரணத்தினாலும், இதனாலேயே ஒரு கிளையானது அழிந்து போகும்போதும், அதன் மேலுள்ள அபிமானம் அழிந்தபோதும் விருக்ஷ ஜீவனானது நாசமடைவதில்லை. இப்படியே ஜீவனும் தூக்கத்திலேயே அல்லது மரணத்திலேயோ தேகம் முதலியவற்றின் அபிமானம் அழிந்தாலும் அழிவதில்லை. காரணம் இந்த ஜீவனானது நித்யம், அழிவற்றது என்பதோடு பல உடல்கள் இருந்தாலும் ஜீவன் ஒன்றாக இருப்பதால், பல கிளைகளுக்கும் ஒரே மர ஜீவன் போல. இந்த ஜகத்தானது ஆத்மாவை தவிற வேறல்லாதாக இருப்பதனால், அதனால் அதனோடு வேறற்றதாக அறியவேண்டும். காரணம் இது மித்யை என்று ஷ்ருதிகளினாலும், யுக்திகளினாலும் நிரூபிக்கப்பட்டதால். இதனால் நான் வேறு என்று தேகத்தினால் உண்டாகும் பிரிவினையை ஒழித்து அந்த இரண்டற்ற பிரம்மமே நீ என்றறிவாயாக . -52-

**தத்துவமஸி** யின் ஐந்தாவது உபதேசத்தினை -

**धानान्तरुन्नततरोरुवटः पुनरेव यस्मिन्निदं जगदवस्थितमाविरासीत्।**

श्रद्धावता समधिगम्यमणोरणीयः सद्ब्रह्म तत्त्वमसि सत्यमसत्यमन्यत् ॥ ५३ ॥

சூக்ஷ்மமான பிரம்மத்திலிருந்து ஸ்தூலமான ஜகத் உண்டானதும், அந்த எல்லாவற்றிக்கும் காரணமான சூக்ஷ்மமான ஆத்மா எப்படி ஸ்தூலமாக ஆனது என்ற சந்தேகத்தினை நிராகரிக்க, எப்படி ஒரு ஆலமரத்தின் விதையானது மிகவும் சூக்ஷ்மமாக இருந்தபோதிலும் தேசகாலத்தின் அவஸ்தைகளால் விதை முளைத்து மிகவும் வலியதான ஒரு மரமாக ஆகின்றதோ, அப்படியே பரமாத்மாவும் மிகவும் சூக்ஷ்மமாக இருந்தபோதிலும் ஒவ்வொரு ஜீவனின் புண்ணிய பாவத்தினால் ஸ்தூலமான சிருஷ்டியை அடைகின்றது. சாஸ்திரவிரோதமான தர்க்கம் செய்பவருக்கு சாஸ்திர சம்பந்தமான விஷயம் அறியப்பட்டபோதிலும் அறியப்படாததாகின்றது என்பதால் சாஸ்திரத்தில் சிரத்தையுள்ளவராக இருக்கவேண்டும் என்று கூறி சிரத்தையின் முக்கியத்துவத்தை நிலைநிறுத்திய பின்னரும், பானை முதலிய விஷயங்களில் பிரமாணத்தினால் விஷயமானது நிரூபிக்கப்படுகின்றது சிரத்தையினால் அல்ல, என்று தர்க்கம் செய்யும் சிரத்தையில்லாத தார்க்கிகளுக்கு, ஸ்தூலமான விஷயத்தில் இந்த நியமம் ஏற்பட்டாலும் சூக்ஷ்மமான விஷயத்தில் அது முடியாது, சிரத்தையில்லாமல் அறிவுண்டாகாது. பரமாத்மாவோ மிகவும் சூக்ஷ்மமாக இருப்பதால் இரண்டற்ற அந்த சூக்ஷ்மமான பரமாத்மாவான பிரம்மம் நீயே ஆகின்றாய். அதனால் நீயே சத்தியம், உன்னை தவிர மற்றவையான இந்த ஜகத் மித்யையே ஆகும். -53-

**தத்துவமஸி** யின் ஆறாம் உபதேசத்தினை -

अप्सु प्रलीनमिव सैन्धवखिल्यमक्ष्णा पश्यन्ति यन्न करणैरपि हृद्विभातम् ।
विन्दन्ति यद्रसनयेव रसं गुरुक्त्या सद्ब्रह्म तत्त्वमसि दृश्यमिदं तु न त्वम् ॥ ५४ ॥

காரணமான பிரம்மம் காரியத்தில் பிரவேசித்தது என்றால் ஏன் அது அறியப்படுவதில்லை என்றால், நன்றாக பழக்கப்பட்ட கண்களாலும் நீரில் ஒன்றாகிய உப்பு கட்டியினை பார்ப்பது இயலாதோ அதுபோலவே ஹ்ருதயத்தில் எப்பொழுதும் தானே ஒளிர்கின்ற பிரம்மமானது, அஹங்காரத்தின் அத்யாசத்தினால், வெளிவிஷயங்களை பார்த்து பழக்கப்பட்ட இந்திரியங்களை

கொண்டு காணப்படுவது இயலாததாகின்றது. அப்படியென்றால் அது எப்பொழுதும் அடையப்பட்டதாகவே இருக்கும் என்ற சந்தேகத்தினை நீக்க, கண்களால் காணப்படாத உப்பு சுவையானது எப்படி நாவினால் அறியப்படுகின்றதோ அதுபோல ஆத்மாவும் குருவின் உபதேசத்தினால், அபரோக்ஷமாக அறியப்பட்ட ஷ்ருதியின் தாத்பர்யத்தினால் உடனேயே கழுத்தில் இருக்கும் மாலை அடையப்பட்டதாகின்றதோ அப்படியே ஆத்மாவும் அடையப்படுகின்றது. அப்படிப்பட்ட குருவின் கிருபையினால் பிரம்மமானது நீயே ஆகின்றாய். அப்படியே இந்த வேறுபாடாக காணப்படும் ஜகத்தும் நீயில்லை. நீ பிரம்மமாகவே இருக்கின்றாய். -54-

குருகிருபையே இந்த சம்சார பந்தமானது நீங்க வழி என்பதினையும். அதற்கு சிஷயனின் புத்தி கூர்மையும், அறியும் ஆவலும் உதவும் காரணமே என்பதினையும் கூற -

**<u>தத்வமஸி</u>** யின் ஏழாம் உபதேசத்தினை -

**चौरैरिवाऽसि पुरुषो विपिने विसृष्टो रागादिभिस्तनुषु नद्धविशुद्धदृष्टिः ।**
**पान्थैरिवैष गुरुणाऽसि विमुक्तबन्धः सद्ब्रह्म तत्त्वमसि याहि सुखं स्वधाम् ॥ ५५ ॥**

எப்படி காந்தார தேசத்தினன் நல்ல ஆபரணம் தரித்தவனாக தனது வீட்டில் தூங்கி கொண்டிருக்கும் போது அவனை திருடர்கள் கைகால்களை கட்டிசென்று பலவகை விஷ ஜந்துகள், கொடிய மிருகங்கள் நிறைந்த அடர்ந்த காட்டில் விட்டுவிட்டு சென்றபின். மிருகங்களின் மீது பயம் கொண்டவனாக, பசி, தாகம் உடையவனாக, வீடு திரும்ப வழியில்லாமல் அங்கேயே கிடக்கின்றானோ, அப்படியே நீயும் ராகம் முதலியவைகளால் பந்தப்பட்டவனாக, எல்லாவகை துன்பத்திற்கும் காரணமான இந்த அவித்தையால் உண்டான உடலில் பலகோடி பிறவிகளை அடைந்து விடுதலை அடையும் வழியறியாதவனாக துன்படுபவனாக இருக்கின்றாய். எப்படி அந்த காந்தார தேசத்தினை அவனுடைய அதிர்ஷ்ட வசத்தால் அங்கு வரும் வழிபோக்கர்களின் உதவியால் கட்டவிழ்க்கப்பட்டு அவர்கள் காட்டிய வழியிலேயே, மெதுவாக ஒவ்வொரு கிராமமாக கடந்து விசாரித்து தன்னுடைய தேசத்தினையும், வீட்டையும் அடைந்து

மீண்டும் இன்பமாக வாழ்கின்றானோ, அப்படியே நீயும் பல ஜன்மமாக அடையப்பட்ட புண்ணியத்தினால் அதன் பலத்தினை அனுபவிப்பதானதாக, குருவின் உபதேசத்தினால் ஞானத்தினை அடைந்து அஞ்ஞானம் முதலிய எல்லா பந்தத்திலிருந்து விடுதலை அடைந்தவனாக இருக்கின்றாய். இப்படி அந்த பிரம்மமாகவே நீ இருக்கும் காரணத்தினால், இதனை நன்றாக விசாரித்து ஒவ்வொரு அவஸ்தையிலும் இந்த பிராரப்தமானது முடியும் வரையில் இருந்து அதன் பின்னர் இரண்டற்ற ஆனந்த ரூபமான அந்த ஆத்ம ஜோதியை அடைவாயாக. -55-

**தத்துவஸி** யின் எட்டாவது உபதேசத்தினை -

**सम्पद्य यत्र करणादिलयक्रमेण मूढो मृतः पुनरुपैति जनिप्रबन्धम् ।**

**प्राज्ञस्तु वञ्चयति मृत्युमुदस्तमोहः सद्ब्रह्म तत्त्वमसि निस्तर मृत्युबन्धम् ॥ ५६ ॥**

இந்த ஆத்ம தத்துவத்தை இவ்வாறு அறியாதவனோ, இறந்த பின் முன்னர் செய்த வினையின் காரணமாக மீண்டும் பிறவியினை அடைந்து பந்தத்தினை அடைகின்றான். ஆனால் ஞானமடைந்தவருக்கு எப்படியென்றால் ஞானம் அடையும் வரையில் பிறப்பிறப்பு சக்கரத்தில் உழலுகின்றான். ஞானம் அடைந்தபின் அதே நேரத்தில் அவன் பிறப்பிறப்பு என்கிற சக்கரத்திலிருந்து விடுதலையாகின்றான். எப்படி வறுப்பட்ட விதையானது முளைவிடும் தன்மையை இழக்கின்றதோ அதுபோல, ஞானமடைந்தபின் பிராரப்தம் உள்ளவரையில் மட்டும் இந்த தேகத்தினை தாங்குபவராக இருக்கின்றார். எப்படி அந்த பிரம்மத்தினை அறிவதால் நீ பிறப்பிறப்பற்ற பிரம்மமே ஆகின்றாய். அதனால் இந்த பிறப்பிறப்பு என்ற சக்கரத்தினை உண்டாக்கும் காமம் முதலிய தோஷத்தினை உடனடியாக தாண்டுவாயாக . -56-

**தத்துவமஸி** யின் ஒன்பதாவது உபதேசத்தினை -

**स्तेनः प्रतप्तपरशोरिव दाहबन्धावाप्नोति मूढमतिरप्यनृताऽभिसंधः ।**

**सत्याभिसंधिरथ न व्यथते यदाऽत्मा सद्ब्रह्म तत्त्वमसि निर्णुद बन्धशङ्काम् ॥ ५७ ॥**

எப்படி திருடனை நிச்சயிப்பதற்கு நன்றாக கொதிக்கும் இரும்பினை கையில் பிடிக்க கொடுப்பார்களோ, அவன் திருடனல்ல என்றால் பிடிக்கும் போது அந்த திவ்யமான அக்னியானது அவனை சுடாமல், மேலும், திருடானாகும் பக்ஷத்தில் அவன் கையை சுடுவதினால் அவன் சிறையை அனுபவிக்கின்றானோ அப்படியே மூடனும் ஆத்ம தத்துவத்தினை அறியாததால், தான் இரண்டற்ற சச்சிதானந்த பிரம்மமே என்றறியாமல் இந்த பொய்யான உடலுடன் தன்னை சம்பந்தப்படுத்திக்கொண்டதால் பிறப்பிறப்பு என்னும் சிறைவாசத்தினை அடைகின்றான்.

அவன் உண்மையில் திருடனல்லாத நிலையில் , நான் திருடனல்ல, என்ற உண்மையை சார்ந்திருப்பதால் துன்பத்தினை அனுபவிப்பதில்லை. மேலும் இராஜாவிடமிருந்து பொன்பொருள்கள் பெற்று இன்புற்று இருக்கின்றான். அதுபோலவே பிரம்மமே இந்த ஆத்மா அதுவே நான் என்ற உண்மையை சார்ந்திருப்பதினால் மரணமும் அவரை தீண்டுவதில்லை, மரணம் என்பது மித்யையானதால். அப்படிப்பட்ட பிரம்மமம் நீயே ஆகின்றாய் என்பதினை நன்றாக விசாரித்து நிச்சயம் செய்து பிறப்பிறப்பினை அழிப்பாயாக -57-

அதிகாரிகளுக்கேற்ப சிரவண, மனன, நிதித்யாஸணங்களால் இங்கேயே உடனேயே பிரம்ம சாக்ஷாத்காரம் உண்டாவது என்பதினால் ஞானத்தினாலேயே மோக்ஷமானது உண்டாகும் என்பதினை -

पित्रा सुतः सुवचनैरिति बोधितः स्वं सत्याऽद्वितीय सुख बोधघनं विजज्ञौ ।
एतद्विमृश्य विदिताऽद्वयदक्परोऽपि स्वाराज्यसौख्यमधिगम्य भवेत्कृतार्थः ॥ ५८ ॥

இப்படி **ஆருனியினால்** அவர் மகனான **சுவேதகேதுவிற்கு** பல உதாரணங்கள் மூலம் இனிமையாக போதிக்கப்பட்ட தன்னுடைய உண்மை சுவரூபமான இரண்டற்ற சச்சிதானந்த சுவரூபம் அப்பொழுதே உள்ளங்கை நெல்லிகனிபோல அனுபவித்ததால், அடையவேண்டியது அடையப்பட்டதால், செய்யவேண்டியது செய்து முடித்தவராக ஜீவன் முக்தியை அடைந்து பிராரப்தத்தினை அனுபவித்து தீர்த்தபின் விதேக முக்தியை அடைந்து பிறப்பற்ற

இரண்டற்ற ஆனந்த நிலையை அடைகிறார். இப்படி கூறப்பட்ட விஷயங்களை சிரத்தையாக மீண்டும் மீண்டும் விசாரித்ததினால் இரண்டற்ற பிரத்யகாத்மாவினை சாக்ஷாத்கரித்தது போல. இன்றும் அதிகாரிகளான முமூக்ஷுக்கள் சுவேதகேதுவினை போல ஸ்வயம்பிரகாசமான தன்னுடைய ராஜ்யத்தினை அடைந்ததினால் பரம புருஷார்த்தத்தினை அடைந்ததினால் கிருத கிருத்தியராவர் என்பதில் சந்தேகமில்லை. -58-

இப்படியே அதர்வவேத மஹா வாக்கியமான **அயமாத்மா பிரம்ம** என்பதும் அகண்டார்த்தத்தினை உணர்துவதே என்பதினை -

**ऐक्यं प्रकल्प्य प्रणवेखिलस्य पादान्विभज्य प्रविलाप्य शिष्टः।**

**एकः स आत्मा जगदेऽयमात्मा ब्रमेति विस्पष्टमथर्ववाण्या। ५९॥**

அதர்வவேதத்தினை மாண்டூக்கிய உபநிஷத்திலும் **ஓம் இத்யேதத்** என்று துவங்கி, இந்த உலகத்திலுள்ள ஜட, சேதன வஸ்துகள் எல்லாம் ஓம் என்று நிரூபித்ததினால். அந்த ஓங்காரத்தினை பிரணவத்தில் ஏற்றிப்பார்த்து அதில் வைஷ்வாநரன், ஹிரண்யகர்பன், அவ்வியாகிருதன் ஆகிய மூன்று பாதமுடையதாக ஒவ்வொரு மாத்திரைக்கும் பிரித்து பாதி மாத்திரையுள்ள நான்காம் பாதத்தில் மற்றைய மூன்றும் லயமடைந்த நிலையில் **ஷாந்தம் சிவம் அத்வைதம் சதுர்த்தம் மன்யன்தே ஸ ஆத்மா ஸ விஞ்ஞேய** என்ற வாக்கயத்தால் கூறப்பட்ட பிரத்யகாத்மாவே **அயமாத்மா பிரம்ம** என்ற மஹா வாக்கியத்தினால் குறிப்பிடப்பட்டது. இதில் எந்த சந்தேகமும் இல்லை. -59-

இப்படி கூறப்பட்ட விஷயங்களை இடைவிடாது சிந்தித்தத்தினால் அதன் பலனாக முக்காலத்திலும் த்வைத ஜகத்தானது நிராகரிக்கப்பட்டு இரண்டற்ற ஆனந்தமானதினை அடைவதானதினை காண்பிக்க -

**नित्यं शुद्धं विबुद्धं विकृतिविरहितं नित्यमुक्तस्वभावं**

**सत्यं सूक्ष्मं निरस्तद्वयमनवयवं पूर्णमानन्दरूपम्।**

**प्रत्यग्ब्रह्माऽहमस्मि स्वरसदृशि रवौ ध्वान्तवद्विश्वमेत**

**न्नासीदास्ते भविष्यत्यपि मयि सुखसज्ज्योतिरात्मन्यसङ्गे ॥ ६० ॥**

உற்பத்தி, நாசமற்ற , தோஷமற்ற, சுவயம் பிரகாச ஞான சுவரூபம், ஆறுவிதமான மாற்றமில்லாத, முக்காலத்திலும் பந்தமென்பது இல்லாத, பாதிக்கப்படாத, ஸ்தூலம் முதலிய தாமங்களற்ற, அத்விதீயமான, தன்னிலும் வேறுபாடு இல்லாத எங்கும் நிறைந்த, உள்வெளியில்லாத, ஆனந்த சுவரூபம் அந்த காரணசரீரமான ஆத்மதத்துவம் எதுவோ அந்த பிரம்மம் நானே என்று எல்லா ஷ்ருதிகளாலும் கூறப்பட்ட தாத்பர்யம். அதனால் தன்னைபோன்று பிரகாசிக்கும் சூரியனின் வெளிச்சத்திற்கு சமமான திருஷ்யமான ஜகத்தானது ஆனந்த ஏகரஸமான சுபாவமுள்ள எந்த அவஸ்தையோடும் சம்பந்தமற்ற என்னில் முன்பும் இல்லை, இப்பொழுதும் இல்லை. இனிமேலும் இருப்பது இல்லை. அதனால் நானே புருஷார்த்த லாபம் என்றாகின்றது. -60-

ஆனால், இந்த மஹாவாக்கியத்தினால் அகண்டாகார விருத்தியானது உண்டாகின்றது என்று ஏற்று அதனால் மூல அஞ்ஞானமானது நாசமடைகின்றது. இதனால் அதன் காரியமான இந்த பிரபஞ்சமானது நிராகரிக்கப்டுகின்றது என்று ஏற்றாலும் இந்த பிரம்மாகாரமான விருத்தியானது நாசமடைவது இல்லை என்பதால் இரண்டற்ற அத்வைத நிலையானது உண்டாகாது போகும், இதனால் அதனை நிராகரிக்க வேறு விருத்தியை ஏற்றால், அதனை நீக்க வேரொன்று என்று இப்படி அநவஸ்ததோஷமானதும் உண்டாகும். இதனால் இரண்டற்ற நிலையானது உண்டாக முடியாது என்றால், அது சரியல்ல என்பதினை -

**इत्थं वाक्याद्विमृष्टादरणिविमथनाद्वह्निकीलेव सद्यः**

**संभूताऽखण्डवृत्तिस्तृणमिव निखिलद्वैतजालं समोहम् ।**

**दग्ध्वा निर्वाणसंज्ञे निरतिशयसुखे नित्यसिद्धाऽऽत्मतत्त्वे**

**सद्यो याति प्रणाशं कतरजैवोदस्यपङ्कं जलस्य ॥ ६१ ॥**

கூறப்பட்ட முறையில் நன்றாக விசாரித்து அதன் நிச்சயத்தால் உண்டாகும்

அகண்டாகார விருத்தியானது. அரணியை அடைவதால் உண்டாகும் நெருப்பினால் அங்கு வைக்கப்பட்ட பஞ்சினைபோல மூல அஞ்ஞானத்துடன் இந்த முழுமையாக த்வைதமான ஜகத்தும் நாசமாகின்றது. அது அந்த விருத்தியானது உண்டாகும். அதே நேரத்தில் ரோக்ஷமாகிய ஆத்மதத்துவத்தில் ஜகத் சாம்பலாகி விடுகின்றது. மற்றதினை எரித்து தானும் அழிந்து போகும் நெருப்பைபோல அடங்குகின்றது.

**கதக** விதையானது (தேத்தாங்கொட்டை) எப்படி அழுக்கான கலங்கிய நீரிலிடும்போது அந்த நீரில் உள்ள அழுக்கை நீக்கி தானும் அதனோடு கீழே அடங்கிவிடுகின்றோ அப்படியே அகண்டாகார விருத்தியும் -61-

எல்லா ஷ்ருதிகளின் தாத்பர்யமும் இதனை நிரூபிக்கவே என்பதாலும், இதனை அறிந்தால் புருஷார்த்ததினை அடைந்ததால் வேறெதுவும் அடையப்படவோ, அறியப்படவோ இல்லாததாலும் மீண்டும் பந்தமானது உண்டாகாது என்பதினை நிரூபிக்கவும், வாக்கியத்தின் உண்மையான பொருளை உணர்வதால் உண்டாகும் அபரோக்ஷ ஞானமே எல்லாவற்றிற்கும் மேன்மையானது என்பதினை -

**इतेषाऽनादि त्रितापज्वर विषमथभवव्याधिसम्यक् चिकित्सा**
**ह्येषा स्वाराज्यसम्पन्निरधिपरमानन्दसंदोहदोग्ध्री ।**
**भस्मीभूतं तथाऽस्यां प्रभवति न पुनः कर्मबीजं प्ररिढुं**
**सन्देहग्रन्थिभेदवपि च निगदितावेतदाऽऽसादनेन ॥ ६२ ॥**

கூறப்பட்ட அகண்டாகார அபரோக்ஷ விருத்தியே அநாதியான ஆத்யாத்மிகம், ஆதிதைவிகம் மற்றும் ஆதிபௌதிகம் ஆகிய மூன்றுவகை துன்பங்களையும், வாதம், பித்தம் மற்றும் கபத்தினால் உண்டாகும் ஜுரமும் போல, மிகவும் சிகிச்சையளிக்க கஷ்டமான சம்சார ரோகமானது இந்த மூல வேறினையே அழிக்கும் முறையான இதனால், தீர்மானமாகவும், திரும்பவும் உண்டாகததாகவுமுள்ள ஞானமானதும் அதன் பலனும் கூறப்பட்டது. தானே ராஜ்ஜியம் செய்கின்றார் என்றோ அல்லது சுவர்கத்தினை ஆளுகின்றார் என்கிற

தன்மை **சுவாராஜ்யம்**. இதுவே பாமரர்களின் சுவர்கமானதினைபோல விவேக ஞானத்தினால் குறைவற்ற இன்பமானது அடையப்பட்டதாகின்றது. மூன்று வகையான வரைகளும் இல்லாத, எல்லா வகை ஆனந்தத்தை காட்டிலும் மேலானதுமான வாக்கிற்கும் மனதிற்கும் எட்டாத பிரம்மானந்தத்தை அடைவிக்கின்றது. ஆனால் காட்டுதீயில் கருகிய புல்வகையானது மீண்டும் மழையினால் வளருவது போல பந்தமும் மீண்டும் வளரும் என்றால், அது தவறு. ஞானக்கினியால் பிராரப்தம் தவிர மற்ற எல்லா கர்மங்களும் அழிந்ததினால் ஆத்ம தத்துவத்தை குறித்த சந்தேகமும், மற்ற உலக, வேத விஷயத்தினை குறித்த சந்தேகமும் இந்த ஆத்ம சாக்ஷாத்காரத்தினால் நீங்குகின்றது. இதற்கு **பித்யந்தே ஹ்ருதய கிரந்தி** என்ற ஷ்ருதியே பிரமாணம். இதனால் பிறவி எடுத்ததின் பயன் விஷய ஞானத்தில் பசு போல் உழல்வது அல்ல, ஆத்ம ஞானத்தினை அடைவதே முக்கியம் என்று நிரூபணமாகின்றது. -62-

## अपवाद प्रकरणं सम्पूर्णम् ।

**- அபவாத பிரகரணம் முற்றிற்று -**

# अथ कैवल्य प्रकरणम्

## - கைவல்யபிரகரணம் -

चरणशृङ्गरहितं अपीतकुचाम्बादेवम्।
अरुणाचलेशं ध्यात्वा तृतीयं च करोम्यहम्॥

அடிமுடி இல்லா, உண்ணாமுலையம்மனின் மணாளனான சுவபிரகாசமான அருணாசல எம்பெருமானை தியானித்து, மனதில் இருத்தி மூன்றாவதான இந்த அத்யாயத்தினையும் நான் செய்கின்றேன்.

அத்யாரோப மற்றும் அபவாத முறைகளால் பிரம்மத்தினை ஜகத்திற்கு அப்பாற்பட்டது (ஜகத் என்று ஒன்றும் இல்லாததால்) என்று நிரூபித்த பின்னர், சப்த பிரமாணத்தினால் அபரோக்ஷமான ஞானமே உண்டாகும் என்பதினை நிரூபித்து, உத்தமாதிகாரிகளல்லாத மந்த மற்றும் மத்தியம அதிகாரிகளுக்கு யோகத்தில் கூறப்பட்ட சித்தவிருத்தி நிரோதமூலமாக ஞானம் அடையப்படும் என்பதும் ஜீவன்முக்தி, விதேகமுக்தி முதலியவைகளையும் விளக்க இந்த அத்யாயமானது துவங்குகின்றது. முதலில் சப்தத்தினால் அபரோக்ஷஞானம் உண்டாகும் என்பதினை நிரூபிக்க -

अपरोक्षवस्तुविषयेति शब्दजाप्यपरोक्षतां न विजहात्यखण्डधीः।
निपुणं निशम्य दशमस्त्वमित्यादो वचनं नहि स्वमुपलब्धुमिच्छति॥ १॥

சப்தத்தினால் பரோக்ஷஞானமே உண்டாகும், உலகத்தில் வேறுவகையாக காணப்படுவதில்லை என்பதாலும், சிரவனத்திற்கு பிறகு மனனம் மற்றும் நிதித்தியாசனம் வியர்தமாகும் என்பதாலும் என்றால், அது சரியல்ல, அகண்டார்த்த வாக்கியத்தினால் உண்டாகும் புத்தியானது அபரோக்ஷ வஸ்துவினுடைய விஷயமாக இருப்பதால் அதன் அபரோக்ஷதன்மையை அது விடுவதில்லை. இது லௌகீக விஷயத்திலும் தவறில்லை. பத்து மந்த புத்தியுள்ள சிஷ்யர்களில் தன்னை கணக்கிடாத அவர்களின் தலைவனை, பத்தாவதானவன் இறந்ததாக

கலங்கும் அவனிடம், நீயே பத்தாவதான நபர் என்று கூறும் ஒரு வழிப்போக்கரைபோல, அந்த வாக்கியத்தினை கேட்பதால் பத்தாவது நபரினை (அவனையே) எப்படி அறிகின்றானோ, அதனால் அவன் தன்னுடைய துன்பத்தை விடுகின்றானோ, அதுபோலவே மற்றவரும் அறிகின்றனர். இங்கு சப்தத்தினால் அபரோக்ஷஞானம் உண்டாவது பிரசித்தமே. ஆனால், இந்த ஞானம் பரோக்ஷமாகவே இருக்கட்டும் என்றால் இயலாது. காரணம், பத்தாவது நபர் நான் என்று அறிந்தபின், தன்னை அறிய முயற்சியானது, ஆசையானது உண்டாகாது என்பதால், பரோக்ஷம் என்று ஏற்பதனால் பத்தாமவரை அறியும் ஆசை விடுவதில்லை என்பதாலும். -1-

ஆனால் தன்னால் மட்டுமே அறியப்படுவதான தன்னுடைய இன்பம் துன்பம் முதலியவகைளால் பரோக்ஷமாக மற்றவதும் அறிவதுபோல ஆத்மாவும் என்று ஆகட்டும். இப்படி சில சமயத்தில் பரோக்ஷ ஞானத்தினை உண்டாக்கும் பிரமாணத்தினால் அபரோக்ஷ ஞானம் உண்டாக்குவது இயலாது என்றால், இது ஏற்கமுடியாது. அபரோக்ஷமான அனுபவத்தினை பரோக்ஷமாக அறிவது இயலாது என்பதினை-

**नच शब्दजन्यमतिमात्रतः स्वतोप्यपरोक्षवस्तु भजते परोक्षताम् ।**
**न खलु प्रदीपतरणिप्रकाशयोः प्रतिभासतोऽस्ति विषये पृथग्विधा ॥ २ ॥**

தானே எப்பொழுதும் ஒளிர்கின்ற ஆத்மாவானது சொல்லினால் உண்டாகும் புத்தியினாலேயே பரோக்ஷதன்மை அடைந்துவிடும் என்று கூறுவது முறையல்ல. புகையை கண்டு அங்கு நெருப்பினை அனுமானித்து அதில் பரோக்ஷஞான காணரத்தினை உண்டாக்கும் பராமர்ஷ ஞானத்தினாலும், அடுத்திருக்கும் விஷயத்தில் அபரோக்ஷ ஞானத்தினை உண்டாக்கும் திறன் தார்க்கிகர்களும் ஏற்பதே என்பதாலும், இன்பம் துன்பம் முதலியவை அடுத்தவருடையதாக இருக்கும் காரணத்தினால் மற்றவர் அதனை அறிவது முடியாது என்பதால் அதுவும் சொல்லினால் அறியப்படுவதாக இல்லை. தன்னுடைய சொந்த அனுபவ சமயத்திலோ இன்பம் துன்பம் முதலியவை பரோக்ஷமாக இருப்பதில்லை. வேறு சமயங்களில் பரோக்ஷமாக ஆவது என்பது தன்னால் உண்டாக்கப்பட்ட திரை விலகுவது என்பது மட்டுமே.

ஆனால் பிரமாணங்களில் மாறுபாட்டினால், உள்ள பொருளில் வேறுபாடு பரோக்ஷம் என்றும் அபரோக்ஷம் என்றும் உண்டாகிறது என்று கூறுதல் முடியாது . எப்படி, தீபத்தினாலும், சூரியனாலும் பிரகாசிக்கப்படும் விஷயமானது, பானை முதலியவை வேறு வேறாக இருப்பதில்லை. அதாவது தீபத்தினால் பிரகாசிக்கப்படும் பானை நீலமானது என்றும் சூரியனின் பிரகாசத்தில் அது சிகப்பு என்றும் வேறு வேறாக ஆவது கிடையாது. ஆனால், பரோக்ஷ மற்றும் அபரோக்ஷத்தினை தவிர வேறு முறையில் லௌகீகம் மற்றும் அலௌகீகமாக அனுபவிக்கப்படட்டும் என்றால் அதுவும் முடியாது.

அதன் பேதத்தின் காரணத்தினை கற்பனை செய்வது என்றதாவதால் மகரப்படாத சுகந்தமும் பரோக்ஷம் என்றாகும். -2-

ஆனால் பிரகாசிப்பதின் வேறுபாட்டால், பிரகாசிக்கப்படும் பொருளும் வேறுபடுவது காணப்படுகின்றதே. உதாரணத்திற்கு காலை சூரியனால் பிரகாசிக்கப்படும் ஆகாயமானது சிகப்பாகவும், நடுப்பகலில் அதுவே தெளிவாகவும் இருப்பது போல, அதுவுமில்லாமல் விசேஷமான தர்ஷணத்தில் பிரமை மற்றும் சந்தேகம் உண்டான பின், பிரத்யக்ஷத்தினால் அறியப்படுவது.. பிரத்யக்ஷத்தின் பிரபல தன்மையாலும் அனுமிதியானது தடைபடுவதாலும் அங்கு பரோக்ஷத்தன்மை உண்டாவதில்லை என்றால், கிரக்கிக்கபடாத வேறுபாட்டிற்கு எந்த பிரமாணமும் இல்லாததால், அதன் பிரகாசமும் நிச்சயமாக கூறப்படவேண்டும் என்பதாலும், அபரோக்ஷம் மட்டுமே சுபாவமான வஸ்துவில் ஆரோபமில்லாத வேறு பரோக்ஷத்தின் பிரகாசமானது ஏற்புடையதில்லை என்பதாலும், அப்படி ஆரோபிக்கப்பட்ட பரோக்ஷ விஷயத்தில் ஆத்மாவை அறியும் நிலை வாக்கியமானது பிரமாணமற்ற தன்மையை அடையும் என்பதினை-

**अपरोक्षवस्तुविषया परोक्षधीर्नच मानाभावमुपगन्तुमर्हति ।**
**स्वत एव शश्वदवभातनात्मनः कुशलोऽपि न स्वमपि गूहितुं क्षमः ॥ ३ ॥**

அபரோக்ஷமாக மட்டுமே உள்ள சுபாவமான வஸ்துவிஷயமாக

உள்ளதினை பரோக்ஷமான புத்தியால் அறியப்படுவது என்று கூறுவதில் எந்த பிரமாணமும் இல்லை. இது என்ற விஷயத்தில் அது என்ற பிரத்யயமானது உண்டாவதாக எந்த பிரமாணமான வியவகாரமும் இல்லாததால் ஒரே வஸ்துவில் பரோக்ஷமானதும் அபரோக்ஷமானதுமான விரோதமான தன்மைகள் இருத்தல் இயலாது. வஸ்துவில் இப்படிப்பட்ட விகல்பங்கள் இருத்தல் இயலாத காரணத்தினால் சைதன்யத்தில் அது அபரோக்ஷம் என்பது முக்கியம் எனவும், மற்ற இடங்களில் அதன் சம்பந்தம் முக்கியமற்றது எனவும் கூறப்படுகின்றது. மிகவும் சாமர்த்தியமும் புத்தி சக்தியும் உள்ளவராலும் வேறு எந்த உதவியும் இல்லாமல் எப்பொழுதும் தானே ஒளிர்கின்ற ஆத்மாவினை மூடிமறைத்தல் என்பது எத்தனை கடின முயற்சியாலும் இயலாது என்பதால் ஷ்ருதியானது நிராகரிக்கப்பட்ட விஷயத்தினை போதிக்கும் சாமர்த்தியம் இல்லாது போனாலும் சொல்லினால் அபரோக்ஷ ஞானமானது உண்டாகும் என்பது நிரூபணமாகின்றது. -3-

வாக்கியார்த்த ஞானத்தில் இந்திரியம் கருவியாக இல்லாததாலும், உண்டாகும் அபரோக்ஷ ஞானத்திலோ அங்ஙனம் உள்ளதால் எப்படி அது அபரோக்ஷமாக இயலும் என்றால்-

सुखदुःखरागयतनेष्वसंमतेऽस्तिमिरप्रसुप्तिविषयेष्वदर्शनात् ।
अपि हेतुरस्य विषयस्य योग्यस्य योग्यतेत्यपरोक्षता न करनैर्नियम्यते ॥ ४ ॥

ஞானம் மற்றும் விஷயங்களின் அபரோக்ஷத்திற்கு கரணங்களின் அவசியம் உண்டு என்கிற நியமம் இல்லை. அது கரணம் இருந்தாலே அபரோக்ஷம் . கரணம் இல்லாது போனால் அபரோக்ஷ ஞானத்தின் இன்மை என்று நேர், எதிர்மடை நியமம் இருந்தால் உண்டாக முடியும். அதுபோல இங்கு இல்லாததால் அதாவது எதிர்மடையான சம்பவம் இல்லாததால். மற்றவர்கள் ஏற்கும் ஆத்மாவின் விசேஷ குணங்களான சுகம், துக்கம், ராகம் முதலியவை வேதாந்திகளுக்கு இந்திரியத்தால் அறியப்படுவது என்று ஏற்பதில் விருப்பமில்லை. காரணம் மனதின் சம்பந்தத்தால் இவை அறியப்படும் என்று கூறுவதால் மனதும் வேதாந்தத்தில் இந்திரியமல்லாததால். **புத்தே சாக்ஷி மனஸஸ் சாக்ஷி** (புத்தியின் சாக்ஷி, மனதின் சாக்ஷி) முதலிய வாக்கியமும் இதனையே

கூறுவதாக உள்ளதாலும், இது இருட்டினை பிரத்யக்ஷம் செய்வதிலும் கனவில் காணும் விஷயங்களிலும் அபரோக்ஷமான அனுபவமானது எல்லோராலும் அறியப்பட்டதாகவே இருந்தாலும் கரணத்தால் அறியப்படுவது என்று காணப்படாததால். உண்டாகும் ஞான விஷயத்திலும் அதனை அறிவதில் யோக்கியத்தன்மை என்பதும் ஏற்க்கப்படுவதால், பாரமுள்ளது முதலியவை கண்களால் அறியப்படமுடியாததால், ஆனால் ரூபம் முதலியவையே அறியப்படுகின்றது. இப்படி யோக்கியதன்மையை ஏற்க்காவிட்டால் கண்களாலேயே சந்தனத்தின் நறுமணமானது அறியப்படகின்றது என்று ஏற்கவேண்டியதாகும் எனபதால் அபரோக்ஷத்தன்மையை இந்திரியமானது நியந்தரிக்கவில்லை என்பது நிச்சயமாகின்றது.

விஷயத்தினை அறிவதற்கு அதன் ஆவரணத்தின் நாசத்திற்கும் விஷயத்தோடு கூடிய சைதன்யத்துடன் பிரமாத்ரு சைதன்யத்தின் பிரிவற்ற தன்மையே காரணம் ஆகிறது. அங்கு இந்திரியங்களானது அந்தக்கரணமானது வெளியேற ஒரு வழியே ஆகும். அதல்லாமல் அபரோக்ஷதன்மைக்கு அல்ல. -4-

ஆனால் சாக்ஷியின் அம்சத்தில் ஆவரணத்தால் மூடாத நிலையில் தானே சித்தமானாலும் (இருத்தல்) பிரம்மத்தின் அம்சத்தில் நான் பிரம்மத்தினை அறிவேனில்லை என்று ஆவரணத்தால் மூடியதாக எல்லாருடைய அனுபவமாக உள்ளதாலும். முன்பு அங்ஙனமே நிரூபிக்கப்பட்டதாலும், மகாவாக்கியத்தின் பொருளானது போதமாவதற்கு ஆவரணம் செய்யப்படாத சித்தத்தின் விஷயமம் என்பது நிரூபிக்கப்படமுடியாததால், சொல்லினால் உண்டாகும் விருத்தியானது அந்த ஆவரணத்தினை விலக்க சாமர்த்தியமற்றதால் என்றால், அது சரியல்ல, சொல்லினால் உண்டாகும் விருத்தியும் அஞ்ஞானத்தை நீக்குவது என்பதற்க்கு ஷ்ருதியும் அனுபவமும் பிரமாணம் என்பதினை -

अपिचाऽऽवृतार्थविषयस्य परोक्षधीर्वचसा च भग्नमनुभूयते तमः ।
उपदेशमात्रमुपवर्ण्य तत्पुनः श्रुतिराह दर्शयति पारमित्यपि ॥ ५ ॥

பரோக்ஷபுத்தியானது அஞ்ஞானத்தால் **ஆவ்ருத்தம்**(மூடல்) செய்யப்பட்ட விஷயத்தினை தெரிவிப்பது என்பது அதன் லக்ஷணமான ஆவ்ருத்தார்தாகாரா

விருத்தி பரோக்ஷா என்பதால் தெரிகின்றது. ஆனால் மகாவாக்கியத்தால் உண்டாகும் புத்தியோ அப்படியல்ல. அஞ்ஞானமானது அழிவது நல்ல அதிகாரியான புருஷர் அனுபவிப்பதே இதில் எந்த சந்தேகமுமில்லை. ஷ்ருதியும் இதனையே கூறுகின்றது. சாந்தோக்கிய உபநிஷத்தில் **சனத்குமாரரான** குருவானவர் சிஷ்யனான **நாரதருக்கு யோ வை பூமா தத் சுகம்** முதலிய வாக்கியத்தின் முடிவில் இதனையே கூறியிருப்பதால் **தம் ஸ்கந்த இத்யாக்ஷதே** என்று அங்ஙனம் சாக்ஷாத்காரம் உண்டாகாத நிலையில் இத்யாசக்ஷதி என்று கூறியிருக்க வேண்டும். அகண்டாகார விருத்தியானது உதயமான நேரத்திலேயே ஆவரணமானது அழிகின்றதால் அபரோக்ஷஞானம் உண்டாவதில் எந்த பிரச்சனையும் இல்லை -5-

அதுபோலவே **ஆத்மா வாரே த்ரஷ்டவ்ய ஷ்ரோத்தவ்ய** என்றும் முக்கிய அதிகாரிகளுக்கு சாக்ஷாத்காரத்திற்க்காகவே ஷ்ரவணம் விதிக்கப்பட்டது. அதனாலேயே கிருதார்த்ம் அடைவது என்பதால் சொல்லினாலேயே அபரோக்ஷஞானம் உண்டாவது என்பதினை -

विदधाति यच्च परमात्मदृष्टये श्रवणं विमृष्टनिगमान्तगोचरम् ।
श्रुतिमात्रतीर्णतमसो यदब्रुवन् जनकोऽपि तारयसि पारमित्यपि ॥ ६ ॥

பிரகதாரண்யக உபநிஷதும் பிரம்ம சாக்ஷாத்காரணத்தினை உத்தேசித்து எந்த காரணத்தால் சிரவணம் முதலிய விசாரத்தினை தாத்பர்யமாக கொண்ட செயல்களை விதிக்கின்றதோ அதனாலும் அவை அபரோக்ஷ ஞானத்தினை உண்டாக்கும் என்பது நிரூபணமாகின்றது. ஆனால் **மந்தவ்யம், நிதித்தியாசிதவ்யம்** முதலியவையும் கூறப்பட்டதால் சிரவணமானது பரம்பரையாக பிரம்ம சாக்ஷாத்காரத்தினை கொடுக்கும் என்றால், இது இல்லை, பிரஷ்ண உபநிஷத்திலும் கூறப்பட்டபடி, அதில் சிஷயர்கள் **பிப்லாதர்** என்கிற குருவினை அடைந்து அவரால் ஆத்மதத்துவமானது உபதேசிக்கப்பட்டு அதனை கேட்டதாலேயே அவர்கள் அஞ்ஞானம் நீங்கபெற்றனர் என்பது, குருவே, நீங்களே எங்கள் தந்தையானவர், எவரால் நாங்கள் அவித்தையை கடந்தோமோ. இங்கும் உபதேசத்தினாலேயே ஆத்ம சாக்ஷாத்காரம் அடையப்பட்டதால், **தாரயஸி** என்று உபதேசித்த நேரத்திலேயே அவித்தை நீங்கி அடைய வேண்டியதை அடைந்தவர்களான

ஆனதினை கூறுகின்றனர். இதனாலும் சொல்லினால் அபரோக்ஷஞானம் உண்டாவது நிரூபணமாகின்றது. மனனம் முதலியவை மந்த மற்றும் மத்தியம அதிகாரிகளுக்கு என்று அறியவேண்டும். -6-

வெளி விஷயங்களை அறிவதற்கு காரணத்தினால் உண்டாக்கப்பட்ட விருத்தியானது அவசியமானாலும். பிரம்மத்தினை அறிவதற்கு மகாவாக்கியத்தால் உண்டாகும் விருத்தியினாலேயே அஞ்ஞான நிவிருத்தி உண்டாகின்றதால் அங்கு கரணத்தின் அவசியம் இல்லை என்பதினை -

**चैतन्यस्याऽऽपरोक्ष्यं स्वरसनिजदृशो मुख्यमन्याऽनपेक्षं**
**गौणं तद्गोचरेष्वावरणविरहिते तत्र तादात्म्यवत्सु ।**
**बाह्ये चैतन्ययोगं घटयितुमुचिता वृत्तिरक्षप्रसूता**
**वाक्योत्था मोहमात्रं विघटयति चितस्स्फूर्तिरन्याऽनपेक्षा ॥ ७ ॥**

தானே சாரமான (சுவரஸமான) தானே ஒளிர்கின்ற சைதன்யத்தில் அபரோக்ஷமே முக்கியம். எதனால் என்றால். அது வேறு எதனையும் எதிர்பார்க்காமல் இருப்பதால். அதாவது அந்த சைதன்யத்தினை விஷயமாக. அறிவபர். அறிவது. அறிபடுபொருள் என்பது முக்கியமற்றதாக உள்ளது. ஆவரணமில்லாத அந்த சாக்ஷியில் ஆவரணமற்றதால் அது சித் தாதாத்மியத்தின் அபேக்ஷை உள்ளதால் அந்த அத்யாசம் செய்யப்பட்ட தாதாத்மியத்தில். ஆனால் சித்தாதாத்மியமே. விஷயங்களின் அபரோக்ஷதன்மை என்றால் இந்த உலகமே அந்த சித்திலேயே அத்யஸ்தமாக இருப்பதால் எல்லாம் அபரோக்ஷ தன்மையை அடையும்.

ஆவரணத்தினால் அங்ஙனம் ஆவதிலலை என்றும் கூறமுடியாது. காரணம் அதிஷ்டானமும் அதில் அத்யஸ்தமாக உள்ளதிலும் ஆவரணம் உண்டு என்று ஏற்றால் அத்யஸ்தமானது சித்துடன் தாதாத்மியத்திலேயே இருத்தல் இயலாது என்பதால் அத்யாஸம் என்பது இல்லாது போகும் என்றால். கூறப்பட்டது உண்மையே என்றாலும் எல்லா விஷயங்களுக்கும் அதிஷ்டமான பிரம்மத்திலிருந்து விஷயங்கள் பிரிவற்றதாக உள்ளதால் அது

அபரோக்ஷதன்மையுடையதே ஆகும். இதனாலேயே, பிரம்மம் சர்வஞ்ஞமானது என்று கூறினோம். இதனால் மட்டுமே எல்லோரும் சர்வஞ்ஞர்கள் என்று ஏற்பது இயலாது. அறிபவர் என்கிற பிரமாத்ரு கூடிய சாக்ஷியில் ஔபாதிகமாக பிரிவு உள்ளதால் அதனோடு வெளிவிஷயங்களின் ஆவரணம் ஏற்க்கப்பட்டுள்ளது. இந்த ஆவரணத்தினை அழிக்கவே விருத்தியானது இந்திரியங்கள் வழியாக வெளியே செல்கின்றது. இதனால் வெளிவிஷயங்களில் பிரமாத்ரு சைதன்யத்தினுடன் சம்பந்தம் உண்டாதற்கு இந்திரியங்களால் உண்டாகும் விருத்தியானது அவசியமாகின்றது.

ஆனால் இப்படி ஆவரணத்தினை அழிக்க விருத்தியானது ஏற்க்கப்படும் நிலையில் எப்படி வாக்கியத்தினால் உண்டாகும் விருத்தியானதினால் மட்டுமே வரையறுக்கப்பட்டதால் சாக்ஷாத்காரம் உண்டாகும் என்றால், மகாவாக்கியத்தினால் உண்டாகும் அகண்டாகார விருத்தியானது அஞ்ஞானத்தினை முழுவதும் பாக்கியில்லாமல் அழிக்கின்றது அதிஷ்டானத்திலிருந்து நீக்குகின்றது. ஆவரணத்தால் மூடப்படாத சைதன்ய ஏகரஸமான சித்தானது பிரம்மமானது வேறு எதனுடைய உதவியுமில்லாது தானே ஒளிர்கின்றது என்பதால். இங்கு எந்த **விருத்திவியாப்தியும்** அவசியமில்லாது போகின்றது. விருத்தியானது வெளியே செல்வது அவசியமில்லாது போகின்றது என்று பொருள் . -7-

**विषयऽप्रबोधदलनाय संविदो विषयोपरागजननाय वा धियम् ।**
**विषयाऽऽकृतित्वमुपनेतुमिष्यते विषयाऽक्षयोगसरणिस्तनोर्बहिः ॥ ८ ॥**

வெளிவிஷயங்களில் அவைகளிலுள்ள அதிஷ்டானத்தினை மறைக்கும் தூலஅஞ்ஞானத்தினை அழிக்கவோ, பிரமாத்ரு சைதன்யத்திற்கு விஷயத்துடன் தாதாத்மியம் ஆவது அதனை அடையவோ, சாக்ஷியோடு கூடிய அந்தக்கரணம் விஷயங்களின், பானை முதலிய , ஆகாரத்தினை அடைவதற்கு, உடலிலிருந்து அந்தக்கரணம் வெளியேறுவதற்கு இந்திரியங்களையும், அதன் மூலம் அந்தந்த விஷயங்களின் சம்பந்தமும் அவசியமாகின்றது. -8-

ஆத்மாவானது இந்த ஜகத்துடன் எந்த சம்பந்தமும் அற்றது. அது (ஜகத் ) மித்யா என்பதால். அந்த ஏகரஸமான ஆத்மாவினை இப்படிபட்டது என்று

**சிம்ஹாவாலோகன** (சிங்கம் செல்லுகையில் திரும்பி நோக்குவது போல்) நியாயத்தினால் காண்பிக்க –

**यन्नेक्ष्यं चक्षुराद्यैः प्रतिविष्यममी येन संधुक्षितार्थाः**

**यद्वागादेः पदं न व्यवहरति मुहुर्येन वागादिवर्गः ।**

**येन प्राण प्रणीतस्तनुकरणमनोबुद्धयो येन चेद्धः**

**तच्छुद्धं स्वेन सिद्धं निरुभयमभयं बोधसत्सौख्यमात्मा ॥ ९ ॥**

ஆத்மாவினை ஞான இந்திரியங்களால் காணப்படுதல் இயலாது **யத்சக்ஷுஷா ந பஷ்யதி** முதலிய ஷ்ருதிகளும் இதனையே கூறுகின்றது. கண்கள் முதலியவைகளால் காணப்படுவது இயலாது என்றாலும் அதன் இருப்பினை நிரூபிக்க லிங்கம் இருக்கின்றது. இந்திரியங்களினால் பிரகாசிக்கப்படும் எல்லா விஷயங்களாலும் ஆத்ம சைதன்யமானது சம்பந்தப்பட்டு இருப்பதால். அதனால் உண்டாக்கப்படும் விருத்தி எனும் உபாதியின் அறிவினால் மட்டுமே அந்த ஆத்ம சைதன்யமானது சுட்டி காட்டப்படுவது இயலுகின்றது.

இந்த ஆத்ம சைதன்யமானது கர்மேந்திரியங்களாலும் விஷயமாக்கப்படமுடியாது.. அவைகளுக்கு பேசுதல் முதலியவை கர்மங்களாக இருப்பதால். ஆத்மாவானது அங்ஙனம் இல்லாததால். **யத் வாசா ந அப்யுதிதம்** முதலிய ஷ்ருதிகளும் இதனையே கூறுகின்றது. எப்படி காந்தமானதினை அடுத்து உள்ள இரும்பு துண்டானது அதனை நிமித்தமாக கொண்டு நகருதல் முதலிய வியவகாரத்தினை செய்கின்றதோ. அப்படியே கர்மேந்திரியங்களின் செயலும் உண்டாகின்றது.

இந்த ஆத்மாவினாலேயே பிராணனானது தன்னுடைய வியவகாரத்தினை செய்கின்றது. உடல். இந்திரியங்களும். மனது. புததியும் இதனால் பிரகாசிக்கப்பட்டதாகவே பிரகாசிக்கின்றது. **ஸர்வஸ்ய சாக்ஷி** முதலிய ஷ்ருதிகளும் இதனையே கூறுகின்றது. இப்படியானதான எதனோடும் சங்கம் இல்லாத ஆத்மாவானது தானே ஒளிர்கின்றது என்பது நிரூபணமாகின்றது. அதனால் இரண்டற்றதாக இருப்பதினால் பயத்திற்கான எந்த காரணமும் அற்றதாக உள்ளது.

**த்விதீயா வை பயம் பவதி** (இரண்டு இருந்தாலே பயம் உள்ளது) என்று கூறப்பட்டதால் அதனால் இதனை அறிவதாலேயே. இந்த சத். சித். ஆனந்த ஏகரஸமான ஆத்மாவினை அறிவதாலேயே அறியப்படவேண்டியவை அறியப்பட்டதாக ஆகின்றது. **தரதி ஷோகம் ஆத்மவித்** என்பது முதலான ஷ்ருதகிளும் இதனையே கூறுகின்றது. -9-

இந்த ஆத்ம தத்துவத்தினை அறியும் பொருட்டு விசாரமானது விளக்கமாக மேற்கொண்டபோதிலும். இதனால் பூர்வ புண்ணியத்தினை உடையவரும் பாவங்கள் அதிகம் இல்லாதவராகவும் உள்ள ராக மற்றும் த்வேஷத்தினை நீக்கிய அந்தப்கரணத்தை உடையவர்கள் ஆத்ம தத்துவத்தினை எளிதில் புரிந்து கொள்வதில் எந்த பிரச்சனையும் இல்லை. ஆனால் பல ஜென்மங்களில் செய்யப்பட்ட கர்மவினையினால் உண்டான தோஷங்களால் இந்த தத்துவத்தினை எளிதில் அறிந்து கொள்ள இயலாதவர்கள் மீண்டும் மீண்டும் சிரவணம் முதலிய கர்மங்களை செய்வதினால். அது அறியப்படுவதில் எந்த சந்தேகமுமில்லை. ஆனால் ராக மற்றும் த்வேஷத்தினால் தீண்டப்பட்டு மிகவும் திடமான த்வைத வாசனைகளால் நிரம்பிய சித்மானது ஆத்மவிசாரத்திலும். அப்படி விசாரிக்கப்பட்டு அடையப்படும் ஆத்ம தத்துவத்திலும் நிலைபாடு உண்டாவதில்லை. அப்படிப்பட்டவர்கள் யோகத்தினை கடைப்பிடிப்பதால் சித்தத்தினை **நிரோதித்து** (அடக்கி) அதனால் ஆத்ம தத்துவத்தினை அடையவேண்டும் என்பதால் யோகத்தினை அவசியம் செய்யவேண்டும் என்பதினை-

**इत्थं सम्बोधितस्याप्यनवहितमतेर्यस्य बोधो न वृत्तः**
**स स्याद्भूयोविचारव्यसनवशमनाः सत्सहायः स्वतश्च ।**
**अक्षान्विक्षेपशान्त्यै चपलमपि मनो लालनैर्वा हठाद्वा**
**रुध्वा ध्यायेदनन्तं परमसुखचिदात्मानमेकं विविक्ते ॥ १० ॥**

இதுவரை சாஸ்திரம். ஆசாரியர் கூறிய விஷயத்தினை நன்றாக கேட்டறிந்தும் திடமான **அசம்பாவனா** முதலிய தோஷத்தால் ஷ்ருதிய தாத்பரியத்தினை விசாரிக்கவோ அல்லது அதில் கூறப்பட்ட ஆத்மதத்துவத்தில்

நிச்சயம் உண்டாகாது போகும் போதோ, அதுபோல உள்ள அதிகாரிகளுக்கு ஆத்மபோதமானது அடையப்படாது இருப்பதினால் வெறுப்புக்கொண்டோ, இது என்னால் அடைய முடியாது என்று நிராசைக்கொண்டோ சிரவணத்தினை கைவிடுவது வேண்டாம். ஆனால் சிரவணம் முதலியவைகளையும், மற்றவர்கள் உதவி கொண்டு விசாரிப்பதினாலும், தானே விசாரணை செய்வதாலும் அந்த ஆத்ம தத்துவத்தினை, எப்படி பெண்கள் ஒரு பொருளை அது அடையும் வரை நிரந்தரமாக சிந்திப்பது காணப்படுகின்றதோ, அதுபோல முழு முயற்சிக்கொண்டு எதுவரை ஆத்மதத்துவத்தை அடையவில்லையோ அதுவரை இடைவிடாது தொடர்ந்து முயற்சி செய்து சாக்ஷாத்கரிக்கவேண்டும்.

இப்படி விசாரத்தினால் அசம்பாவனை நீங்கினாலும் விபரீத பாவனையானது திடமாக உள்ளவர்கள் அந்த விபரீத பாவனையையும் அதன் சம்ஸ்சாரத்தினையும் அழிப்பதற்கு, தனிமையான மனதிற்கு இதமான ஒரு இடத்தில் இருந்து கொண்டு ஞான மற்றும் கர்மேந்திரியங்களையும், மனதினையும் அதனதன் வெளிவிஷயங்களில் செல்லும் தன்மையிலிருந்து மாற்றி மூன்று வரைகளும் (காலம், தேசம் மற்றும் வஸ்து) இல்லாத ஞான ஏகரஸமான ஆத்மாவானது ஒன்று என்பதினை நிச்சயித்து அதனையே தடையில்லாமல் த்யானிக்கவேண்டும். இப்படி தன்னால் தன் முயற்சியால் மட்டும் மனதினை அடைக்க வல்லமை இல்லாதவர்கள் அதனை அடக்க யோகத்தினை அப்யாசிக்கவேண்டும், சித்தத்தினை வெளிவிஷயங்களில் செல்வதை தடுத்து, வைராக்கியத்தாலும், விஷயங்களில் தோஷங்களை காணுவதாலும், ஆத்மாவே நித்தியமாக இருப்பதை நிச்சயிப்பதாலும், அதனையே சிந்தித்தல் என்னும் உபாயத்தினாலோ அல்லது அஷ்டாங்கயோகம் என்னும் **ஹடயோக** உபாயத்தினாலோ சித்தத்தினை அடக்குதல் வேண்டும். -10-

ஹடயோக உபாயத்தினை சுருக்கமாக விளக்கி அதன்மூலம் சித்தத்தினை அடக்குவதற்கு -

**मुक्त्वा सङ्गं सहिष्णुः शुचिहितमितभुग्योगशास्त्रार्थदर्शी**

**पुण्ये निर्दोषदेशे यमनियमदृढः स्वासनस्थः प्रसन्नः।**

**प्राणायामक्रमेणाहृतचलमनः स्थूलसूक्ष्मे निरुध्य**

**ध्यायन्नैकात्म्यसौख्यस्थिरगलितमना मोहबन्धं छिनत्ति ॥ ११ ॥**

வெளி விஷயங்களை மட்டும் சிந்திக்கும் மற்றும் யோகப்பயாசத்தில் விருப்பமில்லாதவர்களிடமிருந்து விலகி, ராக மற்றும் த்வேஷத்திலிருந்து விலகி, திடமான உற்சாகத்தினால், குளிர், சூடு, மழை முதலியவைகளினால் உண்டாவதும், சாதனையினால் உண்டாவதுமான துன்பத்தினையும் சகித்து, சுத்தமானதும் எந்த தோஷங்களும் இல்லாததும், மிதமானதாகவும், ஆகாரத்தினையே கழித்து, யோக சாஸ்திரத்தினை சம்பிரதாயமாக படித்த குருவிடமிருந்து மட்டுமே முறையாக கேட்டறித்து அதனை அனுஷ்டிக்க, சாஸ்திரங்களில் கூறப்பட்ட புண்ணிய தேசத்தினை அடைந்து அங்கு தூய்மையான மனதிற்கு இதமான நதிக்கரை முதலிய இடங்களை அடையவேண்டும் **பதஞ்சலி** மகாமுனிவர் காண்பித்த, திடமாக இருந்து சந்தோஷமான சித்தம் உடையவராக, பசி, தாகம் போன்ற விஷயங்களால் தூண்டப்படுபவராக இல்லாமல், முறையாக **பிராணாயாமம்** பழகி, அதனால் அடக்கப்பட்ட மனதும் மீண்டும் வெளிவிஷயங்களில் செல்ல முற்படும் பொழுது அதனை **பிரத்யாஹாரத்தினால்** அடக்குதல் வேண்டும். அப்படி ஸ்தூலமான மற்றும் சூக்ஷ்மமான விஷயங்களிலும் மனதை அடக்கி, இப்படி **தாரணையில்** நின்ற பின் **தியானத்தினை** பழகுதல் வேண்டும். த்யானம் என்பது சித்தத்தினை த்யேய விஷயத்தில் நிருத்தி வைப்பது. இப்படி நிருத்தி வைப்பதால் **சம்பிரஞ்ஞாத சமாதி** மற்றும் **அசம்பிரஞ்ஞாத சமாதி** உண்டாகும். அதனால் , இரண்டற்ற ஆத்ம தத்துவத்தில் நிலையாக ஏகாகிரமாக மனதானது நிலைத்து இருக்கும். இதுவே **மனோநாசம்** எனப்படும். இதனால் பந்தநாசம் ஏற்படுகின்றது. அதனால் நிதித்தியாசத்தினால் பக்குவத்தை அடைந்த மனதே சாக்ஷாத்காரம் அடைய காரணமாகின்றது. அதனால் சமாதியை அடையும் முயற்சியை இடைவிடாது செய்யவேண்டும். அது பரமபுருஷார்தத்திற்கு காரணமாக உள்ளதால் ஆத்மதத்துவத்தினை அடைய ஆசையுள்ளவர்கள் எப்பொழுதும் இடைவிடாது சமாதி பழக வேண்டும். -11-

உத்தம அதிகாரிகளுக்கு சிரவண மாத்திரத்தினாலேயே ஆத்ம சாக்ஷாத்காரம் உண்டாகின்றது. மத்தியம அதிகாரிகளுக்கு சிரவணத்துடன் மனனம் முதலியவைகளும் யோக அப்யாசத்தினால் உண்டாகின்றது. இப்படி சாக்ஷாத்காரம்

அடைந்தவர்கள் சமாதியிலேயே இருந்தோ அல்லது லோகசங்கிரகத்திற்காக அவரவர், வர்ண, ஆசிரம கர்மங்களை செய்தோ பிராரப்தத்தினை தீர்பவர்களாக இருக்கலாம். எப்படி இருந்தபோதிலும் அவர்களுக்கு பந்தம் எனபது மீண்டும் உண்டாவதில்லை எனபதினை -

निरवधिसुख भूमाऽनन्त संवित्परात्मन्यनुभवमधिरूढे वाक्यतो वा ।
भवतु दृढसमाधिः लोकसङ्ग्राहको वा भजतु विषयजातं भूयोऽपिबन्धम् ॥ १२ ॥

தேசம், காலம் மற்றும் வஸ்து ஆகியவற்றால் வரையறுக்கப்படாத பூர்ண ஞானரூபமான மேன்மையான ஆத்மாவானது மகாவாக்கயித்தின் தாத்பர்யத்தினை விசாரித்ததினாலோ அல்லது யோக அப்யாசத்தினாலோ சாக்ஷாத்காரம் அடைந்த பின்னர் சரீரமானது வீழும் வரையில் சமாதியிலோ அல்லது லோகத்தினை அனுகிரஹிக்கும் பொருட்டு சதாசாரத்தினை கடைபிடித்து அதனை நல்லவர்களுக்கு உபதேசிப்பதான செயலையோ செய்யலாம். இல்லையேல் அவர் போகத்தை அனுபவிப்பவராக இருக்கட்டும். அவர் எந்த நிலையில் இருந்தாலும் அவருடைய கர்மங்கள் வாசனையை உண்டு செய்யும் தகுதியற்றதாக இருப்பதனால் மீண்டும் பந்தத்தினை அடைவதில்லை. அவருடைய பிராணனானது இங்கேயே லயமடைகின்றது என்பதால் மறுபிறவி என்பது கிடையாது என்று ஷ்ருதி கூறுகின்றது. -12-

கிடைப்பதற்கறிதானதும், நிலையானதும், எல்லா துன்பத்தினையும் நீக்குவதாகவும், இன்பத்தனை நிறைவாக கொடுப்பதாகவும் உள்ள ஆத்மாவினை அடைவதே மேன்மையான அடைவு, அதனை தவிர வேறு மேன்மையானது இல்லாததால் என்பதினை -

अपि भूपरमाणुभूरिसंख्येष्वपयातेषु चतुर्मुखेष्वलब्धात् ।
अपदुःखनिरन्तंसौख्यसिंधोः न च लाभोऽस्ति परो निजात्मलाभात् ॥ १३ ॥

இந்த ஜகத் முழுவதினையும் பரமானுவினைப்போன்ற சூக்ஷ்மமான எண்ணிக்கையால் நிரப்பினால் எத்தனை பரமாணுக்கள் உண்டாகுமோ, அதைவிட

அதிகமானதான நான்முக கடவுளின் கால பிரவாகத்தினை அடைந்து பல பிறப்பினை அடைந்து சம்சாரத்தில் அகப்பட்ட இந்த ஜீவனானது இதற்கு முன்பு எப்பொழுதும் அடையப்படாததான எல்லா துன்பங்களையும் நீக்குவதானதும், நிறைவான இன்பத்தினை கொடுப்பதுமான இன்ப சமுத்திரமான தன்னுடைய ஆத்மாவினை அடைவதைகாட்டிலும் மேன்மையானது வேறு ஒன்றும் நிச்சயமாக இல்லை. -13-

ஆத்ம லாபமானது வெளிவிஷயங்களை அடைவதுபோல இல்லாததினை அடையவதல்ல. ஆனால் எப்பொழுதும் உள்ளதாகும். அதாவது தவறான ஞானத்தினால் அடையப்படாது இருக்கும் அதன் ஞானமே அடைவது என்பதினை -

**मोहमात्रादलब्धस्य लाभस्त्वसौ स्वात्मनः कण्ठचामीकरन्यायतः ।**
**बोधमात्रं तदाक्रम्य यस्माच्छ्रुतिः प्राह भूयः पदेनऽनुविन्देदति ॥ १४ ॥**

எப்பொழுதும் அடையப்பட்டதாக இருக்கும் ஆத்மாவானது அனாதி அவித்தையினால் அடையப்படாதது போன்று இருக்கும் இதன் அடைவானது அதனை அறிவது மட்டுமே. அதாவது ஒருவன் தன்னுடைய கழுத்தில் இருக்கும் மாலையை அறியாமல் தேடுதலை துவங்குகின்றானோ, அப்படிபட்டவருக்கு கழுத்திலேயே மாலை உள்ளது என்ற வாக்கயித்தால் போதிக்கப்பட்டதும் அதனை அடைவதற்காக வேறு முயற்ச்சி செய்வதில்லை, மாலையை அடைந்த ஆனந்தமும் அடைகின்றார். அதுபோலவே இங்கும்.

ஆனால் இதனை இப்படி ஏற்காமல் **அர்ச்சிர்** முதலிய மார்கத்தின் வழியாக சென்று அந்த உபாசகர் ஆத்மதத்துவத்தை அடைகின்றார் என்று ஏற்கலாம் என்றால், அது சரியல்ல காரணம். **ஆத்மேத்யேவோபாஸீத** என்கிற ஷ்ருதியினால் ஞானத்தினை உபதேசித்து **அனேன ஏதத் சர்வம் வேத** என்கிற வாக்கியத்தால் எது அறியப்படவேண்டுமோ அது அறியப்பட்டதால் வேறெதுவும் அறியப்படவேண்டியதில்லை என்று கூறி, எப்படி மாட்டினை தேடுபவர் அதன் குளம்புகளின் சுவட்டினை தொடர்ந்து சென்று அதனை அடைகின்றாரோ,

அதுபோல, பிரம்மத்தினை அறிபவர் வேறு மார்கத்தில் செல்வது இயலாமல் இங்கேயே அதனை அடைவது கூறப்பட்டதாலும் அதன் ஞானமே அதன் அடைவு என்பது திண்ணம். -14-

ஆனால் ஞானத்தினால் அஞ்ஞானமானது நாசம் செய்யப்பட்டாலும், எப்படி பிரளயத்தில் நாசத்தினை அடையும் ஜகத்தானது மீண்டும் சிருஷ்டி அடைகின்றதோ அதுபோல மீண்டும் தோன்றும் என்றால், அதனை நிராகரிக்க -

**बाधितं स्यादसत् ध्वस्तवैधर्म्यतो मोहबाधोऽपि न ध्वंसरूपोऽपरः।**

**बाधबुद्धिश्च नाऽभावमात्रप्रथा स्यादभावोऽप्यधिष्ठानरूपोऽथवा ॥ १५ ॥**

ஞானாத்தால் நீக்கப்பட்ட அஞ்ஞானமானது அத்யந்த அஸத்தானதால் அது சம்ஸ்காரமாகவும் இருத்தல் என்பது இயலாது. ஆனால், நீக்கம் என்பது த்வம்சரூபமாக இருக்கின்றதால் அஞ்ஞானத்தின் நீக்கம் த்வம்சரூபம் என்ற **ஜன்ய அபாவம்** (உண்டாகும் இன்மை) இல்லை, அப்படி ஏற்பதினால் அந்த ஜன்ய அபாவத்தினால் மோக்ஷமானது உண்டானதால் அது அநித்தியம் ஆகும். அதுமட்டுமல்லாமல் இரண்டற்ற நிலையானதாக மோக்ஷமும் இருத்தல் முடியாது என்பதால் அது அதிஷ்டான ரூபம் என்றே ஏற்கப்படுகின்றது. ஆனால் அபாவமானது (அத்யந்த அபாவம்) என்கிற நிலையே நீக்கமானது உண்டாகட்டும் என்றாலும், இரண்டுள்ள நிலையே உண்டாகும் என்றால், அபாவத்தின் வழியாக மட்டும் நீக்கத்தினால் இல்லை. இப்படி ஏற்றால் வாயுவில் ரூபம் இல்லை என்ற இடத்திலும் அதுபோன்று ஏற்கவேண்டிவரும். இதனால் அந்த அஞ்ஞானம் எதில் ஆரோபிக்கப்பட்டதோ அந்த அதிஷ்டானத்தில் இதனால் அந்த அஞ்ஞானம் எதில் ஆரோபிக்கப்பட்டதோ அந்த அதிஷ்டானத்தில் அதன் அபாவம் என்கிற வழியாகவே அது இருக்கின்றது என்று ஏற்கப்படுகிறது.

பானை இல்லாமை என்பதிலும், பானை இல்லை என்பதிலும் வேறுபாடு இல்லாதபோதிலும் அங்கு ஆதாரம் மற்றும் ஆதேயத்தின் பாவம் உண்டாவது பார்க்கப்படுவது உண்டு என்பதால், இந்த பூமியில் பானை இல்லை என்னும் இடத்திலும் அந்த பூமியிலேயே பானை இருத்தல் அல்லது இல்லாமை குறிக்கப்படுவதால், அதிகரணத்தினை விடுத்து வேறு அபாவம் என்பது இல்லை

என்றாகின்றது. அதாவது ஆரோபமாகிய அதிகரணத்தில் நீக்க புத்தியின் விஷயமான அபாவமும் அதன் அதிஷ்டான ரூபமாகவே இருக்கும். -15-

எல்லா கர்மங்களும் நாசமடைந்தாலும், பிராரப்தமானது துவங்கிய கர்மமானபடியால் அது அனுபவித்தே தான் அழிக்க முடியும் என்பதாலும், அப்படிப்பட்ட பிராரப்த கர்மத்தினால் எந்தவித பாதிப்பும் உண்டாகாது என்பதினை -

**कर्मजातं समारब्धदेहेतरत्सत्वरं भस्मतामेति बोधाग्निना ।**

**श्लिष्यते नैष्यताप्येष बोधोज्वलः कर्मणा जीवनेनेव पद्मच्छदः ॥ १६ ॥**

முன்வினையால் உண்டான **பிராரப்த** கர்மத்தினால், பலன்கொடுக்க துவங்கியதால் இந்த சரீரமானது அதற்குண்டான பலனை அனுபவிக்க துவங்கியதனால், அதனை காட்டிலும் வேறான **சஞ்சிதம்** மற்றும் **ஆகாமி** ஆகிய கர்மங்கள் ஞான அக்னியால் அந்த ஞானமானது உண்டான அதே நேரத்தில் அழிந்துபோகின்றது ஞானத்தினால் எந்த வித அஞ்ஞான மலமும் இல்லாது இருக்கும் இந்த ஞானியை அந்த கர்மங்களானது இனி எப்பொழுதும் தீண்டுவதில்லை. பிராரப்த கர்மத்தினால் செய்யப்பட்ட வினைகளையும் அனுபவிப்பதில்லை. இது எப்படி என்றால் தண்ணீரில் இருந்தாலும் அந்த நீரினால் தீண்டப்படாததாக தாமரை இலை இருக்கின்றதோ அதுபோல. -16-

ஆனால் பிராப்தம் இருக்கின்றது என்று ஒப்புக்கொண்டாலும் இந்த போகத்திற்கு நிமித்தமான ஜகத்தானது பாதிக்கப்பட்டதால் போகமானது எங்ஙனம் உண்டாகும், அதுமட்டுமல்லாமல், மூலஅஞ்ஞானமானது அழிக்கப்பட்டபின் பிராரப்த கர்மமும் எப்படி இருத்தல் முடியும் என்றால் அதனை விவரிக்க-

**चोरबाधेऽपि तज्जन्यभीत्यादिवच्चेलदाहेऽपि भस्मेव चेलाकृति ।**

**ज्ञानिनां विश्वमादेहपातं स्वतो बाधितत्वेऽपि चाऽऽरब्धभोगक्षमम् ॥ १७ ॥**

எப்படி திருடர்களால் கட்டி துன்புருத்தப்படுவதான கனவிலிருந்து

விழித்தெழுந்தாலும், கனவில் புலி, சிங்கம் முதலியவை தொடருவது போல கண்டு விழித்தெழுந்தாலும் அதனால் உண்டாகும் நடுக்கமானது எப்படி போவதில்லையோ, அதுபோல துணியானது எரிந்து போன நிலையிலும் அதன் சாம்பலானது இந்த துணியின் உருவத்தை போன்றதேயாக எவ்வாறு இருக்கின்றதோ, அதனை போன்றதே, ஞானிகளுக்கும் இந்த த்வைதமான ஜகத்தானது நீங்கினாலும், இந்த பிராரப்த கர்மத்தால் உண்டான சரீரமானது இருக்கும் வரையில் அதனுடைய இன்ப-துன்பங்களும் அனுபவிக்கப்படுவதாக இருக்கின்றது -17-

ஆனால் பிராரப்தத்தினால் ஞானிகளுக்கும் இந்த த்வைத ஜகத்தானது இருக்கட்டும். நான், என்னுடையது என்கிற அஹங்காரம் (அத்யாசம்) இல்லாமல் கொடுக்கல்-வாங்கல் போன்ற வியவகாரங்கள் உண்டாக இயலாது என்பதால் போகமானது எவ்வாறு உண்டாகும். அவர் உயிரோடு இருப்பது நிராகரிக்கப்படாததால், வேறு வழியில்லாமல் அத்யாசம் ஏற்க்கப்பட்டால் பந்தமும் உண்டாகும் என்றால் அதனை நிராகரிக்க -

**जीवतोऽप्यस्य नह्यात्मबुद्धिस्तनौ वामलूरेऽप्यहेर्निल्वयिन्यामिव ।**
**मोहमात्रात्परे कल्पयन्त्स्य चेद्देहितामस्तु तद्धनिरस्येह का ॥ १८ ॥**

பிராரப்த கர்மத்தினால் உடலானது அழியும் வரை தேகத்தினை தாங்கினாலும் ஞானிக்கு தன்னுடைய உடலில் எந்தவித அபிமானமும் உண்டாவதில்லை. நான் மனிதன், நான் பிராம்மணன் முதலியதான அத்யாசங்கள் உண்டாவதில்லை. அதனால் விருப்பு, வெருப்பு இல்லாததால் அதனால் உண்டாகும் ஆனந்தம் மற்றும் துக்கம் உண்டாவதில்லை. பாம்பின் சட்டையானது அதன் தோலே என்கின்றபோதிலும் அதனை நீக்கியபின் அது தன்னுடைய தோலாக இருந்தது என்று அதன்மேல் எந்தவித அபிமானமும் கொள்வதில்லையோ அதுபோல அது அதன் புற்றில் வீழ்ந்து கிடக்கும் போதும் அதன்மேல் அபிமானம் உண்டாகாதது போல, ஞானிக்கும் அவருடைய பிராரப்தத்திற்கு ஏற்றதுபோல உள்ள போகங்களை அனுபவிக்கும் போது தாற்காலிகமாக அதன்மேல் அத்யாசம் உண்டாகின்றது.

ஆனால் ஆசாரியர் முதலியவர்களும் பரவாதத்தினை கண்டனம் செய்வதும், உபதேசிப்பதும் காணப்படுவதால், எப்படி நம்முடையது போல அவர்களுக்கும் உடலின் அனுபவம் இல்லை என்றால், பார்பவர்கள் தங்களுடைய மோகத்தினால் தத்துவ ஞானிக்கு இதுபோல அபிமானத்தினை ஏற்றாலும் அவருக்கு அதனால் எந்த மாற்றமும் உண்டாவதில்லை. அவர்களால் அனுசரிக்கப்பட்டவர்களின் அதிருஷ்த்தினாலேயே அந்த மோகத்தினாலேயே கற்பனை செய்யப்பட்டது. அவர்களின் செயல் அந்த நபருடன் தீர்ந்த நிலையில் அவர்கள் மீண்டும் தங்களுடைய உதாசீன நிலையை அடைவது காணப்படுகின்றது என்பதால் என்க . -18-

ஆனால் தத்துவ ஞானிகளுக்கும் பிராரப்தகர்மங்களானது ஏற்கப்பட்டதால் அவர்களின் பிராரப்தத்தின் பலத்தினால் உண்டான தெய்வகுற்றமோ, அல்லது பெரியவர்களை அவமதித்தது போன்ற தோஷத்தினாலோ அவர்கள் சாபத்தினால் மீண்டும் பிறவி எடுக்க நேரிடலாம் என்றால் , அது சரியல்ல என்பதினை -

**ईशते ज्ञाततत्त्वस्य नाऽभूतये यत्नवन्तोऽपि सर्वेऽपि देवाऽसुराः ।**
**को हि नामाऽऽत्मनोऽभिष्टकारी भवेदात्मभूतो यतिस्त्वेष तेषामपि ॥ १९ ॥**

ஆத்ம சாக்ஷாத்காரம் அடைந்தவருக்கு துன்பத்தினை விளைவிக்க எல்லா தேவதைகளும் (அசுரர்கள், மகாபுருஷர்களும்) அவர்களுடைய எல்லா சக்தியையும் கொண்டும் கடும் முயற்சி செய்தாலும் முடியாது என்பதால், ஒருவருடைய கோபத்தினால் என்னாகும் என்று கூறவும் வேண்டுமா. அவருக்கு அந்த சாமர்த்தியம் எவ்வாறு உண்டானது என்றால், இது அவருடைய சாமர்த்தியம் அல்ல. ஆனால் எல்லாராலும் விரும்பப்படுகின்ற ஆத்மாவினால் உண்டாவது. எப்படி என்றால் இந்த உலகத்தில் யாரும் தன்னுடைய ஆத்மாவிற்கு தீங்கிழைக்க விரும்பமாட்டார் என்பதால். இந்த ஞானியானவர் தேவாசுரர்களின். எல்லா பிராணிகளின் ஆத்மாவாக இருப்பதால் துன்பம் விளைவிக்க முடியாது என்று பொருள். -19-

உண்மையில் ஞானி தேவர்கள் முதலியவருக்கு எந்த வித அபராதமும் செய்ய முடியாது. அவர் அதற்கு காரணமான ராக-த்வேஷ முதலிய தோஷங்கள்

இல்லாதவராக இருப்பதால் என்பதினை -

**राग लोभ प्रमादादि दोषक्षयान्नायमाज्ञते दुश्चरित्रे क्वचित् ।**
**साधुवत्साधुचारित्र्यरक्षापरः साधुमार्गेण संस्कारतो वर्तते ॥ २० ॥**

ஞானியானவர் எங்கும் எப்பொழுதும் சாஸ்திர நிஷித்தமானதோ, அல்லது மற்றவருக்கு துன்பம் விளைவிப்பது போன்றோ உள்ள செயல்கள் செய்வது இயலாது. விருப்பு, வெறுப்பு, பேராசை முதலிய தோஷங்களானது நிச்சயமாக அழிந்ததால். சாதனை காலத்தில் இல்லாத இந்த கொடிய தோஷமானது ஞானம் உண்டானபின் எவ்வாறு இருக்க இயலும். தர்மத்தினை அனுஷ்டிப்பவர்களுடையதும், ஞானிகளுடையதுமான தங்களுடைய ஆஸ்ரம மற்றும் வர்ணத்திற்கு உண்டான கர்மங்களில் பிரவிருத்திப்பதாகவும் அதனை உற்சாகம் செய்வதாகவும், சரியான சம்பிரதாயத்தினை பாதுகாப்பது போன்ற செயல்களினை செய்பவராக சாதுவாகவே இருப்பார். அதற்கு என்ன காரணம் என்றால், பல ஜன்மங்களாக செய்த சாது அப்யாசத்தினால் அவ்வாறே இருத்தல் இயலும் என்பதல். இதற்கு உதாரணம் பானை பிடிக்க சுழற்றப்பட்ட சக்கரமானது பானை பிடிக்கப்பட்டதும், அதே திசையிலேயே சுழலும், வேறு திசையில் அல்ல அதுபோல. -20-

அதனாலேயே அவர் இன்பம் துன்பம் முதலியவைகளால் பாதிக்கப்படாதவராக உள்ளார் என்பதினை -

**न प्रहृषत्यसौ प्राप्य भूयः प्रियं मेरुवन्निश्चलो भूरिकृच्छ्रेष्वपि ।**
**भावयन्नत्मनाऽऽत्मानमानन्दितो देववत्सञ्चरत्येव विश्वम्भराम् ॥ २१ ॥**

ஞானியானவர் இந்த உலகத்தில் சந்தோஷத்தினை கொடுக்கக்கூடியதான விஷயங்களையும் , ஐஸ்வர்கங்களையும் அது சாரமற்ற மித்யா என்பதனால் கண்ணாடியில் பார்க்கப்படும் பிம்பத்தினைப்போல பாவித்து அதன்மேல் பற்றில்லாமல் உள்ளதால் ஆனந்தத்தினை அடைவதில்லை. அதே போல மேருமலையை போன்ற மிகவும் பயங்கரமான துன்பங்களால் சூழப்பட்டாலும்

அதனால் நடுக்கம் கொள்ளாதவராக தன்னியல்பாகவே இருக்கின்றார். அவர் இரண்டற்ற ஆத்மாவினில் எப்பொழுதும் பிரிவில்லாமல் இருக்கும் காரணத்தால் அதன் பரமானந்தத்தில் எப்பொழுதும் மூழ்கியவராகவே இருக்கின்றார். இப்படிப்பட்ட குணமுள்ள அவர் லோகத்தினை அனுசரிக்கும் பொருட்டு ஈஸ்வரரை போல எல்லா இடத்திலும் வியாபித்து இருக்கின்றார். -21-

ஞானிகளின் ஆசரனையானது சாமான்ய முறையிலேயே கூறப்பட்டது. விசேஷமான முறையில் கூற இயலாது என்பதால். பிராரப்தமானது பலவகைப்பட்டதானதால் நிச்சயித்து கூறுவது இயலாது என்பதினை -

**केऽपि वर्णाश्रमाचारनिष्ठापरा मुग्धबालप्रमत्तोपमाश्चाऽपरे ।**

**रागिणो भोगिनो योगिनश्चेतरे ज्ञानिनां लक्ष्यते नैकरूपा स्थितिः ॥ २२ ॥**

ஞானிகளில் சிலர் வர்ணாசிரம தர்மங்களை முறையாக அனுஷ்டிப்பதில் ஊக்கமுள்ளவர்களாக இருப்பது காணப்படுகின்றது. ஆனால் வேறு சிலரோ **ரிபு, ஜடபரதர், தத்தாத்ரேயர்** முதலியவர்களோ, அஞ்ஞானிகளை போலவே குழந்தைகள் போலவோ, மனம் குழம்பியவர்கள் போலவோ அல்லது மது அருந்தியவர்கள் போலவோ இருப்பதாக காணப்படுகின்றது. **சௌபரி** முதலியவர்களோ மனதினை நன்றாக அடக்கிய நிலையில் யோகிகளைபோல காணப்படுகின்றனர். **ஜைகீஷவ்யர்** முதலியவர்களோ சமாதியில் இருப்பவர்களாக உள்ளது அறியப்படுகின்றது என்பதால் ஞானிகளின் செயலானது ஒரே மாதிரி இருக்கும் என்பது கூறுதல் இயலாது. -22-

ஞானிகளின் வியவகாரமானது எல்லோராலும் புரிந்துகொள்ள இயலாது என்பதினை -

**स्वाऽऽनन्दे सहजे सदा विहरतां स्वच्छन्दलीलाजुषां**

**निस्सङ्गा च निरर्गला च जगतां कल्याणसंदोहनी ।**

मत्स्यानां सलिलेऽम्बरे च वयसां वायोरिवाऽऽशामुखे
दुर्लक्ष्ये पथि योगिनां बहुविधा गूढा विचित्रा गतिः ॥ २३ ॥

தன் இயல்பான ஆத்ம சுகத்தில் எப்பொழுதும் ரமிப்பவராக இருக்கும் ஞானியானவர் தன்னிஷ்டப்படி இந்த ஜகத்திற்கு உபகாரம் செய்வதற்கு லீலையாக மேற்கொள்ளும் முயற்சிகள் நுண்ணிய அறிவு படைத்தவர்களாலும் புரிந்துகொள்ள முடியாததாகும். மேன்மையான நிவிருத்தி மார்கத்தில் செல்லும் அவர் எந்த விதமான சம்பந்தமும் இல்லாததாலும், ராகம் முதலியவைகளோடும் சம்பந்தமும் இல்லாததாலும், எதனாலும் தடை செய்யப்படாதவராக இந்த உலகத்தில் உள்ள எல்லோருக்கும் நண்மையை செய்யவேண்டி இவருடைய செயல்களானது மிகவும் விசித்திரமானதாகவும், அறிந்துகொள்ள படமுடியாததாகவும் இருக்கின்றது. இது எப்படியென்றால், நீரில் உள்ள மீன்களின் போக்கினை போலவும் ஆகாயத்தில் உள்ள பறவைகளின் போக்கினை போலவும், காற்றின் போக்கினை போலவும் மிகவும் விசித்திரமாக உள்ளது. -23-

ஞானியே மூவுலங்களலும் வணங்குவதற்குரியவர் என்பதினை -

योगिध्येयपदाम्बुजस्त्रिजगतां नथो हरिर्यं स्वयं
शान्तं नित्यमनुव्रजामि रजसा पूयेयमित्यब्रवीत् ।
तस्माद्विश्वगुरोः सुरासुरनरैरानम्यपादाम्बुजा
दात्मानन्दनिमग्ननिश्चलमतेरन्योऽत्र धन्योऽस्ति कः ॥ २४ ॥

மேன்மையை அடைய விரும்புவர்கள் அவசியமாக ஞானிகளின் பாதத்தினை தொழுதல் வேண்டும். காரணம் அவரே மூவுலகங்களின் ஈஸ்வராகிய சிவன், விஷ்ணு மற்றும் பிரம்மா ஆவர். கோபமற்றவரான சாந்தமானவரான அவரை தினமும் நான் வணங்குகின்றேன். அவரை வணங்குவதால் அவருடைய பாததூளியினால் நான் தூய்மை அடைகின்றேன் என்று தெளிவாக, எல்லோருக்கும் மேன்மையை பொருட்டு உபதேசித்த விஷ்வ குருவான ஸ்ரீ கிருஷ்ண பகவான் கூறியிருப்பதால், எல்லாருடைய வணக்கத்திற்குரிய பாதங்களையுடைய

தன்னுடைய ஆனந்தத்திலேயே மூழ்கியிருக்கும் எந்தவித மாற்றமும் இல்லாத ஞானியினை காட்டிலும் எவர் மேன்மையானவர், வேறொருவரும் இல்லை என்பது பொருள். -24-

ஞானியானவர் என்ன பேசுவார் என்பதினை -

**सोऽयं पूर्णमनोरथोऽपि सहजात्कौतूहलात्पर्यट**
**न्नुर्वीं सर्वहिते रतः प्रतिपदं स्वानन्दमास्वादयन् ।**
**साश्चर्यं सकुतूहलं सकरुणं सानन्दमुत्कण्ठया**
**धीरः पारमवाप्य मोहजालधेरेवं मुहुर्गायति ॥ २५ ॥**

இப்படிப்பட்ட ஞானியானவர் மோகத்தினை உண்டாக்ககூடிய இந்த சம்சார கடலினை கடந்து ஆத்மதத்துவத்தினை அறிந்தவராக இருப்பதால் தான் பூர்ணமாக இருந்தபோதிலும், எந்த ஒரு காரணமுமற்ற கருணையினால், பலவகைப்பட்ட தேசங்களிலும் உள்ள நல்லவர்களை காணும் பொருட்டு இந்த பூமியில் சஞ்சரித்து எல்லோருடைய நன்மையை பொருட்டும் ஈடுபாடுடையவராக ஒவ்வொரு இடத்திலும் ஆத்மானத்தினை அனுபவிப்பவராக, பிரம்மன் முதலியவருக்கும் அடைதற்கரிதான இந்த ஆத்ம தத்துவத்தினை நான் எப்படி அடைந்தேன் என்று ஆச்சரியத்துடன், இந்த சம்சர கடலில் தவிக்கும் எல்லா பிராணிகளும் என்னைபோல ஆனந்தத்தினை அடையவேண்டும் என்று கருணையினால் அதனை போதிக்கும் ஆசையினால் மீண்டும் மீண்டும் கூறப்படும் வகையில் ஆனந்தகானம் பாடுகின்றார் . -25-

ஞானி கூறுவதினை துவங்கும் முன், முதலில் குருவின் கருணை நிரம்பிய படாக்ஷத்தினாலும், அவரின் உபதேசத்தினாலுமே இந்த ஆனந்தம் அடையப்பட்டது என்பதினை -

**चिरान्मग्नेनाऽन्तः प्रकृतिविषमे जन्मजलधौ**
**मया पुण्यैर्लब्धो गुरुरमृतचिन्तामणिरहो ।**

**यदीयाभिर्गोभिर्विशदमधुराभिर्वितिमिरे**

**स्वसंपूर्णे यस्मान्निरवधिसुखे धामनि रमे ॥ २६ ॥**

மிகவும் கொடுமையான துன்பங்களை கொடுக்கும் இந்த சம்சார பெருங்கடலில் அநாதிகாலமாக மூழ்கியிருந்த என்னை, மிகவும் மேன்மையான பதவியை அடையும் வழியை, மோக்ஷத்தினை அடைவிக்கும் சிந்தாமணியை போன்ற சத்குருவினுடைய வாக்கானது என்னுடைய புண்ணியத்தின் பலனால் எனக்கு கேட்க கிடைத்தது. ஆஹா, என்ன ஆச்சரியம், மரணத்தை போக்கும் சிந்தாமணியான ஸ்ரீ குருவின் கடாக்ஷமும், அவருடைய உபதேசமும் கிடைக்க பெற்றதும் அஞ்ஞான திரை நீங்கியதால் என்னுடை ய உண்மையான சுவரூபமான குறைவற்ற ஆனந்தமான தானே ஒளிர்கின்ற அந்த ஆத்மா என்னும் வீட்டில் நான் எப்பொழுதும் இன்பமான களிக்கின்றேன். – 26 -

**யா <u>நிஷா ஸர்வபூதானாம்</u>** என்கிற பகவானுடைய வசனத்தோடு தன்னுடைய அனுபவத்தினையும் ஒத்ததான, ஜகத் மித்யா மற்றும் சத்யம் முதலிய விபரீதமான விஷயங்களின் பொருளினை -

**यथा पूर्वं मायापरिकलितदृष्टिर्निजसुखं**

**स्वयं भातं पश्यन्नपि नपरिपश्यामि सहजम् ।**

**तथेदानीं ज्ञानाञ्जनविमलचक्षुर्जगदिदं**

**चिदाकाशे पश्यन्नपि न परिपश्यामि वितथम् ॥ २७ ॥**

அறியாமையில் உழன்றபோது, என்னுடைய உண்மை நிலையான மிகவும் விரும்புதற்குரிய தானே ஒளிர்கின்ற ஆத்ம சுகத்தினை பார்த்தபோதும் வெளிவியவகாரத்தினால் திசைதிருப்பப்பட்டவனாக, அனுபவித்தபோதும் மாயா என்னும் திரையினால் மூடப்பட்டதாக உள்ள கண்களால், த்வதைத்தினால் கூடியதானதால் அடுத்திருந்தும் காணாததுபோல, இப்பொழுது ஞானம் என்னும் மையால் குளிர்ச்சியடைந்த கண்களால் உண்டான சுவரூப திருஷ்டியினால் ஆகாயத்தினை போன்று வியாபித்து இருக்கும் சுவரூபசைதன்யத்தில் ஜகத்தினை

கண்டபோதிலும், ஜகத் மித்யா என்கிற நிச்சயத்தால் காணாதவனாக இருக்கின்றேன். -27-

இப்படி ஆத்ம சாக்ஷாத்காரத்தினால் த்வைதமான மித்யா பிரபஞ்சம் நிராகரிக்கப்பட்டதினை அனுபவித்து கூறுகின்றார். -

**न वेद्यो नाऽवेद्यः स्वरसमतिहृद्यः सुखघनो**
**न गद्यो नाऽपोद्यो न पुनरुपरिध्यः कथमपि ।**
**न हेयो नाऽऽदेयो न पुनरपिधेयः क्षणमहो**
**स्फुतन्नाऽऽत्माऽस्माकं जगदिदमकस्मात्तिरयति ॥ २८ ॥**

ஆத்மா இந்திரியங்களாலும், மனதினாலும் அறியப்படமுடியாததாக உள்ளது, காரணம் அது விஷயமாக இல்லாததினால், இதனால், ஆத்மா அறியப்பட முடியாததாகவே இருக்குமென்றால் அவ்வாறும் இல்லை. காரணம் இது நித்யமானதால் எப்பொழுதும் அபரோக்ஷமாக அனுபவிக்கபடுவதாக இருப்பதால். இதில் எந்த வித விசேஷமும் இல்லாததினால் வாக்கினாலும் உரைக்கப்படுவதில்லை. வரையறுக்கப்படுவதாக இல்லாததால் இதனை நிராகரிப்பது முடியாது என்பதால் உரைக்கப்பட முடியாததும் இல்லை. நிராகரிப்பதும் இதுவே (ஆத்மாவே) என்பதால் நிராகரிப்பது இயலாது. இதனாலேயே இதனை அழிப்பதும் இயலாது. இதனை வேறு எதனை கொண்டும் மூடுவதும் இயலாது, தானே தன்னை மறைப்பது இயலாததால். வரையறுக்கப்படாததாலும் இப்படிப்பட்ட ஆத்மாவானது எல்லோராலும் மிகவும் விரும்பப்படுவதாக உள்ளதென்பதால் சுக ஏகரஸமாக இருப்பது. இப்படிப்பட்ட ஆத்மாவினை சாக்ஷாத்காரம் செய்தினால் அதன் ஸ்புரணத்தினால் பிரத்யக்ஷம் முதலியவற்றினால் அடையப்படுகின்ற இந்த ஜகத்தானது தானே சுவரூபத்தினால் மறைக்கப்பட்டதாக ஆகின்றது என்ன ஆச்சரியம் -28-

ஞானத்தினால் இந்த ஜகத்தானது கனவினைப்போல மறைகின்றதாக விசாரிக்குங்கால் அது மனதினில் மட்டுமே இருப்பது என்பதினையும், அது அடங்கினால் அடங்குவதாகவுள்ள அனுபவத்தினை-

किमस्तं किंध्वस्तं किमु विलुलितं किन्नु गलितं
विशीर्णं वा गीर्णं ननु सपदि जीर्णं किमथवा ।
अमन्दे स्वच्छन्दे निरुपमनिजानन्दजलधौ
मयि स्वान्ते शान्ते जगदिदमशेषं न कलये ॥ २९ ॥

மனதில் சாக்ஷாத்கார விருத்தியானது உண்டாகும் போது ஆனந்த ஏகரஸமான ஆத்மாவான என்னில் இது என்று காணப்படுவது எல்லாம் அனுபவமாவதிலலை. அது எப்படியென்றால், அது துச்சமாக இருப்பதால், அறியப்படும் யோக்கியத்தை உடையதாக இல்லாததால். அப்படியென்றால், ஜகத் சூரியன், சந்திரனைபோல அஸ்தமித்துவிட்டதா அல்லது கடினமான கல், பானை முதலியவைபோல அழிந்துவிட்டதா அல்லது மதம் பிடித்த யானையை சங்கிலி கொண்டு கட்டுவது போல கட்டப்பட்டதா அல்லது கையில் வைக்கப்பட்ட பணிக்கட்டியை போல கரைந்துவிட்டதா அல்லது மேகத்தினை போன்று கலைக்கப்பட்டதா அல்லது பாம்பானது பசியுடன் உள்ள நிலையில் இரையினை விழுங்குவதுபோல விழுங்கப்பட்டதா அல்லது யோக சக்தியினால் வயிற்றில் சென்ற வாதாபி என்னும் அசுரனை அழித்ததுபோல ஜீரணம் ஆகிவிட்டதா. மற்ற வகையில் அழிவு உண்டாகியிருந்தால் ஜகத்தானது வேறு உருவத்தில் மாற்றமடைந்து இருப்பது இயலும் ஆனால் ஜீரணம் அடைந்ததாக இருக்கும் நிலையிலோ அதுவும் இயலாது. ஆனால் ஆத்மாவில் ஜகத்தானது இருந்து அதனை அறியாததாலேயே அடையப்படுவதாக இல்லை என்று கூறினால் அதுவும் சரியல்ல. அஞ்ஞானத்தினால் ஆவரணம் செய்யப்படாத சித்தானதில் இருக்குமானால் அது பிரகாசிக்கவே செய்யும். அப்படி இல்லை ஆனால் அது வேறு இடத்தில் இருப்பதாகவும், பிரகாசிக்காது இருக்கின்றது என்றும் ஏற்றால் அதுவும் இல்லை. தனக்கு அதீனமான மூன்று விதமான வரையறைகள் இல்லாத வேறு வஸ்துவானது இல்லாததால் உவமை இல்லாத ஆத்மாவின் ஆனந்தம் என்னும் பெருங்கடலில் ஜகத்தினை ஏற்றால், தண்ணீரிலும் இனிப்பு கலந்ததினை போல, ஆனந்த ஏகரஸம் என்று கூறியதற்கு பாதிப்பு உண்டாகும். இது ஷ்ருதி மற்றும் அனுபவத்திற்கு விரோதமாக உள்ளது. என்பதால் ஜீவன் முக்தி நிலையில் ஜகத் துச்சமே என்பதே நிரூபணமாகும். -29-

ஞானத்தினால் பாதிக்கப்பட்டதால் மட்டும் ஜகத்தின் துச்சதன்மை இல்லை, விசாரித்து பார்த்தால் இதன் சிருஷ்டி முதலியவைகளினாலும் அவ்வாறே என்பது புரியும் என்பதினை-

**कथमिदमभवत्कथंनु तिष्ठत्यथ कथमेति लयं प्रतिचि विश्वम्।**
**विमलदृशि निजे निरस्तसङ्गे पटु परिमृश्य मृषेति निर्वृतोऽस्मि॥ ३०॥**

நிர்மலமான சைதன்ய சுபாவமான தன்னில் இல்லாததால், வெளியிலும் விகாரமற்றதாக எந்த சம்பந்தமும் எதனோடும் இல்லாததால். அப்படிப்பட்ட இந்த உண்மையான பரமார்த்த சத்தியமான பிரத்யக் ஆத்மாவில் இது என்று அறியப்படும் ஜகத்தானது எப்படி இருத்தல் இயலும், மூர்த்தமாக இல்லாத, உள்வெளி இல்லாத அந்த ஆத்மாவில் ஜகத் எப்படி இருத்தல் இயலும். உற்பத்தியே இல்லாதபோது மலடி மகனின் பராபரிப்பும், அழிவும் போன்று ஜகத்தின் ஸ்திதியும், லயமும் எங்ஙனம் உண்டாக இயலும். இப்படி ஜகத்தினின் சுவரூபத்தினை நல்ல முறையில் , சிறப்பாக விசாரித்து அது துச்சமே என்று நிச்சயித்து சுகித்து இருக்கின்றேன் . - 30-

சிருஷ்டி, ஸ்திதி, லயத்தின் ஆதாரமானது இருத்தல் இயலாது என்பதால் ஜகத் துச்சம் என்று கூறப்பட்டது. இனி அதனை உண்டாக்குதல் முதலியதும் இருத்தல் இயலாது என்பதினை -

**निराधाराऽऽकारं निरवयवसंस्थानमचलं**
**निरीहं निर्द्वन्द्वं निरुपम निजानन्द विभवम्।**
**विनोपायं स्वीयं करणसमुदायं च परमं**
**कथं तन्निर्मायं त्रिभुवननिकायं रचयति॥ ३१॥**

எந்தவித உருவத்தினையும் சார்ந்து இல்லாமல், எந்த அவயவமும் இல்லாமல், எந்தவித செயலும் இல்லாமல், எந்த வித ஆசையும் இல்லாமல்,

எந்தவித இரட்டையும் இல்லாமல், இதுபோன்று வேறொன்று இல்லாமல் , தன்னுடைய ஆனந்தமே எதன் பெருமையான பலனாக உள்ளதோ அப்படிப்பட்ட பிரம்மம் வெளி இந்திரியங்கள், உள் இந்திரியங்கள இல்லாமல் மூவுலகத்தினையும் எப்படி உருவாக்குதல் முடியும். ஆனால் இதுபோன்ற எந்தவிதமும் இல்லாதும் மாயாவியானவன் மாயையால் எப்படி சிருஷ்டிக்கின்றாரோ, அல்லது கனவில் எப்படி பலவகையான சிருஷ்டிகள் உண்டாகின்றதோ அதுபோல ஏற்றால் என்றால், எந்தவித சம்பந்தமும் இல்லாத (எதனுடனும்) பிரம்மம் மாயாயவுடன் சம்பந்தம் என்று ஏற்பதும் இயலாது என்பதால் -31-

ஜகத்தை சிருஷ்டிப்பவர் என்பது எப்படி இல்லாது போகின்றதோ, அதுபோல அதனை பாலனம் செய்பவரும் இல்லை என்பதினை -

**न भृत्या नामात्या न खलु विषया नैव च हया**
**न चाऽशून्याः कोशा न च पुरनिवेशा न सुहृदः ।**
**तथाप्यात्मैकाकी निजबलवराकीमरिचमूं**
**विजित्यैतद्विश्वं भुवनमवतीत्यद्भुतमिदम् ॥ ३२ ॥**

தேவையான வேலைகளை செய்யும் உடல் முதலியவைகளோ, (வேலைகாரர்களோ இல்லாது வெளி விஷயங்களை மேற்நோக்கும் மனது புத்தியோ மந்திரிகளோ இல்லாது), சப்தம் முதலிய விஷயங்களோ (ஆட்சி புரிய தேசமோ இல்லாது, இந்திரியங்களோ குதிரைகளோ இல்லாது), அன்னமயம் முதலிய தேசங்களோ கிடங்குகளோ இல்லாது, அத்யாசம் என்கிற அபிமானமோ, (வசிப்பார்களோ இல்லாது) விருப்புவெறுப்போ (ஆயுதங்களோ) இல்லாது, லௌகீக, வைதிக வியாபாரங்களோ , (நண்பர்களோ) இல்லாது அசங்கமாக இருக்கும் பிரம்மம் எதனோடும் சம்பந்தம் கொள்ள இயலாததால், தன்னுடைய சொந்த சக்தியால், ஆனந்த ஏகரஸ சுபாவமான சக்தியால், (தன்னுடைய தோள் பலத்தினால் தோற்கடித்து), காமம், குரோதம் , லோபம், மோகம், மதம் மற்றும் மாத்சர்யம் என்னும் ஆறு எதிரிகளையும் தனியாக வேறு யாரும் இல்லாமல் ஆத்மாவானது தோற்கடித்து இந்த திருஷ்டியான ஜகத்தினையும் பாலிக்கின்றது என்பது என்ன ஆச்சரியம் . -32-

அதேபோல சம்ஹார தன்மையும் இல்லாததனை -

**असङ्गोदासीनः स्वरस परमानन्द सुहितो**
**जिघत्सानिर्मुक्तश्चितितनुरपाण्यङ्घ्रिजटरः।**
**अमायोऽप्यात्मसौ स्वयमनवकाशोऽपि सहसा**
**समायं त्रैलोक्यं कबलयति कस्मात्कथमहो ॥ ३३ ॥**

வேறு எதனோடும் சங்கமற்ற உதாசீனனாக தன்னுடைய இயல்பான தானே ஒளிர்கின்ற ஆனந்த ஏகரஸமானதில் திருப்தி அடைந்ததுமான சைதன்யமே சரீரமாக உள்ளதால் சூக்ஷ்மமானதாகவும் கை, கால், வயிறு போன்ற அங்கங்கள் இல்லாததாகவும், எந்த வகையிலும் வரையறுக்கப்படாததால் பூர்ணமானதாலும், உள்வெளி இல்லாததாகவும், மாயையாக இல்லாததும், அப்படி இல்லாதபொழுதும் மாயா லக்ஷணமான பிறப்பிறப்பு முதலியவை உள்ளதுபோல இது உண்ணுகிறது. இப்படிப்பட்ட உண்ணும் தன்மையானது எந்த நிமித்தத்தால் எப்படி உண்டாகின்றது. எதுவும் காரணமில்லாததால், குழந்தைகளுக்கு விளக்குவது போலவே ஷ்ருதியில் கூறப்பட்டது. உண்மையில் அது துச்சமே. –33-

அசங்கமான இரண்டற்ற பரமானந்த ஏகரஸமான தன்னுடைய ஆத்மாவினை அறிந்ததால் இந்த ஜகத்தினை மோசமானவனைபோல ஏறமாற்றினேன் என்று தன்னுடைய ஆத்ம நிலையை கூற-

**मुहुर्मूढौन्यैर्स्तं भृशमपलपाम्यर्थनिचयं**
**नकश्चिद्विश्वास्यो न मम यमदण्डादपि भयम्।**
**गुणद्वेषी स्वार्थप्रिय इति जगद्वञ्चनपरं**
**चरित्रं मे चित्रं क्वचिदपि न कश्चिकलयति ॥ ३४ ॥**

ஜடத்தை அந்த கரணம் முதலியவைகளில் அத்மயாசத்தால் இருப்பதினை,

சப்தம் முதலிய விஷயங்களை உண்மை என்று ஏற்கப்பட்டதினை **நேதி நேதி** முதலிய ஷ்ருதிகளாலும் தன்னுடைய அனுபவத்தின் சக்தியாலும் துச்சம் என்று நிஷேதிக்கின்றேன். அதனால் ஆத்மாவினை தவிர வேறெதுவும் உண்மை என்று ஏற்பதற்கில்லை. ஆத்மாவினை அறிந்ததால் எல்லா பாவங்களும் அழிந்தாலும், யமம் முதலியவைகளை நீண்ட காலம் அப்யாசம் செய்ததால் அதுவாகவே ஆகிவிட்டதாலும், எமனின் தண்டனையான நரகம் முதலியவற்றில் எந்தவித பயமும் இல்லை. காரியமான ஜகத்தினை மட்டும் நிராகரிக்காமல் அதன் காரணமான மாயாவினையும் நிராகரித்து, அது பொய் காரணமாக இருப்பதால் பொய் என்று ஏற்று நிராகரிக்கின்றேன். ( மூடர்களால் மீண்டும் மீண்டும் கஷ்டப்பட்டு சேர்த்து வைக்கப்பட்ட பணம், நகை (ஜகத், மாயை) முதலியவைகளை கலவாடுகின்றேன் , ஏமாற்றுகின்றேன்). ( ஏமாற்றுபவர்க்கு மற்றவருடைய குணங்களில் எப்பொழுதும் விருப்பமுண்டாகாது என்பதால்). ஆத்மாவே உண்மை மிகவும் விரும்பதக்கது என்ற புத்தியையுடைய நான் (தன்னுடைய காரியத்தில் மட்டும் குறியாக இருக்கும் நான்), இப்படி ஜகத்தினை ஏமாற்றவதான என்னுடைய மேன்மையான செயலை எந்த தேசத்திலும், எந்த காலத்திலும் எந்த புருஷனும் அறிவதில்லை. இப்படி ஞானியுடைய செயலும், ஏமாற்றுபவருடைய செயலும் ஒருவரும் அறிய இயலாது என்பதால். -34-

இந்த த்வைதமான ஜகத்தானது நீக்கப்பட்டால் அதனால் சூனியத்தன்மையே உண்டாகும் என்றால், அப்படியில்லை. தன்னுடைய வீட்டில் நிலத்திற்கடியில் புதைத்து வைக்கப்பட்ட சொத்தானது கிட்டியதுபோல பூரணதன்மையினை அடைதலே ஆகின்றது என்பதினை -

**न तातो नो माता सुहृदपि न मे धाम निधनं**
**नचान्नं पानं वा न सततगतिर्नाम्बरमपि ।**
**चरन्तं कृत्स्नं मामहह न हि लोकोऽपि विमृश**
**त्यहो मे दौर्गत्यं तदपि सुखसाम्राज्यमतुलम् ॥ ३५ ॥**

காரணமோ ( தந்தையோ) இல்லை, வரையறையே( தாயோ) இல்லை., உள்வெளி என்பது எதுவும் இல்லாததால் மனதோ (நண்பனுமோ) இல்லை. உடலோ

(மகாபூதங்களோ) இல்லை. நிலமும் நீருமோ (தானியங்கள், பாலுமோ) இல்லை. எப்பொழுதும் செல்லுதலுடைய காற்றோ (பராமரிப்பவரோ, சொந்தமோ) இல்லை. அதுபோல ஆகாயமோ (உடையோ) இல்லை. இப்படி காரணமான அவித்தையும், காரியமான பஞ்சபூதங்களும் இல்லாததால் எல்லா இடத்திலும் வியாபித்து, பூர்ணமாகவும் எல்லோருடைய இதயத்திலும் பிடித்தது என்றோ இருக்கும் என்னை இந்திரிய கூட்டமும், மனதும் கூட காணுவதில்லை (ஒவ்வொரு கிராமமாக பிக்ஷாடனம் செய்து காட்டில் வசிக்கும் என்னை உலகத்தில் உள்ளவர்கள் கண்டபோதிலும் தயை கொண்டு விசாரிப்பதில்லை) இப்படிப்பட்ட துர்கதியை அடைந்ததாக காணப்பட்டாலும் அளவிடப்படமுடியாத ஆத்ம சுகத்தினையே அனுபவிப்பதால். இது மிகவும் விரோதமானதாக காணப்பட்டாலும் தானேஒளிர்கின்றதாக எப்பொழுதும் உள்ளதால் மிகவும் ஆச்சரியமே இந்த நிலை. -35-

இப்படி இரண்டற்றதான வியாபித்து இருக்கும் ஆத்மாவில் விரோதமானது பிரதிபலிக்கின்றது என்பது ஆச்சரியமே என்பதினை -

**यद्विश्वं यदविश्वं यद्बहिरन्तश्च नो बहिर्नान्तः।**

**यद्भवपारमपारं तदनहमहमस्मि विस्मितः स्वेन ॥ ३६ ॥**

ஆத்மாவானது மாயையுடைய திருஷ்டியியானல் காணுகின்ற இந்த ஜகத்தானது, ஒரு நாட்டியகாரரை போன்று நடனம் ஆடுபவராக இருந்து, பரமார்த்த திருஷ்டியால் காணுகின்ற போது நிஷ்பிரபஞ்சமாகவே இருக்கின்றது. எல்ல விஷயங்களையும் வியாபித்து இருப்பதனால், எல்லாவற்றிக்கும் வெளியாகவும், உள்ளாகவும் இருக்கும் இது உண்மையில் உள்வெளி இல்லாதது. சம்ஸார கடலின் கரையாகவும், உண்மையில் வரையறுக்கப்படாததாகவும் இருக்கின்றது. அப்படிப்பட்ட ஆத்மா அஹங்காரம் இல்லாததால் நானே ஆகின்றேன். இப்படி எல்லாவற்றிர்க்கும் மேலான வேறான ஆத்மாவினை அனுபவிப்பதால் என்னை நானே ஆச்சரியப்படுகின்றேன். -36-

ஆத்மாவினை அடைந்தால், பிரம்மா, விஷ்ணு மற்றும் சிவனின் எந்த சுகமோ அதனை காட்டிலும் மேலான நிரதியசயமான சுகத்தை

அனுபவிக்கின்றேன். காரணம் அவர்களுடையது போல எந்த ஜகத் வியாபாரமும் இல்லாததால். அதனால் ஜீவன் முக்தரின் நிலை அந்த மூவரின் நிலையை காட்டிலும் உயர்ந்தது என்பதினை –

**न सत्यो मे लोको न खलु पुनरोकः सरसिजं**
**रजःसङ्गो दूरे न मयि निधिशब्दःप्रभवति ।**
**नवाग्भिः संसर्गो न च विषमसर्गव्यसनिता**
**तथापि ब्रह्माहं निगमनिकुरुम्बं गदति तत् ॥ ३७ ॥**

நிஷ்பிரஞ்சமான ஆத்மாவாகிய எனக்கு பூர்லோகம் முதலியவைகள் உண்மையில் இல்லை. (பிரம்மனுக்கோ சத்யம் எனப்படும் லோகம் உள்ளது.) அதுபோல ஹ்ருதய கமலம், ஜீவத்தன்மையின் முக்கியமான உபாசனை செய்யும் இடமானதாலும், கமலமும் அது வீடாவதும் போல, (பிரம்மனுக்கும் அந்த கமலமே வீடு(ஆசனம்) என்பது எல்லோரும் அறிந்ததே). அதுபோல என்னில் ரஜோ குணத்தினுடைய எந்த சம்பந்தமும் எப்பொழுதும் உண்டாவதில்லை. (பிரம்மனுக்கோ ரஜோகுண சம்பந்தம் (சிருஷ்டிப்பதால்) பிரசித்தமே.) அதுபோல என்னை யஜேத, தத்யாத் முதலிய விதி வாக்கியங்கள் நியமிப்பது முடியாது. விதி என்கிற சொல்லும் என்னில் இல்லை. (ஆனால் பிரம்மனில் அவைகள் உள்ளன. அதுபோல மஹாவாக்கியங்களோடு சம்பந்தம் இல்லை. பிரம்மனுக்கோ நான்முகத்தினாலும், நான்கு வேதத்தினோடும் சம்பந்தம் பிரசித்தமே). அதுபோல மோசமான சம்ஸாரத்தின் துன்பமோ அதன்மேல் பற்றோ என்னில் இல்லை, (பிரம்மனுக்கோ மேன்மை, தாழ்மை போன்ற வேற்றுமைகள் உள்ள சிருஷ்டியுடன் சம்பந்தம் பிரசித்தமே). இப்படிப்பட்ட வேற்றுமைகள் இருந்தபோதிலும் பரமார்த்தத்தில் பிரம்மனும் பிரம்மமே, நானும் பிரம்மமாகவே இருக்கின்றேன். இதனையே வேதத்தின் கூட்டமும் **தத்வமஸி , அஹம் பிரம்மாஸ்மி** முதலிய வாக்கியத்தாலும், **ஏஷாபிரம்ம ஏஷ இந்திர** முதலிய வாக்கியங்களாலும், இங்கு கூறப்பட்ட என்னில் பிரம்மா முதலிய தன்மைகளை தெளிவாக கூறுகின்றது. இதில் எந்த சந்தேகமும் இல்லை. –37–

இதுபோலவே விஷ்ணு பகவானுடைய பரம பதத்தினையும்

அடைவதினை -

**अहं न मायि न च भोगिशायी न चक्रधारी न दशावतारी ।**
**न मे प्रपन्चः परिपालनीयस्तथापि विष्णुः प्रभविष्णुरस्मि ॥ ३८ ॥**

பிரபஞ்சத்தோடு எந்த சம்பந்தமும் இல்லாத ஆனந்த ஏக ரஸ பிரம்மமான நான ஜகத் காரணமான மாயாவோ அல்லது அதனை உடைய மாயியோ ஆவதில்லை. (ஆனால் பகவான் மாயா கூடியவராவார்). அதுபோல விஷயபோகமான இந்த சம்சாரித்தில் நான் ஈடுபட்டவனும் இல்லை (பகவானோ சேஷனில் சயனித்து இருப்பவராக உள்ளார்). அதுபோல சக்கிரமான காலத்தின் பிடியிலோ அல்லது அதனை என் பிடியிலோ கொண்டவனாக இல்லை . (பகவான் சுதர்ஷன சக்கரத்தினை தாங்கியவராக இருக்கின்றார்). அதுபோல பால்யம் முதலிய தசைகளில் நான் ஈடுபடுவதில்லை அல்லது கிரகங்களின் தசைகளினால் எனக்கு எந்த மாற்றமும் இல்லை (பகவானுக்கோ மீன் முதலிய பத்து அவதாரங்கள் பிரசித்தம்). அதனால் எனக்கு த்வைதமான பிரபஞ்சத்தினை பரிபாலிக்கும் வேலையும் இல்லை. (பகவானோ ஜகத் பரிபாலனம் செய்வது என்பது தெரிந்ததே). இப்படிப்பட்ட வேற்றுமைகள் இருந்தபோதிலும் நான் அந்த விஷ்ணு பகவானிலிருந்து வேறாக இல்லை. **ஆத்மா நாராயண பர** முதலிய ஷ்ருதி வாக்கியத்தினால் அறியப்படுகின்றது. இதனால் நாராயணனும் நானே என்பது நிரூபணமாகின்றது. -38-

இதே போல சம்ஹாரம் செய்யும் சிவனும் நானே என்பதினை -

**न मूर्तयोऽष्टौ विषमा न दृष्टिः न भूतिलेपो न गतिर्वृषेण ।**
**न भोगिसङ्गो न च कामभङ्गः तथापि साक्षात्परमः शिवोऽहम् ॥ ३९ ॥**

எனக்கு எட்டுவிதமாத உடல்கள் இல்லை. வேர்வை முதலியவைகளால் உண்டாவதோ, அல்லது நெருப்பு முதலியவைகளால் உண்டாவதோ, அல்லது மனதினால் உண்டாவது என்றோ எனக்கு எந்த வித உடலும் இல்லை. (ஈஷ்வரனுக்கு பிருதிவி, நீர், நெருப்பு, வாயு, ஆகாயம், சூரியன் , சந்திரன் மற்றும்

யஜமானன் என்று பெயருள்ள எட்டு உடல்கள் பிரசித்தம்). அதுபோல வெளி விஷயங்களை கிரஹித்து கொள்வதான சித்த விருத்திகளும் எனக்கு இல்லை (பகவானுக்கு மூன்றாவது கண் அல்லது இந்திரிய சம்பந்தமற்ற பார்வை பிரசித்தம்) எனக்கு பிறப்பு முதலியவைகளுடன் எந்த சம்பந்தமும், கர்வமும் இல்லை (பகவானுக்கு எட்டுவிதமான உடலோடு சம்பந்தமும், விபூதியோடு கூடிய பற்றும் பிரசித்தம்) அதுபோல யாகம் முதலிய சத்கர்மத்தினால் உண்டாகும் தக்ஷிணாயன உத்தராயன முதலிய மார்க்கம் வழியாக செல்லுதல் என்பது எனக்கு இல்லை (பகவானுக்கு விருக்ஷப வாகனத்தில் பவனி பிரசித்தமே) எனக்கு போகிகளோடு எந்த சம்பந்தமும் இல்லை (பகவானோ காமனை அழித்தது பிரசித்தமே) இதுபோன்று உபாதிகளினால் வேற்றுமைகள் இருந்தபோதிலும் நான் ஜீவனில்லை ஆனால் ஜகத்தீஷ்வரனான பிரசித்தமான சிவனே நான். நானும் சிவனும் வேறுவேறல்ல. **சிவம் ஷாந்தம் அத்வைதம்** முதலிய வாக்கியங்களே இதற்கு பிரமாணம் . -39-

இனி மீண்டும் பிறப்பினை அடையாத நிலையை அடைந்ததினையும் , எதனாலும் வரையறுக்கப்படாததினையும் -

**जागृत्सुप्तिस्वपनविपिने गाहमानोऽप्यसङ्गः**

**सत्त्वोत्कर्षात्करणहरिणैर्नेक्षणीयः पराग्भिः ।**

**लीलावृत्ति प्रशमित महामोह मत्तेभजालः**

**कालातीते विलसति पदे स्वात्मकण्ठीरवो नः ॥ ४० ॥**

இந்திரிய வியவகாரங்கள் உண்டாக்கும் விழிப்பு, இந்திரிய வியவகாரங்கள் லயமான தூக்கமோ, மனதின் வியவகாரம் மட்டும் உள்ள கனவோ ஆன பெரும் காட்டினில் பிரவேசித்து இஷ்டம்போல அலைந்து திரிந்தாலும் அவைகளுடன் எந்த சம்பந்தமும் இல்லாததால் நான் அசங்கன், சத்துவத்தின் உத்கர்ஷமான நிலையினால், வியவகாரிக சத்தியத்தினை காட்டிலும் மிகவும் மேன்மையானதான பரமார்த்திக சத்தியமானதால், வியவகாரத்தினில் மட்டும் சம்பந்தப்பட்டுள்ள வெளி மற்றும் உள் இந்திரியங்களான மிருகங்கள் காணுவதும் இயலாது. அதுபோல விழிப்பு நிலையில் உண்டான சிரவணம் முதலிய லீலையினால் உண்டான

சாக்ஷாத்காரத்தினால் நன்றாக அழிக்கப்பட்ட (இடம், காலம் மற்றும் பொருள் ஆகியவற்றுடன் கூடிய) மூல அஞ்ஞானமென்னும் யானைகள். அவற்றை விளையாட்டாக அழிக்கும் சிங்கத்தினை போல இருக்கும் நம்முடைய நரசிம்மர் என்கிற ஆத்ம ரூபியான சிங்கம் எல்லாவற்றினையும் சிக்கவைக்கும் காலத்தின் பிடியில் இல்லாது, தன்னுடைய இயல்பான நிலையான ஆனந்த ஏகரஸ பரமபதத்தில் பிரதிஷ்டையடைந்து பிரகாசிக்கின்றார். -40-

தொடங்கிய ஜீவன்முக்தருடைய பெருமைகளை முடிப்பதாக, அவராலே இந்த ஜகத் தூய்மையடைகின்றது என்பதினை-

**इत्याभिर्भुवनजाड्यहरैः सुगोभिः सत्योज्वलैः श्रुतिसुखैरमृतप्रबोधैः ।**

**आनन्दयन्प्रतिपदं प्रणतान्सभाग्या नाशाः पवित्रयति भानुरिव प्रबुद्धः ॥ ४१ ॥**

ஜீவன் முக்தரான ஞானியானவர் சூரியனை போன்று மூவுலகினையும் அஞ்ஞானம் என்னும் இருட்டினை விலக்கி பரமார்த்தமான சத்தியத்தால் பிரகாசம் செய்கின்றார். குளிரிலிருந்து உண்டாகும் துன்பத்தினை பிரகாசத்தினால் நீங்குவது போல சாஸ்திர வாக்கியத்தினால் உண்டாகும் அனுபவத்தால், மரணமற்ற தன்மையான விழிப்பினை ஒவ்வொரு நாளும் உண்டாக்குவது போல, பிரம்மத்தினை போதிக்கும் அவர், கிரணத்தினை போன்ற வாக்குகளால், பக்தியோடு நமஸ்கரிக்கும் புண்ணியசாலிகளுக்கு அந்த வாக்குகளால் உண்டாகும் சாக்ஷாத்காரத்தினால அனந்தத்தினை கொடுத்து எல்லா திசைகளையும் பவித்ரம் செய்கின்றார். -41-

இதனையே எல்லோரும் முயற்சித்து அடையவேண்டும் என்பதால் அதனை போற்றி கூறுவதாக -

**धन्यः स एव कृतकृत्यतमः समस्तमान्यः स एव कुलमस्य च धन्यधन्यम् ।**

**संन्यस्य कर्मनिगडं श्रुतिसारसौख्ये विन्यस्य चित्तमभयाऽऽत्मनि निर्वृतोयः ॥**

**४२ ॥**

எவர் இந்த பந்த காரணமான லௌகீகம் மற்றும் வைதீக கர்மங்களின் கூட்டத்தினை தீவிர வைராக்கியத்தினால் சந்யாசம் செய்து, விதிபூர்வமாக அதனை விடுத்து, எல்லா ஷ்ருதிகளின் தாத்பர்யத்தினை குருவினை அடைந்து அவரிடம் சிரவணம் செய்து, இரண்டற்ற ஆனந்த ஏகரஸமான பிரம்மத்தில் மனதை நிருத்தி அதனை சாக்ஷாத்கரிப்பதினால் எவர் எப்பொழுதும் சுகித்திருக்கின்றாரோ, அவரே சிறந்தவர். பிரம்மன் முதல் சிறுஜீவன் வரையில் எல்லோராலும் பூஜிக்கதக்கவர். இவருடைய குலம் அஷ்வமேதம் என்னும் யாககங்களை அனுஷ்டிப்பதனால் உண்டாகும் பலனை எந்த முயற்சியும் இன்றியே எளிதாக நிச்சயமாக அடைகின்றது. -42-

ஜீவன்முக்தருடைய விதேக கைவல்யம் பிராப்திக்கும் நிலையினை -

**एवं विहृत्य सुचिरं परिपूर्णकामः कारुण्यपूरपतितोद्धरण प्रवीणः ।**
**प्रारब्धशेषविगमे गतसर्वशोकः स्वाराज्यसौख्यजलधिर्निरुपाधिरास्ते ॥ ४३ ॥**

காரணமில்லாத கருணையினால் சம்சாரத்தினில் தவிக்கும் பாமர ஜனங்களை அதிலிருந்து விடுவிக்க, கரைசேர்க்க தகுதியுள்ள பூர்ண நிலையினை அடைந்த ஜீவன்முக்தர் அவருடைய பிராரப்தம் உள்ள வரையில் இப்படி கூறப்பட்ட முறையில் கருணை செய்து பிராரப்தம் முடிந்த நிலையில் தேகம், இந்திரியம் முதலிய பிராதிபாசத்திலிருந்தும் விடுதலையடைந்து , தானே ஒளிர்கின்ற ஆனந்த ஏகரஸமான தன்னுடைய சுவரூப கடலில் கலக்கின்றார். -43-

எந்தவித மாற்றமும் இல்லாததனால், பரிபூர்ண ஆனந்த சுபாவமானதாலும், மீண்டும் அவர் பிறப்பது கிடையாது என்பதினை-

**नोदेति नाऽस्तमुपयाति न वृद्धिमेति नाऽपक्षयं च भजते निजतेजसेद्धः ।**
**पूर्णः सदैव सहजेन सुखाऽमृतेन निर्लञ्छनः स्फुरतिकोऽपि निजाऽऽत्मचन्द्रः ॥**
**४४ ॥**

சந்திரனை போன்ற உதயமோ, மறைதலோ அடைவதில்லை அதுபோல,

வளர்தலும் தேய்தலும் அடைவதிலலை. தன்னுடைய சுவரூபமான தானே ஒளிர்கின்ற சைதன்ய ரூபமான தேஜசக்தியினால் பிரகாசிக்கின்றதாக சுபாவிகமாக ஏகரஸமான அமிர்தத்தினால் முழுவதும் பூர்ணமாக இருப்பதால், மாயா முதலிய களங்கமும் இல்லாத வாக்கு மனதிற்கு எட்டாத அதனால் வரையறுக்கப்படாத இந்த ஆத்மா என்னும் சந்திரனானது பிரகாசிக்கின்றது. அதிலேயே இருக்கின்றார் என்பதால் அதுவே **சுவாராஜ்யசித்தி**. அதுவே கைவல்யமான பரம புருஷார்த்தமும் ஆகின்றது. -44-

மங்களாசரணம் என்கிற வாழ்த்துப்பாடல் முதலில், நடுவில் மற்றும் முடிவில் அவர் செய்கின்றாரோ அவர் வீர புருஷராகவும், (வீரம்- ஞானம்), ஆயுஷ்மானாகவும் ஆகின்றார். அந்த கிரந்தத்தை படிக்க பெறுபவர்களும், படிப்பிப்பவர்களும் மங்களத்தினை அடைகின்றனர் என்று **பதஞ்சலி** முனிவர் **மஹாபாஷ்யத்தில்** சாஸ்திர வாக்கியத்தினை கூறியிருப்பதால், மக்களின் இடையில் இது பிரசாரம் அடையவும் மேலும் பிரம்மத்தினை வாழ்த்துவதாக மங்களத்தினை -

**विश्वाऽनन्दतुषारसिन्धुरखिलज्ञानस्फुलिङ्गानलः**
**प्रच्छन्नाऽसिलता च कोशकुहरे द्वैतभ्रमच्छेदिनी ।**
**मोहध्वान्तविभाकरः परिलसन्वेदान्तसीमन्तिनी**
**मौलिस्थानमणि । सदा विजयते संविन्मयः पूरुषः ॥ ४५ ॥**

பிரம்மனிலிருந்து சிறுபூச்சி வரையில் உள்ள எல்லா உயிரினங்களும் அனுபவிக்கும் விஷயானந்தமானது. அந்த பிரம்மானந்ததோடு ஒப்பிடுங்கால் மிகவும் சிறியது எவ்வளவு சிறியது என்றால், பனித்துளிக்கு மஹாசமுத்திரத்தை போலவும், ஒரு சிறு நெருப்பு பொறிக்கு காட்டின் நெருப்பினைபோலவும். அதுமட்டுமல்லாமல் பஞ்சகோசத்தினுள்ளே எல்லாபிராணிகளுக்கும் அதனதன் இயல்பாக இருக்கும் த்வைதபிரம்மத்தை (இரட்டை என்ற தவறான அறிவை) அழிப்பதும், அஞ்ஞானம் என்னும் இருட்டினை சூரியனை போன்ற தானே ஒளர்கின்ற ஆத்மாவானது போக்கியபின் இருள் மீண்டும் உண்டாவதிலலை. அதுபோல எல்லா வேதத்தின் முடிவான தத்துவமான உபநிஷத் அதுவே இங்கு

பெண்ணாகவும் அதன் சீமந்தத்திற்கு உண்டானதான மகாவாக்கியத்தின் மணிபோன்று இருப்பதால், எல்லா இடத்திலும் நிறைந்ததாலும், எப்பொழுதும் ஸ்புரணமாக இருப்பதாலும் தானே ஒளிர்கின்ற அதனால் தாரணை செய்யப்பட்ட மணியை போன்று உள்ள ஞானமயமான புருஷனான பரமாத்மா எப்பொழுதும் மேன்மையானவராக இருக்கின்றார். அப்படி அவர் இருப்பதால் அவரைபற்றிய இந்த கிரந்தத்தினை படித்தல் முதலியவைகளை செய்பவர்களும் அப்படிப்பட்ட மேன்மையான நிலையை அடைவார்கள் என்பது நிச்சயம். -45-

இப்படிப்பட்ட குணங்களை உடைய இந்த கிரந்தத்தினை வித்வான்கள் படித்தும், படிப்பித்தும் ஆதரிக்கவேண்டும் என்பதினை -

**शान्त्यादि दिव्यमणिभूषण मण्डितानां वेदान्तवारिधि सुधारस लालसानाम् ।**

**कैवल्यकल्पतरुमूलमुपाश्रितानां स्वाराज्यसिद्धिरियमस्तु मुदे बुधानाम् ॥ ४६ ॥**

சாந்தி முதலிய குணங்களையுடைய அதிகாரிகள் தெய்வத்தினுடைய அனுகிரஹம் என்னும் மணியை தரித்தவர்களாக இருக்கும் வேதாந்தம் என்னும் கடலினில் கடைந்து எடுக்கப்பட்ட சாரமான அமிருதத்தை அருந்த மிகவும் வேட்கையுள்ளவர்கள் மோக்ஷத்தினை கொடுக்கும் கற்பகவிருக்ஷமான குருவினுடைய பாதகமலங்களிலுள்ள பாததூசியை தொழுது, சிரவணம் செய்ய ஆசைக்கொண்டு முறையாக அடைந்து, அந்த பத, வாக்கிய மற்றும் பிரமாண சாஸ்திரங்களில் தேர்ச்சி பெற்ற அதிகாரிகள். எப்பொழுதும் அத்யயனம் மற்றும் பரிசீலனை செய்ய இந்த கிரந்தமானது ஆகட்டும். அதாவது, கைவல்ய கல்பதரு என்கிற விளக்கவுரையான இந்த கிரந்தம் முமுக்க்ஷுகளின் நிரந்தர பரிசீலனைக்கு சிறந்த கரணமாகட்டும் என்று ஏற்கலாம் . -46-

இந்த கிரந்தமானது ஈஸ்வரனின் பிரசாதமானதால் இதில் எந்த தோஷமும் இருப்பது என்பது இயலாது என்பதால். தன்னால் செய்யப்பட்ட சிரமமானது பலனை அடைய இதனை ஈஸ்வரனுக்கு அர்ப்பணம் செய்ய -

**वाक्यपुष्पाञ्जलिः सेयं भक्त्या न्यस्ता पदब्जयोः ।**

धियः प्रेरकयोरस्तु शिवयोः प्रीतिसिद्धये ॥ ४७ ॥

வாக்கிய புஷ்பாஞ்சலியான இந்த சுவராஜ்யசித்தி என்னும் கிரந்தத்தினை புத்தியினை பிரேரிக்கும் சிவாவையின் பாதகமலங்களில் அவர்களின் பிரியத்தினை (கருணையினை) அடையும் பொருட்டு நான் சமர்பிக்கின்றேன். – 47 –

## कैवल्य प्रकरणं सम्पूर्णम्

**- கைவல்யபிரகரணம் முற்றிற்று -**

ईश्वरमरुणाचलं वै नत्वा कृतं कर्तव्यं मया ।
स कारयति यदिदं तदेव भवति प्रकृते ॥

ஈஸ்வரரான ஸ்ரீ அருணாசலரை வணங்கியே என்னால் செய்யப்படவேண்டியதினை செய்தேன். அவர் எதை இப்பொழுது செய்விக்கின்றாரோ அதுவே நடக்கும் இங்கு.

**॥ श्री अरुणाचलार्पणमस्तु ॥**

**-- ஸ்ரீ அருணாசல ஈஸ்வரர்க்கு சமர்பணம் --**